


# திரு அருட்பா

பாலகிருஷ்ண பிள்ளை பதிப்பு

௫-வது புத்தகம்

## வியாககியானப் பகுதி



வெளியிடுவோர்

ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம்

பவழக்காரத் தெரு :: சென்னை

1935

உ

திருச்சிற்றம்பலம்

# திரு அருட்பிரகாச வள்ளலார்

என்னும்

## சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# திரு அருட்பா

## ௩. வியாக்கியானப் பகுதி

இரண்டாம் பதிப்பு

சென்னை

பி.எ., எம். எல்., (அட்வொகேட்)

**ஆ. பாலகிருஷ்ண பிள்ளை அவர்கள்**

சுவாமிகள் தெய்வத் திருக்கரத்தால் எழுதிய
மூல ஏடுகள் சுவாமிகள் அச்சிற் பதிப்பித்த
முதற்பிரதிகள் சுவாமிகளிடம் தொண்டு பூண்டு
அவர்களை அடுத்திருந்த அன்பர்களின் கை எழுத்
துப் பிரதிகள் முதலியவற்றினின்றும் எடுத்து
ஆராய்ந்து தொகுத்துக் குறிப்புக்கள் எழுதியு

இது

சென்னை ஆசிரியர் நூற்பதிப்புக் கழகத்தாரால்
அடக்க விலைப் பதிப்பாக
அச்சிட்டு வெளிப்படுத்தப்பட் டிருக்கிறது.

---

கலியுகாதி௵ ௫0௩௭-ல் நிகழும் யுவ௵
கார்த்திகை௴ ௨௪வ: சன்மார்க்க ஆண்டு ௬௧.
9-12-1935

திருஅருட்பா: வியாக்கியானப் பகுதி

முதற் பதிப்பு ... 9-10-1931

இரண்டாம் பதிப்பு ... 9-12-1935



## எச்சரிக்கை

வருஷக் கணக்கான பெருமுயற்சியாலும் பேருழைப்பாலும் பெருஞ்செலவாலும் எய்திய இப்பதிப்பின் பலப்பல சிறப்பியல்புகளைச் சிலர் கவர்ந்து வருவதை இங்குக் கண்டிக்க வேண்டிய இன்றியமையாமையைக் குறித்துப் பெரு வருத்த முண்டாகிறது. அவர்கள் அவற்றைத் தங்கள் உழைப்பால் அடைவித்ததாகப் பாசாங்கு செய்தும் அவற்றோடு சிற்சில சமயம் தங்கள் சொந்தச் சரக்கைக் கலந்து அவற்றைத் திரிபுபடுத்தியும் பொது ஜனங்களை ஏமாற்றி வருவது மல்லாமல், அதனால் இப்பதிப்பிற்குப் பொருள் நஷ்டத்தை உண்டாக்குகிறார்கள். இந்த இழிவான தூர்ச்செய்கை சாதாரண மனுஷத்தனத்திற்கும் நல்லொழுக்கத்திற்கும் சட்டத்திற்கும் ஒருங்கே விரோதமானது. ஆதலால், இப்பதிப்பின் எல்லா உரிமைகளுக்கும் உரிய இதன் பதிப்பாசிரியர் அவ்வுரிமைகளைக் காப்பாற்றிக்கொள்வதற்கான நடவடிக்கையை வேண்டும்போது எடுத்துக்கொள்வார் என்று இதன் மூலம் எச்சரிக்கை செய்யப்படுகிறது.

---

THE PROGRESSIVE PRINTERS, MADRAS.

# பொருளடக்கம்

# ஆசாரிய ஸ்துதி

எண்சீர் ஆசிரிய விருத்தம்

பராபரம் கோதகலும் அநாமயம் போதநிலை
பகாநலம் வாதமறு சுகோதயம் பாதிதமில்
நிராமயம் காரகம திலாதசஞ் சீவிதம்நல்!
நிராசைகொண் டாருடைய நிகேதனம் சூதமுறல்
வராதஇன் பாரஎனை முனைவில்வந் தேஅருளி
மகாபலம் சேரஅருள் விராவுசெம் பாதநம!
இராமலிங் தார்மனதில் இராதசந் தோஷநம!
இராமலிங் காயநம! இராமலிங் காயநம!

—உபயகலாநிதிப் பெரும்புலவர்

தொழூவூர் ஸ்ரீ வேலாயுத முதலியாரவர்கள் (1867)

---

அன்பெனும் பிடியுள் ளகப்படு மலையே
அன்பெனுங் குடில்புகு மரசே
அன்பெனும் வலைக்குட் படுபரம் பொருளே
அன்பெனுங் கரத்தம ரமுதே
அன்பெனுங் கடத்துள் ளடங்கிடுங் கடலே
அன்பெனு முயிரொளி ரறிவே
அன்பெனு மணுவுள் ளமைந்தபே ரொளியே
அன்புரு வாம்பர சிவமே—

# வியாக்கியானப் பகுதி முன்னுரை

உபய கலாநிதிப் பெரும் புலவராகிய தொழுவூர் ஸ்ரீ வேலாயுத முதலியாரவர்களால் ஆறு திருமுறைகளாக வகுத்திருக்கும் ஸ்ரீ இராமலிங்க சுவாமிகளது திரு அருட்பாக்களை ஒருவாறு அறிந்திருக்கும் நந்தமிழுலகம் ஆன்றோர் நூல்களைச் சார்ந்து ஸ்ரீ சுவாமிகள் இயற்றியருளிய ஒப்புயர்வற்ற வியாக்கியானங்களை இன்னும் போதிய அளவு அறியாதிருக்கிற தென்றே சொல்லலாம். இவ் வறியாமைக் குரிய காரணங்கள் பல வற்றுள் ஒன்று அவ் வியாக்கியானங்களில் சில இப்பகுதியின் முதற்பதிப்பு வரையில் வெளிவராதிருந்தது, அல்லது வெளிவந்தும் இலைமறை காய் போல் அருகித் திரிந்திருந்தது; மற்றொன்று அவற்றைக் கல்வியாளர் ஆராய்ந்து கற்கக்கூடிய வகையில் பதிப்பிக்காதிருந்தது; வேறொன்று அவற்றைத் துருவிப் பார்க்கும் நடுநிலைமை உடையவர்கள் அரிதாக இருந்தது. இனியாவது இவ்வாறாய குறைகள் அனைத்தும் நீங்கி ஒழியும் என்று எண்ணுவதற்கில்லை என்றாலும், ஒருவாறு ஸ்ரீ சுவாமிகளது வியாக்கியானங்களை ஒருங்கு சேர்த்து ஓர் விஷயமாக்கித் தமிழறிஞர்களது கவனத்திற்கும் ஆராய்ச்சிக்கும் உரிய பாத்திர மாக்கவேண்டும் என்னும் விருப்ப முயற்சியை வித்தாகக் கொண்டு விளைந்தது இப்பதிப்பு என்பதை மட்டும் இங்குக் குறித்து வைத்தல் வேண்டற்பாலது. ஆகவே, தமிழறிஞர்

களும் நாட்டின் அறிவை வளர்ப்பதற்கென இலங்கும் யூனிவர்சிட்டியாரும் இவ் வியாக்கியானங்களின்பால் தம்தம் கவனங்களைச் செலுத்தின். அவை தமிழுலகத்திற்கு முன்பின் கண்டறியாத மிகப் பெரியதொரு பயனை அளிக்கும் என்பதில் இவ்வளவும் சந்தேகம் வேண்டுவதில்லை. இஃது எங்ஙனம் என்பது பின்வருவனவற்றால் ஒருவாறு விளக்கமுறும்.

ஸ்ரீ சுவாமிகள் மறந்தும் தாம் ஓர் வியாக்கியான கர்த்தாவாகத் தொழிற்பட விரும்பவில்லை என்பதும், அல்லது இவ் வியாக்கியானங்களைத் தாம் எழுத நேர்ந்த போதாவது அவற்றை முன்னிட்டுத் தம்மை ஓர் வியாக்கியான கர்த்தாவாக அவர்கள் கருதவில்லை என்பதும் அவர்களது வாழ்க்கை லக்ஷியங்களைக் கொண்டு எவரும் எளிதில் அறிந்து கொள்ளலாம்.[1] இவ் வியாக்கியானங்களுள் பெரும்பாலன ஸ்ரீசுவாமிகள் தம்மைச் சிறுபோது தொடங்கி இடைவிடாது சூழ்ந்திருந்த அன்பர்கள் பற்பலரின் பலநாள் வேண்டுகோட்களைத் தொடர்ந்து மறுக்க மனம் வராத ப்ரமதாக்ஷிண்ய நிலையில் அவரவர்பொருட்டு அப்போதப்போது எழுதி உதவியன ஆகும். கோரிய அன்பர்களுக்கு நேர்முகமாக உபதேசித்த வழி இரண்டொன்று வெளிவந்தன போலும்.[2] ஜீவ

1. வசனப்பகுதி முன்னுரை பார்க்க.

2. அவ்வவ் வியாக்கியானங்களின் அடிக் குறிப்புகளைப் பார்க்க.

காருண்ய ஒழுக்கத்திலும் சன்மார்க்க விண்ணப்பங் களிலும் ஆறுந் திருமுறையிலும் வெளிப்படையாகக் காணக் கிடக்கும் அவர்கள் தம் ஆன்மாநுபவ நிலை யின் கூறுகளில் சில பல அவர்களது வாழ்க்கை லக்ஷியமாக இளமை தொட்டு இருந்திருக்கின்றன என்பது இவ் வியாக்கியானங்களை அநுபவித் திருப் வார்க்குப் புலனாகாமற் போகாது. இத்தன்மைத் தான நிரஹங்கார நிலையில் வெளிவந்த இவ் வியாக் கியானங்கள் அதியத்புதமான உண்மை நுட்பங்கள் நிறைந்தனவாக விளங்குவது ஓர் ஆச்சரியமன்று: சிவாநந்தாநுபவ அந்தரங்கத்தைப் பொன்வண்ணத் தந்தாதி உரையிலும், மத சித்தாந்தங்களைக் குறட்பா உரையிலும், தமிழ்மொழியின் ஆன் மார்த்தமான பெருமையைத் தமிழ் உரையிலும், ஸ்ரீ ஞானசம்பந்த மூர்த்திகளின் தனி ஆசாரியத் தன்மையை ஒழிவிலொடுக்க உரையிலும், வேதாக மாதிகளின் எல்லையையும் தத்துவத் தொடக்கமான அநுபவ நிலைகளின் அதிநுட்ப லக்ஷணங்களையும் பெரிய புராண உரையிலும், தமிழ் இலக்கணத்தின் பெறற்கரிய நுட்பத்தைத் தொண்டமண்டல சதக உரையிலும் அவர்கள் விளங்கவைத் திருப்பது காண்க.

அருங் குறிப்புக்களோடு ஒழிவிலொடுக்கத்தை யும், மேற்கோட் செய்யுட்களுடன் தொண்ட மண்டல சதகத்தையும், அரிய ஞான நூலாகிய சின்மய தீபிகையையும் சென்ற நூற்றாண்டிடையே

முதல் முதலாக ஸ்ரீ சுவாமிகள் தெள்ளிதாக அச்சிற் பதிப்பித்தார்களாகலால், அவர்கள் ஓர் வியாக்கியான கர்த்தா என்பது மட்டும் அல்லாமல், தமிழ்நாட்டின் முற்பட்ட பதிப்பாசிரியராகவும் அவர்கள் விளங்குகிறார்கள் என்பது தெரிகிறது.)

(இவ் வியாக்கியானங்கள் ஒவ்வொன்றிலும் அவர்கள் கையாண்டிருக்கும் முறைகள் தனிப்பட்ட வெவ்வேறு சிறப்பு வாய்ந்தனவாக இருக்கின்றன. அக அநுபவத்தைக் கொண்டு, அநுபவிக்கப் பெறாத ஆன்மாநுபவத்தைச் சுட்டி விளங்க வைத்திருப்பது ஒன்று. தமிழ்ச் சித்தர் நூல் வழித்தாய சங்கேத முறையைக் கொண்டு ஒரு குறட்பாவின்கண்ணே வேறுபட்ட மத சித்தாந்தங்கள் பொருந்தியதாகக் காட்டுவது வேறொன்று. எழுத்துக்களைப் பதங்களாக விரித்துப் பொருள்கூறும் வகை மற்றொன்று. எழுத்து சொல் ஓசை ஆகிய இவற்றின் சேர்க்கை முன்பின் முதலிய பலவற்றையும் விவகரித்துப் பொருள் விளங்க வைக்கும் பூரணத்தன்மை வாய்ந்த அரும்பெறல் முறை இன்னுமொன்று. வேதாகமாதிகளை எனினும் எல்லைப்படுத்தி, எல்லைப்படாத ஸ்வாநுபவத்தை விவகாரத்திற்குட்படுத்தி முடிவற்ற ஓர் வகையில் விரித்துக்கூறுவதாக விளங்குவது மற்றும் ஒன்று. கேவலம் தர்க்கவழி நின்று, மாறுபட்ட கொள்கையைப் பல்வகையாலும் பூர்வபக்ஷப்படுத்தித் தம் மதத்தை வலியுறுத்துவது பிறிதொன்று. வேதவேதாந்தங்களிலும் அவற்றின் பாஷ்யங்களி

லும் கரைகண்டவரும், கடுந்துறவில் இக்காலத்தில் அவர்களுக்கு இணையில்லை என்று ஸ்ரீ ரமண மஹரிஷி போன்ற தபசிகளால் போற்றப்பட்டவரும், பொது நன்மையை வளர்ப்பதாகிய ஜீவகாருண்ய ஒழுக்கத்தில் இடையறாது தொழிற்பட்டவரும் ஆகிய வற்கலை ஸ்ரீநாராயண குருநாதரவர்களுக்கு ஸ்ரீசுவாமிகளது ஒழிவிலொடுக்கப் பாயிர விருத்தி மனப்பாடமாக வரும். அதன்கண் கண்ட வியாக்கியான முறையைத் தாம் பயின்ற வடமொழியில் கண்டதேயில்லை என்றும், அங்ஙனம் அதில் இருப்பதாகக் கேட்டதும் இல்லை என்றும் அவர்கள் இதன் பதிப்பாசிரியரிடம் சொல்லி வியந்து மகிழ்ந்தது இன்று கண்டு கேட்டது போல் உளக் காட்சியை உண்டாக்குகிறது. ஸ்ரீ சுவாமிகளது பெரிய புராண உரை உள்ளிட்ட மற்ற வியாக்கியானங்களை அவர்கள் பார்த்ததில்லை போலும். அவற்றையும் அவர்கள் பார்க்கநேரிட்டிருந்தால், அவற்றை எவ்வாறு அவர்கள் போற்றி அநுபவித்திருப்பார்களென்று எண்ணுந்தோறும் ஆராமை உண்டாகிறது.)

(இவ் வியாக்கியானங்களின் நடையோ என்னில்: அது பண்டைய உரையாசிரியர்களின் நடையை ஒட்டி எழுந்ததெனினும், அது ஸ்ரீ சுவாமிகளின் தனி முத்திரையைப் பெறாமலிருக்கவில்லை. ஆனால், அவர்களது வியாக்கியான நடைக்கும் அவர்கள்தம் மற்ற இயல் இசைத் தமிழ் நடைக்கும் வேறுபாடு காணப் படுகிறது. வியாக்கியானங்கள் • பெரும்

பாலும் நூல் வழக்கில் உள்ள சொற்கள் நிறைந்தனவாக இருக்கின்றன. அவர்கள் இவ் வியாக்கியானமொன்றில் கூறுவதுபோல், நூல்வழக்கில் உள்ள இச் சொற்களை எல்லாம் ஏற்புடையன என்று கருதி அவர்கள் வழங்கினார்களில்லை; வேறு சொற்கள் வழக்கின்கண் இன்மையால், இவற்றைக்கொண்டு எடுத்த பொருளை ஒருவாறு விளக்கியதாக அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். ஓர் உரையில் தமிழின் அகத்துறை மொழிகளையும், மற்றொன்றில் சமய சாத்திர மொழிகளையும், பிறி தொன்றில் மந்திர சாஸ்திர பரிபாஷையையும், மற்றுமொன்றில் சைவ சித்தாந்த பரிபாஷையையும், வேறொன்றில் தத்துவ சாஸ்திர பரிபாஷையையும், இன்னுமொன்றில் தர்க்க இலக்கண பரிபாஷையையும் அவர்கள் கையாண்டிருக்கிறார்கள். எனினும், அவர்களுடைய எளிய செவ்விய தீஞ்சொற்கள் ஓரளவு இங்கும் நிலவி இப் பரிபாஷை அனைத்திற்கும் இனிய நடை கற்பிக்கின்றன. ஆதலால், அவர்களது இயல் இசைத் தமிழிலும் வசனத்திலும் கண்ட ஜீவத்தன்மை இங்கும் புலனாகிறது.[3] பழமையுற்றது என்று கருதக்கூடிய இடங்களிலும் அவர்களது ஆன்மாநுபவ விருப்பமான நல்லுணர்ச்சியில் சொற்களும் சொற்கோவைகளும் வாக்கியங்களும் இலக்கிய இலக்கண தர்க்க தத்துவ முறைகளும் முழுகியிருக்கின்றன. அதிநுட்பமான

---

3. வசனப்பகுதி முன்னுரை பார்க்க.

உண்மைகளையும் முடிவற்ற பெரு விஷயங்களையும் அந்தரங்கமான ஸ்வாநுபவத்தையுமேகூட அவர்கள் இரண்டொரு சொல்லால் உருப்படுத்தி விடுகிறார்கள். ஒரு விஷயத்தையே பலப்பல வகையிலும் ஆராய்ந்து, பலதிறப்பட்ட அறிவாளிகளுக்கும் ஒரே சமயத்தில் ஏற்பிக்குமாறு முடிவுபடுத்தி அமைத்து விடுகிறார்கள். ஆகவே, அவர்களது வியாக்கியானம் முழுவதும் பொருட்செறிவுள்ளதும், நுணுகியதும், ஆழ்ந்ததும், எழுத்தெழுத்தாக உண்மையை விளக்குவதும் ஆகும். எடுத்த விஷயம் முதற் பார்வைக்குச் சிறியதாகத் தோற்றினும், வியவகாரத்தில் உன்னதமானதாகவும், முடிவற்ற ஆன்மாநுபவத்தில் பொருத்தம்படச் செய்யப் பெற்றதாகவும் காணப்படுகிறது. இவ் வியாக்கியானங்களின் நடையைக் கவனித்துணர்ந்தவரே ஸ்ரீ சுவாமிகளது நேர்முகமான உபதேசங்கள், திருமுகங்கள், வசனங்கள், இயல்இசைப் பாட்டுக்கள் 4 ஆகியவற்றின் நடையின் பேரழகை உள்ளபடி புலப்படுத்திக் கொள்வார்கள். அந்த நடைகளின் எளிமை எல்லாம் அறியாமை வயத்தான் எழுந்த எளிமையாகாது, கல்வியின் கரைகண்ட காட்சியாளரின் அநுபவ பூர்வமான எளிமையாகிறது. சுவாமிகளது அறிவு ஆன்மாநுபவத்தில் திளைத்திருக்க, அவர்கள்தம் கைமட்டுமே இவைகளை எழு

4. அவ்வப் பகுதிகள் பார்க்க.

தியது என்று கருதினுல்கூட, அது உண்மைக்குப் புறம்பாகாது.[5] )

(இவ் வியாக்கியானங்களிலிருந்து ஸ்ரீ சுவாமிகளது வித்தியா வடிவத்தைச் சித்திரித்துக் கொள்ளலாம். எவ்வெக் கல்வித் துறையில் எவ்வளவெவ்வளவு ஞானம் அவர்கள் வாய்க்கப்பெற்றிருக்கிறார்கள் என்பதை மதிப்பிட்டுக் கொள்வதற்கு இந்நூல் மிகவும் பயன்படும். ஒழிவிலொடுக்க உரையினின்றும் அவர்களது சித்தாந்த ஞானத்தையும், குறட்பா உரையினின்றும் அவர்களது சித்தமார்க்க ஞானத்தையும், தமிழ் உரையினின்றும் அவர்களது மந்திர சாஸ்திர ஞானத்தையும், தொண்டமண்டல சதக உரையினின்றும் அவர்களது இலக்கிய இலக்கண[6] தர்க்க ஞானத்தையும், பெரிய புராண உரையினின்றும் அவர்களது வேதாகம தத்துவாநுபவ ஞானத்தையும் அறிந்துகொள்ளலாம். அவர்கள் அறிவுருபமான இக்காலத்திய மாப்பெரும் சன்மார்க்க இயக்கத் தலைவர் என்பது அவர்கள் வேதாகமாதிகளுக்குஆறுதியிட்டிருப்பதினின்றும் போதரும்.இங்ஙனம் விளங்க வைத்திருக்கும் கேவலம் அறிவுமயமான அச் சன்மார்க்க முடிவை இப் பதிப்பாசிரியர் வேதாகமாதிகளில் தீரப்பயின்று, சைவ வைஷ்ணவ ஆசாரியத்தன்மை எய்தி, நமது தென்னுட்டில் மட்டும் அன்றி வடநாட்டிலும், சென்ற இருபது

5. அநுபந்தத்தில் உள்ள விசார வினுக்கள் பார்க்க.

6. அநுபந்தத்தில் உள்ள இலக்கணப் பத்திரிகையையும் பார்க்க.

முப்பது ஆண்டுகளாகப் புகழ்பெற்று நிற்கும் இரு சநாதன வைதிகப் பெரியார்களிடம் விவரமாகப் படித்துக் காட்டி விண்ணப்பித்துக் கொண்ட போது, அவ்விருவோரும் ஒருவரே போன்று "இது முற்றிலும் சரி!" என்று கூறி வியந்ததன்றி வேறொன்றும் சொல்ல மாட்டாதவர்களாய், ஸ்ரீ சுவாமிகள் ஸ்தாபித்திருக்கும் உண்மையினைக் கண்டு "இன்று கடைத்தேறினேம்" என்று நாத் தழும் பேறப் பன்முறை கூவி, ஸ்ரீ சுவாமி களை வாயார வாழ்த்தினார்கள். வடமொழியி லன்றித் தமிழ் மொழியிலும் உள்ள சாஸ்திரங்களை யும் பாஷ்யங்களையும் பார்த்து அறிவாதரவின்றிச் சோர்வடைந்திருக்கும் நந்தமிழ் நாட்டு விவேகிகள் ஸ்ரீ சுவாமிகளின் இந் நூலினைக் கொண்டு புத்துயிர் பெறுவார்களாக. வேறோரிடத்தில் ஸ்ரீ சுவாமிகள் தாம் சொல்வது முழுதும் தம் அநுபவத்தில் கண்டதும் பிறர் அநுபவத்தில் காணக் கூடியதுமான சுத்த உண்மை என்று வற்புறுத்திய வாறு, இவற்றை அப்படிக் கருதி ஆராய்பவர்கள் அங்ஙனமே சித்திபடக் காண்பது முக்காலும் நிச்சயம். அன்னோர் இந் நூலினைப் பயில்வதற்கு எதிரிடையான—பழக்கத்தில் வந்த—புறத்தடங்கல் களாவது அற்றுப் "படித்துப் பார்ப்போம்" என்ற அளவிலாவது இதைப் படிக்கத் தொடங்கினால், அவர்கள் இடையீடுபட்டு நிற்குமாறில்லை. என்னை? அவர்கள் இதன்கண் சமுத்திரமாகக் கிடக்கும்

பேருண்மைகளின் வயமடைந்து படித் தேகுவா ராதலின்.)

மேற்கூறிய புறத்தடங்கல்கள் அறிவு வளர்ந்து வரும் இக் காலத்தில் ஒருவாறு ஒவ்வொன்முய்க் கழிந்துவருவது சன்மார்க்கிகள் பலரும் அறிந்தது. ஆகையால், இந்நூலினைப் பயின்று பயன்கொள்ளும் காலம் இதுவே யாகும். நெற்றிக் கண்ணைக் காட்டினும் குற்றம் குற்றமே என்று கூறக்கூடிய நாவன்மையும் கல்விச்செருக்கும் கொண்டு இறுமாக்கும் இந் நாட்டில், ஸ்ரீ சுவாமிகளது இலக்கிய இலக்கண தர்க்க தத்துவக் கல்வியையும் ஞானத்தையும் ஆராய்ந்து மதிப்பிட்டு வெளிப்படுத்த விரும்பும் அன்பர்களுக்கு இது நல்ல சமயம். ஸ்ரீ சுவாமிகளுடைய நூல்களைக் குறித்து மனம்போன போக்கில் கேட்பாரற்றுப் பேசுவது இந் நாட்டின் கல்வியாளரின் சமூகத்தினின்றும் அறவே ஒழிய வேண்டுமானல், அதற்கு ஏற்ற மருந்து இவ் வியாக்கியானப் பகுதியில் உள்ளது என்பதை அறிவு நிறைந்த அன்பர்கள் மறக்கக் கூடாது. இங்ஙனம் ஒருவர் ஆராய்ந்துபாராத வரையில், அவர் ஸ்ரீ சுவாமிகளது நூல்களைப் பற்றிக் கூறும் வெற்றுரைகளுக்கு நடுநிலைமையும் மெய்க்கல்வியும் உடைய தமிழன்பர்கள் செவி சாய்த்தல் தவறேயாகு மல்லவா?

ஸ்ரீ சுவாமிகளால் இங்ஙனம் உரைத்து வைக்கப்பட்டிருப்பதில் சப்த சம்பந்தமான நுண்ணிய

இலக்கணமும்,[7] தத்துவத் தொடக்கமான அநுபவ நிலைகளின் பாந்த லக்ஷணங்களும்[8] தனிப்பட்ட கல்வியாளரால் மட்டும் இன்றி யூனிவர்சிட்டியாரா லும் போற்றி ஆராயும் தன்மையனவாக இருக் கின்றன. சென்ற பல வருஷங்களாக அவ்வித் துறைகளில் மேதாவிகள் என்று அழைக்கப்பட் பற்பலர்பால் அவற்றைப் பரிசீலனைசெய்தும், இன்னும் அவற்றிற்குத் திறவுகோல்—பயன்படுத் திக் கொள்ளக்கூடிய வகையில்—கிடைக்காமலே இருக்கிறது. இங்ஙனம் பொலிவெய்தி வதியும் குன்று ஞானக் களஞ்சியங்கள் மேல் நாட்டார்க்குக் கிடைத்திருக்குமானல்—இன்றும் கிடைக்கக்கூடு மானல்—நம் நாட்டுக் கல்விமான்கள் போல் அவர் கள் ஒருபோதும் பராமுகமாக இருந்திருக்கமாட் டார்கள்—இருக்கமாட்டார்கள். நமக்குப் பாரம் பரி யமாக வரும் வித்தையாலும் பழக்க வழக்கத்தாலும் நாம் அறியக்கூடாதிருக்கிற விஷயத்தை நாம் அலட் சியம் செய்வதாக எண்பிப்பதில் கெடுதியும் இழிவும் விளைவது தவிர்த்து, நன்மை எவ்வகையிலும் உண் டாகுமாறில்லை. மேல்நாட்டாரின் கல்விமுறைகளுக்கு நிலைக்களனுக விளங்கும் யூனிவர்சிட்டி இத்தமிழ் நாட்டில் இத்துணை காலமாகத் தொழிற்பட்டிருந் தும், இதுகாறும் அந்நாட்டவரின் நடுநிலைமையான

7. தமிழ் உரையையும் தொண்ட மண்டல சதக உரையையும் பார்க்க.

8. பெரிய புராண உரை பார்க்க.

உண்மை ஆராய்ச்சி முறைகள் இந் நாட்டின் தமிழ் இலக்கிய இலக்கண தத்துவ நூல்கள் சம்பந்தமாகப் பெரும்பாலும் கையாளப்படாது போகின்றன என்பதை ஓர் பெருங்குறை என்று சொல்லாது, வாய் பொத்திக்கொண் டிருப்பதற்கில்லை. சுத்த அறிவு முகங்கொண்டு உழைக்கும் இந்நாளிலாவது யூனிவர்சிட்டியார் ஸ்ரீ சுவாமிகளது இவ் வியாக்கியானங்களைப் பார்த்து வாளாவிருக்கும் வன்னெஞ்சம் உடையவர்களாக இருக்கமாட்டார்கள் என்று நம்பினால், அதுவும் ஓர் தவறுதலாக முடியுமோ ?

இப்பகுதியின் முதற்பதிப்பின்பிரதிகள் எலலாம் செலவாய் இரண்டு வருஷங்களுக்கு மேலாயினும், பாட பேதங்கள் உள்ளிட்ட பல வகையவாய ஆராய்ச்சிக் குறிப்புக்களோடும், அநுபந்தங்களோடும், பெரிய புராண உரையின்கண் கடல்மடை திறந்தீ தென்னப் பொங்கித் ததும்பும் தத்துவத் தொடக்கமான அநுபவ நிலைகளின் லக்ஷணங்களின் விளக்கத்தையும் சேர்த்து அச்சிட்டு வெளிப்படுத்த வேண்டும் என்று இப் பதிப்பாசிரியர் கொண்ட நோக்கத்தால் இவ் இரண்டாம் பதிப்பு வெளிவர இத்தனை நாளாயிற்று. எனினும், பின்னர்க் குறித்த தத்துவ லக்ஷணங்கள் இதுகாறும் போதியபடி விளக்கமுறாமலே இருக்கின்றன. இஃது இப் பதிப்பாசிரியரின் ஊக்கக் குறைவால் நேர்ந்ததன்று. மறறு, இத்தகைய உண்மைநுட்பங்களை

விளக்கக் கூடியவர் நம் நாட்டில் இல்லை என்று வருந்தும்படி மறைவுபட்டிருத்தலே இதற்குக் காரணமாகும். இதன் முதற் பதிப்பில் இது உரைப்பகுதி என்று கூறப்பட்டிருந்தது கொண்டு, இதைச் சுவாமிகளின் வசனநூற் பகுதி என்று பலர் கருதியது தெரிய வந்ததால், அத் தடையைச் சந்தேகத்திற்கு இடமில்லாமல், இதை வியாக்கியானப் பகுதி என்று இவ் இரண்டாம் பதிப்பில் பெயரிட்டிருக்கிறது. இதில் விசேஷமாக "அன்பெனும் பிடியுள்" உள்ளிட்ட ஸ்ரீ சுவாமிகளது மூன்று தனித் திருப்பாடல்களின் ஸ்வரூபத்தையும், அவர்களுடைய திவ்விய திருமுகம் ஒன்றின் ஸ்வரூபத்தையும் சேர்த்திருக்கிறது. சன்மார்க்க சாதகர்களும், தமிழ் மாணாக்கர்களும், வித்துவான்களும் இவ் வியாக்கியானங்களில் கண்ட தமிழ் நடையின் சீரிய வளப்பத்தையும் நயத்தையும் ஆய்ந்து பயில்வதோ டமையாமல், இவற்றின் எப்பாங்கரும் விளங்கும் பெருவாரியான சுத்த உண்மை நுட்பங்களையும் ஆராய்ந்து கற் றுய்வார்களாக.

இப் பகுதியை இவ் வண்ணம் ஒருவாறு ஆராய்ந்து கருதிய கருவிச் சிறப்புக்களில் சிலவற்றோடு கூடியாவது அச்சிட்டு அடக்க விலையில் வெளிப்படுத்துவதில் எனக்குத் துணை புரிந்த உண்மை நேயர்களின் விவரங்கள் இவ் அடக்க விலைப் பதிப்பின் வரலாற்றில் உரிய காலத்தில் வெளிவரும். அவர்கள்பால் எனக்குள்ள அன்பை

யும் நன்றியறிதலையும் இங்குத் தெரிவித்துக்கொள்ளு கிறேன். சுபம். சுபம். சுபம்.

ஆ. பா.

---

# உரிமை உரை

மெய்க் கல்வியையே தோழமையாக் கொண்டவரும் ஞானத்தின் வரம்பின்மையைக் கண்டு தம்முள் அடங்கியிருப்பவரும், உயிர்கள்பால் செறிந்த அன்புடையவரும், தம்மின் மெலிந்தாராய எம்போலியர்க்கு இடையறுத அறிவாதர வளித்தலில் உவப்புடையவரும் ஆகிய நந்திருவாளர் அவர்களோடு இளம்போதே என்னைச் சேர்ப்பித்ததும், எம் பழம் பிறவிகளின் தொடர்பென்று தெளியுமாறு எங்களூடே நிலபெற்றிருப்பதுமான ஓர் நட்பின் அறிகுறியாக எனது இவ் எளிய திருத்தொண்டு என்ஞான்றும் நிலவுறுமாக.

# திரு அருட்பா மகிமை

நேரிசை வெண்பா

தண்ணீர் விளக்கெரித்த தன்மைபோன் மாந்தர்கள்தம
உண்ணீர் சிவம்விளங்க ஓங்குவிக்கும்—கண்மணியாம்
நங்கள் இராமலிங்கன் நல்லஅருட் பாமுறையைத்
துங்கமுற மாணு தொழு.

—மதுரைத் திருஞான சம்பந்த சுவாமிகள் ஆதீனம்

ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் (1867).

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திரு அருட்பா



## ௧. வியாக்கியானப் பகுதி



### ௧. பொன்வண்ணத் தந்தாதி உரை



*பாசுரம்*

*கட்டளைக் கலித்துறை*

வேதியன் பாதம் பணிந்தேன்
  பணிந்துமெய்ஞ் ஞானமென்னுஞ்
சோதியென் பாலுற வுற்றுநின்
  றேற்கின்று தோட்டிதுவே
நீதியென் றன்செல்வ மாவதென்
  றென்மே னினைப்புவண்டா
ரோதிநின் பொல்வகைத் தேயிரு
  பாலு மொழித்ததுவே.[1]

1. சேரமான் பெருமாணயனார் பொன்வண்ணத் தந்தாதி, உஉ-ம் பாசுரம்.

வியாக்கியானம்[2]

வேதியன்—சத்தார்த்த லக்ஷியனாகிய இறைவனது[3]
பாதம்—திருவடிகளை
பணிந்தேன்—வணங்கினேன்.
பணிந்து—பணிந்து (திருவருட் சமுகத்தில் நின்ற யான் அவனால் கடைக்கணிக்கப் பெற்றதனால்)
மெய்ஞ்ஞான மென்னுஞ் சோதி—மெய்யறி வென்னும் இயற்கை விளக்கமாகிய அவ் விறைவனது ஆண்பால் வடிவம் [சோதி யென்பது சோதிப்பா லெனக் கொளற்பாலது.]
என்பா லுற—ஆன்ம சத்தி விளக்கமாகிய வெனது பெண்பாலிற் கலக்க
உற்று நின்றேன்—ஐக்கியானுபவம் பெற்று நின்றேன்.
(நின்றேற்)கு—அங்ஙனம் நின்ற வென்னை யிறைவன் மீட்டுங் கடைக்கணித்து

---

2. இதற்குக் கிடைத்த பிரதி ஒன்றில் இவ்வியாக்கியானத்தின் தலைப்பில் "சைவ சித்தாந்தப் பெரு நெறியோரால் வழங்கும் திருமுறை பன்னிரண்டனுள் பதினோராந்திருமுறைப் பிரபந்தங்களி லொன்றாகிய பொன் வண்ணத் தந்தாதி உஉ-ம் பாசுரத்திற்குத் திருவருட் பிரகாச வள்ளலா ரென்னும் சிதம்பரம் இராமலிங்க பிள்ளை அவர்களால் வரைந்துள்ள வியாக்கியானம்" என்றெழுதியிருக்கிறது.

இவ்வுரை இப்பகுதியின் முதற்பதிப்பு மூலம் (1931) முதல் முதல் வெளியிடப் பட்டது.

3. இறைவனது—கடவுளது

இன்று தோட்டு—இது பொழுது தொடங்கி
இதுவே—இவ் வநுபவ வொழுக்கமே
நீதி யென்றான்—நீ யநுபவிக்கின்ற வொழுக்க மாகுக வென்று திருவாய்மலர்ந் தருளினன். (யானும்)
செல்வ மாவ தென்றேன்—அடைதற் குரிய திருவருட் செல்வ மிங்ஙன மாவ தென் றங்ஙனமே நின்றனன்.
மேல்—அதன் பின்னர்
நினைப்பு—இரு வகைப் பாலினுங் கவர்பட நின்ற வெனது நினைவு
வண் டா ரோதி—வண்டு மொய்க்கின்ற இயற்கை மணம் வீசும் அளகத்தை யுடையாய்
நின்போல் வகைத்து ஏ—இறைவனது[4] அநுபவ விருப்பம் பற்றி வந்த தாப விசேடத்தாற் பெண் பாற் குரிய நாணத்தை விடுத்துப் பலருங் கேட்கத் "தூது செல்லுதி" யென்று என்னை வருந்தி யேவுதலால் ஊக்க முதலிய வுடைய ஆண்பாற் றன்மை அவை யின்றிய நின் பெண்பாற் றன்மை யிற் கலக்கப்பட் டிருபாலு மொழிந்து நின்ற நின் வண்ணம் போன்றதாய்
இரு பாலும்—ஆண்பால் பெண்பால் என்னும் இரு பாலினிடத்துஞ் செல்லுகை
ஒழித்தது ஏ—நீங்கிற்று.
ஆகலில் நீயும் புறத்தே என்னை யொப்பாயாக.

---

4. இறைவனது—தலைவனது.

இது சிவாநந்தத்தை அகத்தே யநுபவித்த தோழி புறத்தநுபவம் விரும்பிய தலைவியை அறிவுறுத்தியது.[5]

க. போன் வண்ணத் தந்தாதி உரை

முற்றிற்று.

---

5. இதில் பேரின்பத்தின் அபே தாநுபவத்தைச் சிற்றின்ப வேட்கை விளைவினைச் சுட்டி விளங்க வைத்திருக்கும் பேரழகைக் கண்டுணர்க.

# உ. வேதாந்த தேசிகர் குறட்பா உரை

குறட்பா

மூன்றி லொருமூன்று மூவிரண்டு மூந்நான்குந்
தோன்றத் தொலையுந் துயர்.[6]

உரை[7]

(க. பௌராணிக மத சித்தாந்தம்)

மூன்றில்—பறவையில், கருடனில்.[8]

---

6. தேசிகர் பிரபந்தம் அச்சிட்டிருக்கிறதில் இது காண வில்லை. இன்னும் அச்சுக்கு வராதிருக்கும் அவரது பாசு ரங்களில் இஃ தொன் றெனக் கொள்க.

7. இஃது உபதேசம் விரும்பிய ஓர் வடகலை வைஷ்ணவர்க்குச் சுவாமிகள் கூறியவழி வந்ததாகத் தெரிகிறது. இதற்காகக் கிடைத்த பிரதிகள் மூன்று. உரையின் தலைப்பில் ஒன்றில் "திருவறங்கம். விசிட்டாத் துவித சித்தாந்தம்" என்றும், மற்றொன்றில் "விஷ்ணு பரமான இந்தக் குறள் வெண்பாவுக்குத் திருவருட் பிர காசப் பெருமாளால் விசிஷ்டாத்வைதமாயும் சிவாத்வைத மாயும் பௌராணிக சித்தாந்தமாயும் செய்த வியாக்கி யானம்" என்றும் எழுதியிருக்கிறது.

இவ்வுரை ஸ்ரீ ச. மு. கந்தசாமிபிள்ளை அவர்கள் பதிப்பின் மூலம் (1924) முதல் முதல் வெளிவந்தது.

8. முற்றுப்புள்ளி இங்கு வாக்கிய முடிவைக் குறிப்ப தற்காக அன்றி, எடுத்துக்கொண்ட சொல்லின் உரை இடையீடுபெட்ட விடத்து அதன் முடிவைக் குறிப்பதற் காகக் கையாளப்பட்டிருக்கிறது. இது போன்ற மற்ற இடங்களிலும் இங்ஙனம் கொள்க.

ஒரு மூன்று—திரிமூர்த்தி சொரூபராகிய எம்பெருமான், விண்டு.

மூ விரண்டு—சு: ஷட்குணம், ஷாட்குண்ணிய பரிபூரணராய்—கன்னி, திருமக ளென்னும் பிராட்டியாரோடு.

மூந் நான்கு—கஉ, துவாதச அடியார்க ளாகிய ஆழ்வாராதிகள் சூழ.

(மூன்ஞன்கு)—ரு, ஸ்ரீமத் பஞ்சாயுத பாணியாக.

தோன்ற—சேவை சாதிக்க

தொலையுந் துயர்—துன்பம் நீங்கும்.

இதன் கருத்து—பறவை யென்னும் கருடாழ்வான் மீது, திரிமூர்த்தி சொரூபராகிய எம்பெருமான், ஷாட்குண்ணிய பரிபூரணராய்த் திருமகளென்னும் பிராட்டியாரோடு; துவாதச அடியார்களாகிய ஆழ்வாராதிகள் சூழ ஸ்ரீமத் பஞ்சாயுத பாணியாக, எழுந்தருளி கல்யாண குணத்துடன் சேவை சாதிக்க, நமது துன்பங்கள் தொலையும்.

அன்றி

(உ. அத்துவைதம்)

மூன்றில்—காரணம் சூக்குமம் தூலம் என்கிற மூன்று தேகத்தினுள் காரண தேகத்தில்

ஒரு மூன்று—ஜடி தேகத்திற் குரிய மூன்று தத்துவங்களின் சொரூப ரூப சுபாவங்களும்

மூ விரண்டு—சூக்கும தேகத்திற் குரிய ஆறு தத்துவங்களின் சொரூப ரூப சுபாவங்களும்

மூந் நான்கு—ஸ்தூல தேகத்திற் குரிய பன்னிரண்டு தத்துவங்களின் சொரூப ரூப சுபாவங்களும்
தோன்ற—ஐயந் திரிபு மயக்க மின்றித் தோன்ற—அத் தருணத்தே
துயர்—பிறவித் துன்பம்
தொலையும்—நீங்கும்.

அன்றி

(௩. சிவாத்துவைதம்)

ஒருமூன்று மூவிரண்டு மூந்நான்கு—௩, ௬, ௧௨: இருபத்தொன்றினை.
மூன்றில்—மூன்றில் கொடுக்க வந்த தொகை யாகிய ௭, காலம் நியதி கலை புருடன் மாயை ராகம் வித்தை யென்னும் ஏழு தத்துவங்களின் சொரூப ரூப சுபாவங்களும்.
தோன்ற—சந்தேகம் விபரீதம் அஞ்ஞானம் அறத் தோன்ற
தொலையுந் துயர்—துயர் தொலையும்.

அன்றி

(௪. விசிஷ்டாத்துவைதம்)

மூன்றில்—சித்து அசித்து சிதசித்து என்கின்ற தத்துவத் திரயங்களில்
ஒரு மூன்று—சித்தினிடத்து இச்சை அறிவு தொழில் என்கின்ற மூன்று குணங்களும்
மூ விரண்டு—அசித்தினிடத்து மயக்கமின்மை திரிபின்மை ஐயமின்மை விசித்திரமின்மை அசுத்த

மின்மை விகாரமின்மை என்கின்ற ஆறு குணங்களும்

மூங் நான்கு—சிதசித்தினிடத்து அறிவு கருணை அன்பு வாய்மை நிராசை தூய்மை நிறைவு ஒழுக்கம் பொறை செப்பம் சால்பு மறதியின்மை என்கின்ற பன்னிரண்டு குணங்களும்

(ஆகக்கூடி சித்து அசித்து சிதசித்து என்னும் மூன்றின் குணங்களாகிய இருபத்தொன்றின் சொரூப ரூப சுபாவங்கள் ஐயந் திரிபு மயக்கமின்றி)

தோன்ற—விளங்க

துயர் தொலையும்—துன்ப மாகிய சகல கேவலங்கள் நீங்கும், சுத்தனுவோம்.[9]

உ. வேதாந்த தேசிகர் நுறட்பா உரை முற்றிற்று.

---

9. ஸ்ரீ சுவாமிகளால் கையாளப்பட்டிருக்கும் இவ் வியாக்கியான முறையில் திருமந்திரம் உட்பட்ட தமிழ்ச் சித்தர் நூல்கள் பொருள் கொள்ளப்பட்டு அநுபவமாகி வருவதை அவ் வநுபவிகளின்பால் தொண்டு பூண் டுணர்க.

## ௩. தமிழ் என்பதன் உரை[10]

தமிழ் என்பது த்—அ—ம்—இ—ழ் என்னும் ஐந்து அலகு நிலையுடைத்து. த், ம், ழ்: ஜடசித்கலை. அ, இ: சித் கலை.

அ அகண்டாகார சித்தை விளக்கும் ஓங்கார பஞ்சாக்கரத்துள் பதிநிலை யக்கரமாம்.

இ பதியை விட்டு நீங்காத சித்தை விளக்கும் வியவகாரத்தால் அனந்தாகார வியஷ்டி பேதங் காட்டும் ஜீவ சித்கலை யக்கரமாம்.

---

10. இது ஸ்ரீ சுவாமிகள் சென்னையிலிருந்த போது அளவளாவ நேர்ந்த அக்காலத்திய ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகளது "சம்ஸ்கிருதமே மாத்ரு பாஷை" என்ற அபிப்பிராயத்தைத் தழுவி "ஆயின் தமிழ் பித்ரு பாஷை" என்று விவகரித்ததின் சுருக்கம் எனத் தெரிகிறது.

இது முதல் முதலாக 21-8-1897-ல் "உண்மை விளக்கம்" அல்லது "சித்தாந்த தீபிகை" என்னும் மாதாந்தப் பத்திரிகையில் "தமிழ். ஸ்ரீ இராமலிங்க சுவாமிகளால் எழுதப் பட்டது" என்னும் தலைப்போடு அச்சிடப்பட்டிருக்கிறது. பின்னர் 1913-ம் ௵ ஜூலைமாதச் சித்தாந்தப் பத்திரிகையிலும், பிறகு வடலூர் ஸ்ரீ ஊ. ப. பாலசுப்பிரமணிய சிவாச்சாரியரவர்களால் தனித்தாளாகவும் வெளியிடப்பட்டிருக்கிறது. ஸ்ரீ ச. மு. கந்தசாமி பிள்ளை அவர்கள் பதிப்பிலும் (1924) இது காணப்படுகிறது.

இதற்கு எவ்வித கை எழுத்துப் பிரதியும் இதுவரையில் கிடைக்கவில்லை.

பதி சிதாத்ம கலைகளுக் காதாரமாகி உயிரினுக் குடலை யொத்துக் குறிக்கப்படும் த், ம், ழ் எழுத்துக் களுக் குரை :

த் ஏழாவது மெய் ;

ம் பத்தாவதாகும் ;

ழ் கரு-வது இயற்கை யுண்மைச் சிறப்பிய லக்கரமாம்.

ஐந் தலகு நிலையும் உபய கலை நிலையும் மூன்று மெய் நிலையும் அமைந்துள்ளதும், சம்பு பக்ஷத்தாரால் அனாதியாய்—சுத்த சித்தாந்த ஆரிஷ ரீதிப்படி கடவுள் அருளாணையால்—கற்பிக்கப்பட்டதும், எப் பாஷைக ளுக்கும் பிதுர் பாஷை யென்று ஆன்றோர்களால் கொண்டாடப்பட்டதும், இனிமை யென்று நிருத்தம் சித்திக்கப்பெற்றுள்ளது மான தமிழ் என்னும் இயற்கை யுண்மைச் சிறப்பியல் மொழிக்குச் சுத்த சித்தாந்த பத உரை :—

த்—அ : தத்வரூ பாதி சிவ போ காந்தமான தச காரிய இயற்கை யுண்மைக் கட்டளை நிலையில், முன் அலகு நிலைப் பொருள் கூறிய விடத்துக் குறித்த ஏழா வது நிலையாகிய த் என்பது சிவ ரூப இயற்கை யுண் மைக் கட்டளையாம். அ அகண்டாகார சித்கலா ரூப ஓங்காரத் துட்பொருட் பிரதம விலக்கிய வியக்தி யக்க ரம். பன்னீருயிர் நிலையிற் றலையாய முத லக்கர மாத லில், அதுவே பிரமாதி பரசி வாந்த நவ நிலைக்கும் அனாதி யாதி காரணமா யுள்ள இயற்கை யுண்மைப் பரி

பூரணப் பொருளிலக்காம்.[11]என்னவே, சிவ ரூப மாகும் தகாரகாசத்தில் சுத்த சிவ மாகும் அருட் ஜோதி யிணைந் துள்ள பூரணானந்த ஸ்வரூப பரபதி வியக்த மாயிற்று.

ம்—இ: சங்கார ப்ரணவ மாகிய மகாரம் முக் தான்மாக்களுக்கு ஒளி வண்ணச் சதானந்த மாயும் பெத்தான்மாக்களுக்கு இருள் வண்ண மலரூப மாயும் இருந்து, கற்பாந்தப் பிரளய முடிவின் சிருஷ்டி திதி யாதிகளில் சிதான்ம சக்தியாகிய ஜீவனுக்கு அதிகாண மாகவும் முற்குறித்த பத்தாவது நிலயமாகிய ஆன்மா தாரமாகியு[12] முள்ளதெனப் பொருளாம். இ—பன்னீ ருயிர் நிலைகளில் மூன்றும் நிலை யுயிராகிய இகாரம் திரி கலா ஆன்ம வருக்கத்தில் அபரமாகிய சகலாகலரையும் பரமாகிய பிரளயாகலரையும் கீழ்ப்படுத்தி அவ்விரு கூட் டத்தாருக்கும் மேற்பட்டு நின்ற சுத்த விஞ்ஞானகல ராகிய சிதாத்மாக்களைச் சுட்டுகின்றதாம். என்னவே, ஆதார ஆதேயக் கூட்டுறவால் என்றுந் தோன்றி விளங்கும் சிதான்ம வருக்கங்கள் பரபதி லக்ஷியமாகிய பூரணானந்தத்திற்கு அநுபவிகளாக வுரியவர்களெனக் குறிக் கொள்ளல் வேண்டும்.

ழ்: இந்தச் சிறப்பிய லக்கரம் பதினெண் மெய் களில் பக்ஷ முடியின் எண் குறிப்பில் நின்று, சிவயோக பூமியாகிய பாத கண்டத்தில் பௌரா ணிக தத்துவத்தாற் குறிக்கப்பட்ட ஐம்பத்தாறு

11. பரிபூரணப் பொருளிலக்காம்-பிரதிபேதம் (1913) இனி, பிரதிபேதம் "பி - ம்" என்று குறிக்கப்படும்.

12. பத்தாவது நிலயமாகியு முள்ளது—பி-ம் (1913)

தேசங்களுள் சுதேசந் தவிர மற்ற ஐம்பத்தைந்து தேச பாஷைகளிலு மில்லாததாயும் பதினெண் ணிலமாகக் குறிக்கப்பட்ட செந்தமிழ் கொடுந்தமிழ் என்னும் இருமைக்கும் ஒற்றுமை யுரிமையாயும், முத்துறைத் தமிழுக்குள் முதன்மைத் துறையானதும் இருக்கு யஜுர் சாமமென்னும் சமஸ்கிருத வேதத் திரயப் பொருள் அநுபவத்தை யெளிதில் கற்றுணர்ந்து தெளிந்து அநுபவித்தற்குப் பரமேசுரனது திருவருளைப் பஞ்சாக்ஷர முத்தொழிற் காரியமான பஞ்ச தசாக்கரியால் பிரத்தியக்ஷாநுபவம் சித்திக்கச் செய்யும் நிலயமானதும் ஸ்ரீ மணிவாசகர் சம்பந்தர் நாவரையர் சுந்தரர் திருமூலர் முதலிய மகா புருஷர்களால் சாத்திர தோத்திரங்களாக அருளிச்செய்யப்பட் டிருக்கும் திருவாசகம் தேவாரம் திருமந்திரம் என்னும் பரமார்த்த ரகசியங்களை யுடையதும்—பலநாள் நைஷ்டிக அதிகாரணம் பூண்டு போதகாசாரியர் சந்நிதியில் தாழ்ந்து சக பாடிகளோடு சூழ்ந்து சுர ஒலி பேதங்களைத் தேர்ந்து உழைப்பெடுத்து ஓதினாலும் பாடமாவதற்கு அருமையாயும் பாடமானாலும் பாஷியம் வியாக்கியானம் டீக்கா டுக்கா டிப்பணி முதலிய உரைகோள் கருவிகளைப் பொருள் கொள்ளத் தேட வேண்டியதாயும் அவ்வவைகளையும் தேடிக் கைவரினும் அக்கருவிகளால் போதகம் பெறவேண்டியதற்குப் பாஷியகாரர்கள் வியாக்கியான கர்த்தர்கள் டீக்கா வல்லபர்கள் டுக்கா சூசகர்கள் முதலிய போதக உப்போத காசாரியர்கள் கிட்டுவது அரு

மையில் அருமையாயும் இருக்கிற ஆரியம் மகாராட்டிரம் ஆந்திரம் என்ற பற்பல பாஷைகளைப் போலாகாமல்— பெரும்பாலும்கற்பதற்கு எண்ணளவு சுருக்கமாயும் ஒலி யிலேசாயும் கூட்டென்னுஞ் சந்தி[13] அதிசுலபமாயும் எழுதவும் கவிசெய்யவும் மிக நேர்மையாயும் அக்ஷர ஆரவாரம் சொல்லாடம்பரம்[14] முதலிய பெண்மை அலங் கார மின்றி எப்பாஷையின் சந்தசுகளையும் தன் பாஷை யுள்ளடக்கி ஆளுகையால் ஆண்டன்மையைப் பொருந் தியது மான[15] தற்பாஷைக்கே அமைவுற்ற ழ் ற் ன் என்னும் முடி நடு அடி சிறப்பிய லக்காங்களில் முடிநிலை இன்பாநுபவ சுத்த மோனாதீதத்தைச்[16] சுட் டறச் சுட்டும் இயற்கை யுண்மைத் தனித் தலைமைப்[17] பெருமைச் சிறப்பிய லொலியாம்.[18]

உரை கூறிப் போந்த சுத்த சித்தாந்த ஆரிட ரீதி முப்பத வுரைப் பொழிப்பு: மருளியற்கை மலஇருளைப் பரிபாக சத்தியால் அருளொளி யாக்கி, அதற்குள் ளீடான சிதாத்ம சிற்கலாசத்தி யென்னும் சுத்த ஆன் மாவானது[19] தகா ககன நடன அருட்பெருஞ் ஜோதி

13. கூட்டமென்னுஞ் சந்தி—பி-ம் (1913)

14. "சொல்லாடம்பரம்" என்பதற்குப் பின் "போது போக்கு பெரு மறைப்பு" என்றும், இவ்வுரை யின் இறுதியில் "ஒருவாறு முற்றும்" என்றும் 1924-ம் ஆ-ப் பதிப்பில் காணப்படுகின்றன.

15. பொருந்தியதான—பி-ம் (1897)

16. மோனாதீனத்தை—பி-ம் (1897)

17. தனித் தகமை—பி-ம் (1897)

யென்னுஞ் சுத்த சிவானந்த பூரணத்தை சுத்த மோனு தீத வியலால் அநுபவிக்கும் இயற்கை யுண்மையே தமிழ் என்னும் சொற்பொருள் சுட்டினவாறு காண்க.

இதன் கருத்து யாதெனில்: தமிழ்ப் பாஷையே அதி சுலபமாகச் சுத்த சிவாநுபூதியைக் கொடுக்கு மென்பதாம்[20].

௩. தமிழ் என்பதன் உரை முற்றிற்று.

---

18. இந்தப் பத்தியின் வாக்கிய அமைப்பைப் பின் வருமாறு கொண்டு ஒருவாறு பொருள் கொள்க.

(i) பாடமாவதற்கு அருமையாயும் தேடவேண்டிய தாயும் கிட்டுவது அருமையாயும் இருக்கிற பற்பல பாஷை களை—என்று கூட்டுக.

(ii) துறையானதும் நிலயமானதும் ரகசியங்களை உடையதும் பற்பல பாஷைகளைப் போலாகாமல் ஆயும் ஆயும் ஆயும் ஆயும் இன்றிப் பொருந்தியதுமான தற் பாஷைக்கே—என்று கூட்டுக.

(iii) இல்லாததாயும் உரிமையாயும் தற்பாஷைக்கே அமைவுற்ற ழ், ற், ன்—என்று கூட்டுக.

(iv) இந்தச் சிறப்பிய லக்கரம் நின்று ழ், ற், ன் என் னும் முடி நடு அடி சிறப்பிய லக்கரங்களில் முடிநிலை மோனு தீதத்தைச் சுட்டும் ஒலியாம்—என்று கூட்டுக.

19. "சுத்த ஆன்மாவை" என்ற பாடமே எல்லா வெளியீடுகளிலும் காணப்படுகிறது. அங்ஙனம் கொள்வார் கொள்க.

20. 9-வது அடிக்குறிப்பைப் பார்க்க. இங்கும் அங்ஙனம் கொள்க.

தமிழ் மொழியின் ஆன்மாநுபவ சகாயமான தனிச் சிறப்பினை ஸ்ரீ சுவாமிகளது சத்தியப் பெரு விண்ணப்பத் திலும் காணலாம். வசனப் பகுதி, 2-ம் பதிப்பு, 208-ம் பக்கம் பார்க்க.

# ச. ஒழிவிலோடுக்க உரை

## 1. ஒழிவிலோடுக்கப் பாயிர விருத்தி[21]

### சிறப்புப் பாயிரம்

*நேரிசை வெண்பா*

**வள்ளல் குருராயன் வாதுவேன்ற சம்பந்தன்
வள்ளன்மலர்த் தாடலைமேல் வைத்துரைத்தா-னுள்ளத்
தழிவிலடுக் குந்தேனை யன்பரெலா முண்ண
வொழிவி லோடுக்கநூ லோர்ந்து.**

இச் செய்யுள் கருதிற் றியாதோ வெனின், இந் நூன்முகத் தாசிரியர் பெயர் முதலியவற்றைக் குறித்து நிற்றலிற் சிறப்புப் பாயிர வொழுக்க முணர்த்தல் கருதிற் றென்க.

வள்ளல் குருராயன் வாதுவேன்ற சம்பந்தன் - வள்ளன்மலர்த் தாடலைமேல் வைத்து என்பது : வள்ளலா ரென்னுந் திருப்பெயருடையவர், ஞானசாரிய

---

21. இப்பாயிர உரையும் பின்வரும் தெளி சொற் பொருள் முதலிய உரைக் குறிப்புக்களும் ஸ்ரீ சுவாமிகள் ஒழிவிலொடுக்கத்தை முதல் முதலாக 1851-ம் ஆு பரி சோதித்து அச்சிட்டபோது செய்தருளியன வாகும். விவ ரங்களுக்கு அநுபந்தம் பார்க்க.

இவை காஞ்சீபுரம் வீராசாமி முதலியார் குமாரர் ஸ்ரீ திருவேங்கட முதலியார் அவர்களது தாரண (1884) வருஷப் பதிப்பிலும், ஸ்ரீ எஸ். அனவரத விநாயகம் பிள்ளை (எம்.ஏ.,எல்.டி.) அவர்களது 1906-ம் வருஷப் பதிப்பிலும் அச்சிடப்பட் டிருக்கின்றன.

நிருபாகிச் சமையவாதிகள் தருக்கச் செருக்குகள் பிற்பட்டொழியப் போருணெறியான் வெற்றிகொண்டு சீகாழி யென்னுந் திருநகர்க்கண்ணே மெய்ந்நெறி விளங்க வீற்றிருந்தருளிய திருஞானசம்பந்தப் பிள்ளையாரது வள்ளற்றன்மையுடைய மலர்போலுந் திருவடிகளைத் தமது நன்முடிக்கண் ஓர் பொன் முடியாக அணிந்து.

ஓர்ந்து - உள்ளத் - தழிவிலடுக் குந்தேனை யன்பரேலா முண்ண - வொழிவி லொடுக்கநூ லுரைத்தான் என்பது : அத் திருவடிகளின் அருட் டுணையால் தத்துவங்க ளனைத்துஞ் சடமென் ஞோர்ந் துணர்ந்து அவற்றைக் கடந்து தற்காட்சியோடு திருவருட்காட்சியுஞ் செய்து, அங்ஙனம் வாதனையா னசைந்தெழும் போதந் தோற்றாது அதனை யத் திருவருளொளியி னடக்கி ஆண்டு, மேன்மேலு மெழாநின்ற சிவாநந்தத் தேனைத் தாம் அனுபவஞ் செய்தவாறு அதன்கண் அன்புள்ள பக்குவருஞ் செய்தற்பொருட்டு, அச் சிவாநந் தாநுபவ அந்தரங்க மெல்லாம் வெளிப்பட்டு விளங்க, ஒழிவி லொடுக்க மென்று ஓர் உபதேச முறையை யுரைத்தருளினர் என்றவாறு.

வள்ளல் என்னும் பெயர் ஆசிரியர்க்குத் தாம் முன்னிருந்த கிரியாசாரிய நிலைக்கண் அவ் வாசாரிய மரபின் வழித்தாய் வந்த காரண வபிடேகச் சிறப்புப் பெயரென்க. அல்லதூஉம், பின்னர் ஞானாசாரிய நிலைக்கண் தம தருண்ஞான நோக்கானியைந்த கண்ணுடைய

வென்னுங் காரண விசேடண மேற்கொண்டு நின்ற இவ் வள்ள லென்னும் பெயர் ஈண் டவ் விசேடண மிசை யெச்ச நிலையி னிற்ப நின்ற தெனினும் அமையு மென்க.

இஃது வினை பண்பு முதலிய வடுத்த தொகை நிலைச் சொற்றொட ராகாது தொகா நிலையாய்த் தனைத் தொடர் பயனிலை யண்மைப் பொருளுணர்ச்சி யின்றி யிடையிட்டு நிற்கத் தான் செய்யுண் முதற்கண் தனித் திருந்தமையின் ஆற்ற லின்றாலோ வெனின், அற் றன்று: கொடைமடங் குறித்த குணங் காரணமாக வந்த இவ் வள்ள லெனும் பெயர் தன் னுறுப்புகளுட் கொடை குணம் புக ழழகு வள மென்னு நல்வகை குறித்த பல்பொருட் பகுதியாய வண்மை யென்னு முத லுறுப்பான் ஆசிரியர்க் குளவாய அக் கொடை முதலிய அருட் குணங்களைக் குறிப்பிற் புலப்பட விரித் தலிற் பொரு ளாற்றல் உண் டென்க. அல்லதூஉம், இப் பெயர் உயர் பொருட் கிடனாய் உடனிலைக் கூட் டாய் ஒரு நெறியசைத்தாய் ஓரினந் தழுவிப் பல்வகைக் குறிப்பிற் படர்ந்து முற்றியையு வண்ணப் பெருஞ் சொல்லாக நிற்றலிற் சொல் லாற்றலும் உண் டென்க. ஆயின், இவ் வாசிரியர் பெயர் இச் செய்யுளின் இடை கடைகளின் ஒன் றி னிறுத்தாது முதலடி முதற்சீ ரொதுகைத் தொடைக்க ணிறுத்ததிற் குறித்த தியா தோ வெனின், ஒன்றிரண் டெனக்கொண் டுறுமறை யாகம நன்றிரு முடிபி னடுநிலை நடாஅய்ப் புலம்பெறு தத்துவ நியதியிற் போந்து உண்மலர் தெறு மறிஞர்

வாழ்த்திப் பரவும் ஆசிரியர் சன்மார்க்க முதலிய மார்க்க நான்கனுட் டலைமையிற் றலைமையாய வுத்தம சன்மார்க்கத்தின ரென்பது குறித்த தென்க. இங்ஙனம் உத்தம சன்மார்க்கத்தின ரென்பதை யாசிரியர் கூறிய "இது வென்ற தெல்லாம் பொய் யென்றான்"[22] என்னுந் திருவெண்பாவாற் காண்க. இஃ தின்னும் விரிக்கிற் பெருகும்.

குருராயன் என்பது திருஞான சம்பந்தப் பிள்ளையார்க்குச் சிறப்பிற் சிறப்பாய காரணப் பெயராய் நின்று, ஓதி யுணர்ந்து பன்னாட் பல சாதனங்களின் முயன்று முயன்று ஆசாரியத் தன்மை யொருவாறு அரிதிற் கிடைப்பப் பெற்று மோரோர் காலங்களின் அவத்தை வயப்பட்டு மயங்கு மற்றை யாசாரியர் போலாது ஓதாமல் வேதாகமாதிகளை முற்று முணர்ந்திறைப்போது மோர் சாதனங்களின் முயன்ற தின்றி ஞானசாரிய வரு ளிலக்கணங்க ளனைத்துந் தாமே தம்பால் நிரம்பி நிற்ப அமர்ந்தன ரென்பதூஉம், ஓதி யுணர்ந்த அவ் வாசாரியர்க் கெல்லாம் அவரவ ரறிவின் கண் அரு ளுருவாய் நின் றறிவித்தும் ஆசாரிய வுருவாய் வெளிநின்று அனுக்கிரகித்தும் நின்றன ரென்பதூஉம்,

---

22. க. பொதுவிலுபதேசம், சச:

இதுவென்ற தெல்லாம்பொய் யென்றா னெனக்குப்
பொதுவன்றித் தங்குமிடம் போச்சு—அதுநாங்கா
ணென்றா னதன்பே றிரவைப் பகலாக்கு
மொன்றோ பரமசுக மோ.

திருநோக்கஞ் செய்தன் முதலிய அறுவகைத் தீக்கை யானு மன்றித் தமது திருவுருவைக் காண்டல் நினைத் தன் மாத்திரையே பக்குவால்லாரும் பக்குவராய்ப் பயன்பெற நின்ற திருவருட் பெருமைய ரென்ப தூஉங் குறித்த தென் றுணர்க. இங்ஙனம் ஓதா மல் வேதாகமாதி யுணர்ந்தமை முதலியவற்றை யாசிரியர் கூறிய "தன்மையு முன்னிலையும்"23 என்னுந் திருவெண்பாவாற் காண்க.

அல்லதூஉம், குருராயன் என்பது வாதுவென்ற சம்பந்தன் என்பதற்கு மேனிற்க வைத்த விதப்புக் குறிப்பாற் பிள்ளையார் இவ் வவதாரத்தின் மேனின்ற அவதாரத்திலுங் குமார சற்குருவாய் அரனுக்கும் அகத்தியனுக்கும் உபதேசித்தருளிய ஆசாரியத் தலைமையுங் குறித்த தெனக் கொள்க. அருணகிரிநாதர்

தென்னவ னங்ஙனஞ் சூழ்காத் திரிநக சூலகரத்
தென்னவ னங்கனந் தப்பத நீட்டினன் செல்வமுன்பின்
றென்னவ னங்கனன் னீற்றூற் றிருத்திய தென்னவின்னந்
தென்னவ னங்கனங் கைச்சிலைக் கூனையுந் தீர்த்தருளே 24

என்றதனாற் பிள்ளையார் இவ் வவதாரத்திற்கு மேனின்ற

---

23. க. பொதுவிலுபதேசம், சஉ :

தன்மையு முன்னிலையுந் தானய்ப் படர்க்கையுமா
யென்னொழிவி லின்புமா யின்புமிது—வென்றுதை
வேதாந்த சித்தாந்த மேபிறவா வீடென்றூ
ஞேதாமல் வேதமுணர்ந் தோன்.

24. கந்தரந்தாதி, ௯௬.

அவதாரத்திற் குமார சற்குரு வென்பது காண்க.
கல்லாடம்

உழன்மதிற் சுட்ட தழனகைப் பெருமான்
வணங்கினின் றேத்தக் குருமொழி வைத்தோய்

. . . . .

குறுமுனி தேற நெடுமறை விரித்தோய்25

சித்தியார்

அருமறையா கமமங்க மருங்கலைநூ றெரிந்த
வகத்தியனுக் கோத்துரைக்கு மருட்குருவாங் குருளை26

என்பவைகளால் அரனார்க்கும் அகத்தியனார்க்கும் உபதேசித்த ஆசாரியத் தலைமையை யுணர்க.

ஆயின், குருவேந்தன் என்னாது குருராயன் என்றது எது குறித்தற்கோ வெனின், நான்கன் வேற்றுமையா னடுத்து மிக்குயர் நெறிப் பொருண்மையின் வந்த காரகச் சிறப் பொருதலைத் தொடர் மொழிப் பெயராய இக் குருராய னென்பதன்கட் குரு வென்பதன் முதனிலை யெழுத்துத் தமி ழியல் விதிப்படி மொழிக்கு முதலாகியும் ராய னென்பதன் முதனிலை யெழுத்துத் தமி ழியல் விதியின்றி ஆரிய வியல் விதிப் படி மொழிக்கு முதலாகியும் வந்து இருவகை யியலுங் கோடலின், இதனைத் தம் பெயராகவுடைய பிள்ளை யாருந் தமிழ்நூல் வடநூ லென்னும் இருவகை நூற்கு முரியா ரென்பது குறித்தற் கென்க. ஆசிரியர் "மறைப்

25. முருகக் கடவுள் துதி.

26. பரபக்ஷம், சுப்பிரமணியக் கடவுள் துதி.

புலவன் தமிழ்க் குரிசில் சீகாழிச் சம்பந்தன்"[27] என்றதனால் இருவகை நூற்கு முரியா ரென்பது காண்க வென்க. அல்லதூஉம், பொருள் வேறுபடாது சிறிதே வடிவு வேறுபட்டு நின்ற குருராய னென்பது தன்னை யுள்ளூன்றி நோக்கினர்க்கு இலை மறை காய் போல் ஜா வென்னு முயிர்மெய்யோ டிருந்த தன் முன் வடிவ முட்கொண்டு விளங்கக்காட்டி நிற்கின்ற தாகலின், இதனையுடைய பிள்ளையாருந் தமது கடவுட் டன்மை வேறுபடாது உத்தம புருட வுருவங்கொண்டு நின்ற தம்மை அன்பான் உள்ளூன்றி நோக்கினார்க்குக் குமார சற்குரு வென்னும் பெயர் கொண்டு அளவிகந்த சூரியர் உதயம்போன் றொளிவீசுந் தம் முன்னுருவாய தெய்வத் திருவுரு வுட்கொண்டு விளங்கக் காட்டி நின்றன ரென்று குறித்தற் கென்பது மா மென்க. ஆளுடைய பிள்ளையார் புராணம்

மறையவர் திருவே வைதிக நிலையே வளர்ஞானப்
பொறையணி முகிலே புகலியர் புகலே பொருபொன்னித்
துறைபெறு மணியே சுருதியி னொளியே வெளியேவந்
திறையவ னுமையா ளுடனரு ளரவெய் தினையென்பார் 28

என்று மூவாண்டிற் பிள்ளையார் திருவருள் வடிவைக்

---

27. க. பொதுவிலுபதேசம், கக :

சத்தியமிர் வாணத்தாற் றற்போதத் தாக்கறுத்து
வைத்துவழி காட்டு மறைப்புலவன்—சுத்தன்
றமிழ்க்குரிசிற் சீகாழிச் சம்பந்த னென்பா
னெமக்கருளிச் செய்த திது.

28. கஉ-வது திருப் பாட்டு.

கண்டு சீகாழியுள்ளார் வியந்து கூறியவாறுய விச் செய்யுளால் உள்ளூன்றி நோக்கினர்க்குத் தம் முன் னுருவைக் காட்டி நின்றன ரென்பது காண்க வெனிக. இனி இன்றியமையாக் காட்டுளதேற் காட்டுவ தன்றி மற்றைய விரிக்கிற் பெருகும் எனக.

அல்லதூஉம், குரு என்பத னீற் றுயிர்மெய் யோடு ராயன் என்பதின் முத லுயிர்மெய் புணராப் புணர்க்கையாய் நின்ற தாகலின், இங்ஙனம் ஆனந்த வடிவாகிய பிள்ளையாருந் தாங் கொண்டருளிய மானி டத் திருவுருவோடு புணராப் புணர்க்கையாய் நின்றன ரெனக் குறித்தற் கென்பது மா மெனக.

அல்லதூஉம், குறிலிணைக் கெதிர் நெடில் குறி லெண்ணீடாக நிற்பவு மீற்றி னவ் வெண்ணீ டின்றி யொற்று நிற்பவுந் தொடர்ந்த மொழி யாகலிற் பிள்ளை யாரும் பக்குவர்க்கு மறைப் பொருளாயும் அதிபக்கு வர்க்கு அநுபவப் பொருளாயும் இவ் விரண்டினுங் கலவாது அதீதப் பொருளாயு நின்றன ரென்று குறித்தற் கென்பது மா மெனக. இங்ஙனம் குருராய னென்பதிற் கு வ்வென்பது இருள், ரு வ்வென்பது அருள், ராயன் என்பது விளங்கச் செய்கின்றோன் பொருளாம். இதனால் கு வ்வென்னு மசுத்தாவத்தை யில் நின்றோரை ரு வ்வென்னுஞ் சுத்தாவத்தையில் தாம் நின்றவண்ண நிறுத்துகின்றோர் குரு ஆவர். இச் சுத்தாவத்தைக்கு ஆதாரனாகியும் அதீதனாகியும் விளங்கி இவ் வவத்தையி னின்றும் அக் குருவாயினோர் தாழாத வண்ணம் அருள்செய்து நின்று அதீதப் படுத்துகின்

றேன் ராயன் ஆவன் ஆகலின், இதனாலும் உணர்க வென்க.

எழுத்தாதிப் பல்வகைக் குறிப்பிற் பொருணெறிபற்றி நின்ற நோக்கம் செறிவு நுட்பம் இங்கிதம் இன்பம் கம்பீரம் சிறப் புறுதி முதலிய நற்குணந் தழீஇய சொற்புண ரீதென்றே, ஆசிரியரும் "சரிதாதி நான்கினுக்கும்"[29] என்னும் திருவெண்பாவி னிடைக் கட் குருராய னென்று இதன் பெருமை தோன்ற வைத்தன ரென்க. இஃது இன்னும் விரிக்கிற் பெருகு மென்க.

வாது வென்ற சம்பந்தன் என்பதிற் பொதுவானே வாது வென்ற என்றது என் குறித்தோ வெனின், எண்வகைக் குன்றத் தெண்ணாயிரவ ராய பாயுடுக்கைப் பறிதலைச் சமணர்களொருங்கே கூடித் தென்மதுரைக்கட் செந்தமிழ்ப் பாண்டியனை முன்னிட்டுச் செருக்காற் செய்த சுர வாதம் அனல் வாதம் புனல் வாதங்கள் பிற்படத் திருநீற்றானுந் திருவாக்கானும் வென்று திறல்கொண்டமை யன்றியும், பரசமய கோளரி யென்று தானே யொலித்த திருச்சின்னத்தின் தெய்வப் பேரொலி கேட்டு உளம் பொறுத் தெதிரிட்டு மறித்த போதமங்கைப் புத்தநந்தியின் பொய்த் தருக்க

29. உ. சத்திநிபாதத் துத்தமரொழிவு, க :

சரிதாதி நான்கினுக்குஞ் சாலோக மாதி
வருமா றெனக்களித்த வள்ளல்—குருராயன்
ஞானத்திற் பக்குவர்க ளல்வர்க் குப்தேச.
மானத் தையுநிகழ்த்தி னன்.

மும் புழுத்தலையும் பொடிபட் டழியவும், பின்ன ருள்ளது போன்றில்லதைப்பற்றிச் சாக்கியக் குழுவுள் தலைவனுய சாரிப்புத்தன் சிற்சில வகையாற் செய்த சமையவாதந் தலை தடுமாறவும், செந்தமிழ் வேதத் திருமுறை தாங்கி மேம்படும் அறிஞரான் வெற்றிகொண்டமையும், திருவோத்தூரின்கண் அரனுக் கிடுபனை யாண் பனையாயிற்றே யென்று அசதியாடிய அமணக் குழூஉக்களின் வாய்வாதங்கள் மண்பட் டொழியத் தாம் திருவாய்மலர்ந்த திருக்கடைக்காப்புள் ஓர் மொழியானே அவ்வாண்பனை பெண்பனையாகச் செய்து விறல்கொண்டமையுங் குறித்த தென்க.

அல்லதூஉம், வாது என்ப திலக்கணையாகக் கொண்டு பெருமண நல்லூரின்கண் திருமண நல் விழாவைத் தரிசிப்பான் வந்த மக்கட் கெல்லாந் தொன்று தொட் டிடைவிடாது உடனிழற் போற் சூழ்ந்துள பிறவிப் பெருவாதுகளனைத்தும் வென்றதூஉம், திருப்பாச்சிலாச்சிராமத்தின்கண் மழவன் மகளார்க்கு அடுத்த முயலக வாது வென்றதூஉம், மருகற்கண் ஓர் வசியனுக்கு அடுத்த விட வாது வென்றதூஉம், இவை முதலியவுங் குறித்த தெனினுமா மென்க. வெற்றிகொண்ட பொருட்டிறன் முதலியவற்றுள் ஒன்றேனுந் தோன்றக் கூறாது இலேசானே வாது வென்ற தென் குறித்தோவெனின், பிறர்க்கு இங்ஙனம் வேறல் தம்மானுந் துணைமையானும் பற்பல நாட் பற்பல வகையின் முயற்சி செயினு முற்றாதெனினும், பிள்ளையார்க்குச் செந்தமிழ் பொழியுந் திருவாக்கானே ஆண்டாண்டு அவ் வேறன்

முற்றிய தென்பது குறித் தென்க. வாது என்பது குரு ராயன் என்பதனோடுஞ் சம்பந்தன் என்பதனோடுஞ் சாராது நடுநின்றமையின், அத்துவித நெறியினுஞ் சேராது துவித நெறியினுஞ் சாராது நின்ற பதித வாதிகளது பயனில் வாத மெனினு மமையு மென்க.

எதிரேற்கப்பட் டெதிர்வினைக் கீழ்ப்பட மேற் கொள் வினையெழுச்சிப் பொருளின் வந்த வெல்லென் னும் பிறவினைப் பகுதியா னடுத்த வென்ற என்னும் பெயரெச்சஞ் சம்பந்த னென்னும் பெயர் கொண்டு முடிந்து, இங்ஙனம் வெற்றி கொண்ட பருவம் பிள்ளை யார்க்கு இளங்குமாரப் பருவ மெனக் குறித்த தென்க. என்னை ? எச்ச மென்பது இளஞ் சேய் மேற் றாகலின்.

சம்பந்தன் என்பது பிள்ளையார்க்கு மூ வகைவைக் கண் மூ வுலகம் புகழப் பொற்பொடு புணர்ந்த அற்புதத் திருப்பெய ராகலின், ஆண்டுப் பெருமா னருளப் பிராட் டியா ரளித்த சிவஞானத் தெள்ளமு தருந்தி அச்சிவ ஞானத்திற்கு உரிமைபூண்டமை குறித்த தென் றுணர்க. ஆயின் சிவஞான சம்பந்தன் என்னாது சம்பந்த னென வைத்த தென்கொலோ வெனின்: சிவஞானமு மன்றிச் சிவானந்த மானந்தாதீதம் என்பவைக்கும் உரிமை பூண்ட தலைமை பற்றியும் அவற்றை உல குயிர்க்கு இங்ஙன மென் றுணர்த்தி உரிமை செய்விக்கு மாட்சி பற்றியும் அங்ஙனம் வைத்த தென்க.

அல்லதூஉம், சுருங்கச் சொல்லுதல் வனப்பினாற் சம்பந்த னெனவே சிவஞான சம்பந்த னென்ன வுரிமைச் சிறப்பு வழக்கால் தானே தோன்று மென • வைத்த

தெனினு மாமென்க. எங்ஙன மெனின், இந்திர னென்பது இறைமைச் சிறப்பு வழக்கால் தேவேந்திரனையும் உடையா னென்பது பொருட் சிறப்பு வழக்கால் பொன்னுடையானையுங் குறிக்கு மாகலி னென்க.

வள்ளன் மலர்த்தாள் என்னும் ஒருவகை வனப்பு இருவகைச் சந்தி மூவகை மொழித் தொகைச் சொற்றொடர்க்கண் வள்ள லென்னுங் குணிப்பெயர் வினைமுதற் றொழிற் பயனுறப்படு முடைமைக் குணப் பெயராய் நின்று பிள்ளையாரது திருவடிகள் தம்மை யடைந்தோர்க்கு வரையா தானந்தப் பேற்றை யளித்து அவரைத் தாங்கிக் கோடலைக் குறித்த தென்றுணர்க. அஃதேல் ஆனந்தப் பேற்றைத் தருதற்குந் தாங்கிக் கோடற்குங் கருத்தர் பிள்ளையா ரன்றோ? அங்ஙனம் இருப்பத் திருவடிகட்கு இங்ஙனங் கூறல் எங்ஙன மெனில்: திருவடிகள் தம்மை வழிபடுவோர்க்கு இரங்கி இன்ப மீதற்பொருட்டு எழுந்தருளும் பிள்ளையாரது படர்ச்சி நிகழ்ச்சிக் கருவியாய் நின்று அவரை யவ் வழிபடுவோர்பால் வருவித்தலானும், ஞான தீக்கை பண்ணுங்கால் அவர் சென்னியிற் சூட்டப்பட்டு ஐக்கியம் வருவித்தலானும், நித்தியானந்தப் பேறு வாய்க்கு மாகலின் இங்ஙன மென்க.

அல்லதூஉம், வாட்டமி லருளுங் கோட்டமில் குணனு மசையா நிலையு நசையா மனனும் வெகுளாப் பண்பும் விடாப் பேரன்புஞ் செவ்வியின் மரீஇ எவ்வெவர் எவ்வகை வேட்டனர் அவ்வகை விருப்பொடு குறிப்பின் வரையா தீதல் வள்ளற்றன்மை என்ப

வாகலின், இவ் வள்ளற் றன்மையைத் தம்பால் அடைந் தோரிடை யடைவித்தருளுங் கருணைபற்றி யங்ஙனங் கூறிய தெனினு மமையு மென்க. அஃதேல் வள்ளற் றன்மை வழங்கு மலர்போலுந் திருவடி யென்றன்றோ வுரை விரித்தல் வேண்டும், அங்ஙன மின்றி வள்ளற் றன்மை யுடைய மலர்போலுந் தாளென விரித்திருக் கின்றதே யெனின்; அங்ஙன மடைவித்தலும் வள்ளற் றன்மையே யாகலினு முடைய தொன் றன்றே யுதவப் படு மாகலினும் இங்ஙனம் விரித்தல் அங்ஙனங் கூறற்கு மமைதி யா மென்க.

அல்லதூஉம், அருளின்றி யமையாத வள்ளற் றன்மைக் கவ் வருளே முதற் காரணமா மாகலின், ஆனந்த வடிவாகிய பிள்ளையார் அவ் வானந்தப் பேற் றை யளிக்கும் வள்ளற் றன்மைக்கு முதற் காரண மாகிய திருவருட் சத்தியே திருவடி யென்று குறித்தற் குக் காரணத்தைக் காரியமாக ஈண்டு உபசரித்த தெனினு மமையு மென்க.

அல்லதூஉம், எமது திருவடிகளை வழிபடின் வீட்டின்ப மெளிதில் தருவே மென்று பிள்ளையார் விதித்தருளிய அருள் விதிப்படி யறிந்து வழிபடின், அவ் வழிபாட்டான் அவ் வீட்டின்பந் தாப்பெறுதல் உண்மை யாகலின், அவ் வுண்மை நோக்கி யீண்டுக் கூறிய தெனினும், பிள்ளையார் திருமேனி முற்றுந் தெய்வத் தன்மை பூரண மாகலின் அதனை யறிவிக்க ஈண்டுக் கூறிய தெனினு மமையு மென்க. திருவடிகட்கு அடையாய வள்ள லென்பதூஉம் ஆசிரியர் பெயராய

வள்ள லென்பதூஉம், அடியிணை எதுகைத் தொடையாய் எழுத்தசை சீரொலி பொருளாதிகளா னொற்றுமை கொண்டு நின்று பிள்ளையாரது திருவடித் தீக்கைக்கும் ஆசிரிய ரதிபக்குவத் தன்மைக்கும் உள்ள வொற்றுமைப் பொருத்தம் விளக்கின வென்க.

வள்ளல் என்பது பிள்ளையார்க்குக் காரணச் சிறப்புப் பெயராகக் கொண்டு பொருள் கூறுவாருமுளர். அங்ஙனங் கூறின், இத்துணைச் சிறப்பின்று என்று மறுக்க. என்னெனின், அவயவச் சிறப்பானவயவிக் குணம் வெளிப்படுத்தலே பெரும்பாலு மின்பமாகவி னென்க. இதனைப் "போற்றிமா லுண்முகனுங் காணாத புண்டரிகம்" 30 என்பதனாற் காண்க வென்க. வள்ள மலர்த்தா ளெனப் பாடமோதி வள்ளம் போலுங் குவிந்த வாய்மல ரென மலர்க் கடையாக வுரை விரிப்பாருமுளர். அங்ஙனம் விரித்தலின் இத்துணைப் பெரும் பய னின்றென மறுக்க. இங்ஙன மின்னும் விரிக்கிற் பெருகு மென்க.

மலர் என்பது வள்ளற் றன்மையி னருகு வைத்தமையின், ஈண்டு நிறைதலுங் குறைதலுமா யுள்ள நீர்நிலைக்கண் தோன்றியும் அழிந்தும் விரிந்துங் குவிந்தும் வாடியும் நின்று வண்ணமும் நறையும் வாசமுஞ் சிறிதே சிறுபோது கொண்டு பறித்தலாதிய சிறு தொழிற்படு மலர்களை நீக்கி, ஆண்டுத் திரிபிலாத் தெய்வத் தெண்ணீர் நிலைக்கண் ஒழியா மலர்ச்சியும் அழியா மணமும் பொன்னிறப் பொலிவும் இன்னற வொழுக்கு மென்

30. திருவாசகம், திருவெம்பாவை, உம.

மையுந் தண்மையும் வியப்புறு முருவுங் கண்டோர் கண் கவர் காட்சியும் மாட்சியுங் கொண்டு முக்காலமுங் குன்று மலரைக் குறித்தமை காண்க. என் னெனிற் பிள்ளையார் திருவடிகள் மெய்ஞ்ஞான விளக்கமா யருண்மணம் வீசிப் பொன்னிறம் பொலிந்து ஆனந்த மொழுக்கி மெல்லென வுற்றுத் தண்ணெனக் குளிர்ந்து தரிசிக்கின்றோர் வியப்புறு முருவா யவாது விருப்ப நோக்கம் பாவ என்றும் ஒரு தன்மையவா யிருக் கின்றமையி னென்க. ஆயின் மலர் போலுந் தா ளென்று உவமை விரிந்தபடி நிற்றற்கு இடங்கொடாது மலர்த்தா ளென்ற தென்னெனின், அத் தெய்வத் திரு மலர் தனைக் கண்டோர்க்குச் சிறிய விடயானந்தந் தருதலே யன்றித் திருவடிபோற் சிவானந்தம் தாமாட் டாச் சிறுமை நோக்கி யென்க.

அல்லதூஉம், சுபவடிவாய் எவ்வகைச் சுபங்கட்கு முன்னின் றதனை விளங்குறச் செய்வதாய் மகிழ்வுடை யோர் யாரு மேற்கொண் டணியப்படுவதாய் நிற்கு நன்மலர் போலு மெனக் கூறினு மமையும்; என் னெனின், திருவடிகள் அருள் வடிவா யானந்தப் பேற் றிற்கு முன்னின் றளிப்பதா யறிவுடையோர் தந்தலை மேற் கொண் டணியப்படுவதாய் நிற்றலி னென்க.

அல்லதூஉம், மலரை யடைந்த வண்டுக ளதனது தே னுண்டு களிகொள்ளுதல் போற் றிருவடிகளை யடைந்தோரும் அருளானந்தம் பெற் றிறுமாத்தலி னிங்ஙனங் கூறிய தெனினு மமையு மென்க. இத னைத் தொகையுவமை யணியாகக் கூற லின்றி வள்

ளன் மலர்த்தா ளெனக்கூட்டி யற்புதத்தொகை யுவமை யணியாகக்கொண்டு பொருள் கூறுவாருமுளர். அவர் கூறுங் கூற்றிற் பெரும் பய னின்றென மறுக்க. இஃ தின்னும் விரிக்கிற் பெருகுமென்க.

தாள் என்பது அடிகட் கன்றியும் முயலுதற்கும் உண்ணின்ற பொருள் வெளிப்படாமைக்கும் அதனை வெளிநின்றோ ருட் சென்று கவரப்படாமைக்குங் காப் பாகக் காப்பினிற்குங் கருவிக்கு மணிதற்கணியி னிரு கடையு மிணைத்து நிற்கு மிடைப்பூட்டிற்கு மிடனுகி வந்த பலபொரு ளொருசொல் லாகலின், திருவடிகள் தம்மை யடைந்தோரை யானந்த நிலையுட் சேர்த்தலும் அங்ஙனஞ் சேர்ந்தோர் மீட்டு மவ்வானந்த நிலையினின் றும் போதவசைவு தோற்றி வெளிப்படாமைக்கும் அவத்தைகளுட் சென்று தாக்கிக் கவரப்படாமைக்குங் காப்பாக அருளுருவா யதன் முன்னிற்றலுஞ் சிவத் துடன் சீவனை யிடைநின்று கூட்டுவித்தலுங் குறித்தது காண்க. இக் குறிப் புணர்த்த வன்றோ மலர்க்கா லென் னுது மலர்த்தா ளென்றதென் றுணர்க.

தலைமேல் வைத்து என்பது ஆசிரியர் தம் ஆசா ரியராகிய பிள்ளையார் திருவடித் தீக்கை செய்யத் தாம் பெற்றமை குறித்தது காண்க. அஃதேல், வைக்கப் பட்டு எனச் செயப்பாட்டுவினை யெச்சத்தா னிருத்தற் பாலதன்றோ வெனின், ஆசிரியர்க்கு அத் திருவடிக் கண்ணேயுள்ள பிரியத் தொடர்ச்சியின் பெருமை தோன்ற இங்ஙனம் நின்று அங்ஙனங் குறித்ததென்க. இதற்கு இவ்வா றன்றித் தலைமேற் பாவனையான் வைத்

தெனக் குறித்த தென்று கூறுவாரும் உளராலோ வெனின், அவ்வாறு கூறிற் பிள்ளையார் இந் நூலாசிரியர்க்கு ஞாநுசாரிய ரென்பதும் இவர் ஞானதீக்கையுடையா ரென்பதும் விளங்குதலின்றி மற்றையாசிரியர் போல் எடுத்த நூ லினிது முடிதற்பொருட்டுப் பாவனையான் வழிபடு கடவுட் பழிச்சின ரென் றிலேசிற் கருதப்படு மாகலின் அங்ஙனங் கூறன் மா பன் றென்க. தலையில் வைத்து என்றது தலைமேல் வைத்து என்றமையான், மறை முடிக்கண்ணே வயங்காநின்ற அச் செல்வத் திருவடியின் சீர்மை தோன்றிற் றென்க.

ஓர்ந்து என்பதில் ஓர் என்னும் பிறவினை முதனிலை, அறிவு தனக் கெதிரிட்ட வுணர்ச்சிப் பொருட்கண் எதிரிடுவது போன்று எதிரிடா துள்ளாழ்ந்த அப் பொருட்டிற னெதிரிடப் பெயரும் புடைபெயர்ச்சியு மெதிரிட்ட பின்னர் விகற்பியா தெதிர்க்குந்தொறு மெதிரிடப் பெயரும் புடைபெயர்ச்சியுங் கோடலிற் கருவித் திறனுந் தன் றிறனும் அருட் டிறனும் உற்றுணர்ந் தவ் வுணர்ச்சி விகற்பியாது தேறி நின்றமையைக் குறித்தது காண்க. இக் குறிப்புத் தோன்றவன்றே திருவள்ளுவ நாயனாரும் "ஓர்த்துள்ள முள்ளதுணரின்" 31 என்று ரென் றறிக.

உள்ளத் தழிவில் என்பதில் உள்ள மென்பதன் பகாப்பதவி யிற்றாப் பகுபதப் பொருளி னிடவாகு

31. ஓர்த்துள்ள முள்ள துணரின் ஒரு தலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.—

திருக்குறள். மெய் யுணர்தல், எ.

பெயரா யனுப் பொருட்கண் வந்த வுள் ளென்னும் பகுதி யுட்புறத்தும் அப்போதம் எழுஞ் சிற்றசைவும் பேரசைவுங் குறித்தது காண்க.

உள்ளம் என்பது வாதனையா னுள் ளெழும் போதத்திற்காகுபெயராயது வள்ள லென்பது போன் ருெழுகிசையாய் வர வுள்ள வழிவி லென்னுது பொறுத் திசையாய் வர உள்ளத் தழிவி லென்ற தென்கொலோ வெனின் : வேற்றுமை வழியாகலினும் போதவசைவு சார்பின்றி யமையாமை குறிக்கவேண்டு மாகலினும், சாரியையோடு புணர்த்தி யங்ஙனங் கூறிய தென்க. அழிவு என்பதில் அழி யென்னும் பொது வினைப் பகுதி முன்னர்த் தோற்ற நிகழ்ச்சிப் பின்னர் ஓர் காலத்தும் ஓரிடத்து மின்றிக் கெடுதற் பெயர்ச்சிக்கண் வந்ததாக லின், அப் போத நிகழ்ச்சி பின்ன ரெக்காலத்தும் உட் புற மென்னு மெவ்விடத்துந் தோற்ற நிகழ்ச்சி யின்றி யொடுங்கியவாறு குறித்த தென் றுணர்க. இங்ஙன மன்றி உள்ளத்தழிவி லென்பதற்கு மனத்தி னசைவற்ற விடத் தென்ப் பொருள் கூறுவாரு முளாரலோ வெனின், மனத்தி னசைவு போத வசை வறிற் றுனே யறு மாகலினு மஃ தருத விடத் திஃ தெவ்வாற்ரு னுமரு தாகலினும் அது பொருந்தா தென்க. இதனை ஆசிரியர் கூறிய "பற்ருத போதும் பதறும்" [32] என்னுந் திரு வெண்பாவாற் காண்க வென்க.

---

32. ௩. இயோகக் கழற்றி, கரு:

பற்ருத போதும் பதறும் பழக்கமதைக்
கற்ரு லென்னுகக் கலக்காது—சற்றேநீ

அடுக்குந் தேன் என்பதில் அடுக்கு மென்பது அடுத்த லென்னுந் தொழிற் பெயர்க்கண் தல்விகுதி தன் னொற்றுச் சந்தியொடு நீங்க வெதிர்காலப் பெயரெச்ச விடைநிலை யும்மை ககரமெய்ச் சாரியை யூர்ந்து தன் னொற்றுச் சந்திபெற் றுண்டு நின் றிறையு மிடைப்பாடு தோற்றாது செறிதற் பெயர்ச்சியும், அடுக்க லென்னுந் தொழிற் பெயர்க்கண் அல்விகுதி நீங்க அவ் வெதிர் காலப் பெயரெச்ச விடைநிலை யும்மை விகுதி நீங்க நின்று தன் வரவு கண்டோடிய குற்றுகர மூர்ந்த மெய்க் கண் ணேறி நின் றிறையு மிடைப்-போதின்மை படாது பன்முறை மேன்மே லுறுதற்பெயர்ச்சியும் பொருளா கக்கொண் டிருவகைப் பகுதி யொருவகை யெச்ச மாக நிற்றலின், சிறிதும் இடத்தானுங் காலத் தானும் பிரிவு தோன்றாது செறிந்து பன்முறை மேன்மே லெழும் ஆனந்தத் தே னென்று குறித்த தென் றுணர்க.

உள்ளத் தழிவி லடுப்பது ஆனந்த மாகலிற் றே னென்பதை யுவமக் குறிப்பாற் சிவானந்தத் தே னென்ற தென் றுணர்க.

தே னுண்ட வண் டசை வின்றி யத் தேன் மயமா யிருத்தல் போல, ஆனந் தானுபவத்தர் போத வசை வின்றி யிவ் வானந்த மயமா யிருத்தலி னுவமையாகக் குறிக்கப்பட்ட தென் றுணர்க. இதனை யொப்புமைக்

---

தீண்டிவிடிற் றன்காண் செனன மரணமது
மாண்டுவிடி னீசிவமா வை.

உ. திரோதை பூத நூப் சொரூப சுபாவ வியாப்பிய வியாபகாதி யசித்துப் பிரத்தியக்ஷ சத்தி யுலகு.
ங. திரோதை நூப சொரூப சுபாவாதி பரித்தியாக சத்தி யுலகு.

க. குடிலை நூப சொரூப சுபாவ வியாப்பிய வியாபக விசேட குணாதி பூர்வோத்தர பரியந்தப் பிரத்தியக்ஷ சத்தி யுலகு.
உ. குடிலை நூப சொரூப சுபாவாதி யசித்துப் பிரத்தியக்ஷ சத்தி யுலகு.
ங. குடிலை நூப சொரூப சுபாவாதி பரித்தியாக சத்தி யுலகு—
முதலியவுங் கொள்க.281

க. *சுத்த சம்வேத வந்த ராந்தர பர விச்சை ரூப சொரூப சுபாவாதி பூர்வோத்தர பரியந்தப் பிரத்தியக்ஷ சத்தி யுலகு.*
உ. *பர விச்சை ரூப சொரூப சுபாவாதி ஏகதேச சித்துப் பிரத்தியக்ஷ சத்தி யுலகு.*
ங. *பர விச்சை ரூப சொரூப சுபாவாதி வாசனை பரித்தியாக சத்தி யுலகு.*

க. *சுத்த சம்வே தாந்த ராந்தர பர ஞான ரூப*

281. 279-வது அடிக் குறிப்பைப் பார்க்க. "இங்ஙனம் கன்ம ரூப . . . பூர்வோத்தர பரியந்தப் பிரத்தியக்ஷ சத்தி உலகு . . . குடிலை ரூப ... பரித்தியாக சத்தி உலகு முதலியவுங் கொள்க"— என்று கூட்டுக. 185-ம் பக்கத்திலுள்ள மூன்று உலகங்களையும் "குடிலை ரூப . . . பரித்தியாக சத்தி உலகு" என்பதனைத் தொடர்ந்து "முதலியவுங் கொள்க" என்பதற்கு முன் அமைத்துக் கொள்க.

சொரூப சுபாவாதி பூர்வோத்தர பரியந்தப் பிரத்தியக்ஷ சத்தி யுலகு.

உ. பர ஞான ரூப சொரூப சுபாவாதி வாசனா பரித்தியாக சத்தி யுலகு.

க. சுத்த சம்வே தாந்த ராந்தர பரக் கிரியா ரூப சொரூப சுபாவாதி பூர்வோத்தர பரியந்தப் பிரத்தியக்ஷ சத்தி யுலகு.

உ. பரக் கிரியை ரூப சொரூப சுபாவாதி யேகதேச சித்துப் பிரத்தியக்ஷ சத்தி யுலகு.

ங. பரக் கிரியை ரூப சொரூப சுபாவாதி வாசனா பரித்தியாக சத்தி யுலகு.

க. சுத்த சம்வே தாந்த ராந்தர ஆன்ம ரூப சொரூப சுபாவ வியாப்பிய வியாபகாதி பூர்வோத்தர பரியந்தப் பிரத்தியக்ஷ சத்தி யுலகு.

உ. ஆன்ம ரூப சொரூப சுபாவாதி யேகதேச சித்துப் பிரத்தியக்ஷ சத்தி யுலகு.

ங. ஆன்ம ரூப சொரூப சுபாவாதி வாசனா பரித்தியாக சத்தி யுலகு.

க சுத்த சம்வே தாந்த ராந்தர பரா[282] சத்தி ரூப சொரூப சுபாவ வியாப்பிய வியாபகாதி பூர்வோத்தர பரியந்தப் பிரத்தியக்ஷ சத்தி யுலகு.

உ. பரா[282] சத்தி ரூப சொரூப சுபாவாதி சாங்க சித்துப் பிரத்தியக்ஷ சத்தி யுலகு.

---

282. பூா—பி-ம்.

௩. பரா282 சத்தி ரூப சொரூப சுபாவாதி வாசனு பரித்தியாக சத்தி யுலகு.

க. சுத்த சம்வே தாந்த ராந்தர பரசிவ ரூப சொரூப சுபாவ வியாப்பிய வியாபக விசேட குணாதி பூர்வோத்தர பரியந்தப் பிரத்தியக்ஷ சத்தி யுலகு.

உ. பர சிவ ரூப சொரூப சுபாவாதி சாங்க சத்துப் பிரத்தியக்ஷ சத்தி யுலகு.

௩. பர சிவ ரூப சொரூப சுபாவாதி வாசனு பரித் தியாக சத்தி யுலகு.

க. பரநாத பரித்தியா காந்த சகச கேவல பிரத்திய க்ஷா நுபவ வுலகு.

உ. பர நாத பரித்தியா காந்த கேவலப் பிரத்தி யேக ஞா நா நுபவ வுலகு.

க. பிரத்தியேக ரூபப் பிரத்தியக்ஷ ஞான ஆன்மா நு பவ வுலகு.

உ. சொரூப விகற்ப சூக்கும சங்கற்ப ரகித ஆன்ம போத நிவர்த்தி யநுபவ வுலகு.

௩. பூரணபோத வியாபக வியாப்பிய சம்வேத சம வாய யதார்த்த283 சுத்தான்ம ரூபப் பிரத்தியக்ஷ ஞா நா நுபவ வுலகு.

௪. தத்துவ தாத்துவிக லயோதய சுத்த ஞானப் பிரத்திய க்ஷா நுபவ வுலகு.

---

283. பதார்த்த—பி-ம்.

௫. தத்துவ தாத்துவிக லயோதய வியாபக வியாப்பிய சுத்த ஞா நாதீ தாநுபவ வுலகு.

அதீத ஞாநப் பிரகாச பூரண வியாபக வியாப்பிய நிர்ப்போத லக்ஷியாநுபவ வுலகு.

௭. பூரணாதீத சிற்பிரகாச யோக லக்ஷியாநுபவ வுலகு.

௮. அதீத ஞாந யோக வாசநா நிவர்த்தி யுலகு.

௯. அதீத சிற்பிரகாச யோகாதிசய ஞாந போகாநுபவ[285] வுலகு.

௧௦. ஞாந யோக வாசநா நிவர்த்தி யநுபவ ஞாந போகாதீத வுலகு.

௧௧. ஞாந யோக[286] போகாதீத சொரூப சாக்ஷாத்கார வியாபக வியாப்பி யாநுபவ சாக்கிராதீத சுத் தாவத்தை யுலகு.

௧௨. அதீத சிற்பூரண சன்மாத்திர[287] சுக சுபா வாநுபவ வுலகு.

௧௩. அதீத சிற்பூரண அநந்நிய சத்து ரூப சுக சொரூப் வுலகு.

௧௪. அதீத சிற்பூர ணானந்த சத்[288] சொரூப சுக ரூப அநுபவ வுலகு.

௧௫. சச்சிதானந்த வகண் டைக்கிய சிவ சாக்ஷாத்கா ராநுபவ வுலகு.

---

285. யோகாநுபவ—பி-ம். 286. போக—பி-ம்.
287. சின்மாத்திர—பி-ம். 288. சித்—பி-ம்.

கசு. சிவைக்கிய சுகாதீத வுலகு.[289]

இன்னும் இதனை விரிக்கிற் பெருகு மென்க.[290]

திருச்சிற்றம்பலம்

ரு. மெய்ம்மொழிப் பொருள் விளக்கம்

என்னும்

பெரிய புராண உரை முற்றிற்று.*

———

289. 281-வது அடிக் குறிப்பைப் பார்க்க "(காரணாதீத உலகு) : சுத்த சம்வேத வந்த ராந்தர பர இச்சை ரூப ... சத்தி உலகு . . . சிவைக்கிய சுகாதீத உலகு"—என்று கூட்டுக.

290. ஒரு பிரதியில் மட்டும் இக் குறிப்பு காணப்படுகிறது.

* 'உலகெலாம்' என்பது குறிக்கும் ஐம் பகுதியாய இத் தத்துவாநுபவ நிலைகள் வல்லாரத் 'ஆழ்ந் தகன்ற நுட்ப' ஆராய்ச்சிக்கு உரியன.

# ஆ. தொண்ட மண்டல சதக உரை

## 1. நூற் பெயர் இலக்கணம்[291]

தொண்ட மண்டல சதகம்—ஒருவா றித னிலக் கணம் விரிக்கின்றாம்.

இஃது மூவகை மொழி இருவகைச் சந்தி முத் திறத் தொகை ஒருதலை நோக்க முந்நிலை யிலக்கணச் செந்நிலைத் தொடர்.

முற்பாட் டுயர் பொருட் டலைமை யுடையதி

---

291. தொண்டமண்டல சதகத்தைச் சார்ந்த "நூற்பெயர் இலக்கணம்" என்னும் இவ் வொப் புயர் வற்ற உரையும் பின் வரும் "வழிபடு கடவுள் வணக்கப் பாட்டுரை" முதலியனவும் ஸ்ரீசுவாமிகள் தொண்ட மண்டல சதகத்தை முதல்முதலாக 1855-ம் ஞு பரிசோதித்து அச்சிற் பதிப்பித்தபோது செய்தருளியன வாகும். முதற்கண் உள்ள "இந்நூற்பெயர் இலக்கணம்" எழுத நேர்ந்ததின் காரணம் ஸ்ரீசுவாமிகளாலேயே குறிக்கப்பட்டிருப்பதை இவ்விலக் கணத்தின் இறுதியில் காண்க. வேறு விவரங்களுக்கு அநுபந்தம் பார்க்க.

"நூற்பெயர் இலக்கணம்" "வழிபடு கடவுள் வணக்கப் பாட்டுரை" ஆகிய இரண்டும் தவிர்த்து மற்றவற்றை ஸ்ரீ சுவாமிகள் குறித்துப் பதிப்பித்தபடியே சென்னை ரிப்பன் பிரஸ்காரர் அச்சிட்டு வந்திருக்கிறார்கள். பின்னர், 1887-ல் ஸ்ரீ அகஸ்தியப்ப முதலியாராலும், 1924-ல், ஸ்ரீ சி. கு. நாராயணசாமி முதலியாராலும் இச்சதகம் வெவ்வேறு வகைப்பட்ட உரையோடும் மூலத்திலும் மேற்கோள்களிலும் பற்பல பேதந்தோன்றவும் வெளியிடப்பட் டிருக்கிறது. இவற்றை ஸ்ரீ சுவாமிகள் பதிப்போடு ஒத்திட்டு ஒற்றுமை வேற்றுமை நயங்காண்க. இங்கு, ஸ்ரீ சுவாமிகளது 1855-ம் ஞுப் பதிப்போடு மேற்கண்ட பதிப்புகளையும் சர்க்கார் கையெழுத்துப் புத்தகசாலையி லிருக்கும் — 31.1.1889-ல் எழுதிய—மேற்கோள்களோடு கூடிய சதகத்தின் கையெழுத்துப் பிரதி ஒன்றையும் பரிசோதித்திருக்கிறது. முதற்பதிப்பு முழுவதும் அடுத்து வெளிவந்தது இந்நூல் மூலமே (1931). திரு அருட்பா 1924-ம் ஞுப் பதிப்பும் பார்க்க.

ணிலைமை, இடைப்பாட் டுடைய துரிமையுடைமை நிலைமை, பிற்பாட் டுடைமை யுரிமையுடைய துடைமை யாய—இத் தொடரைச் சொற்றிறந் தோன்றத் தொடர்பின்மை செயின், தொண்டன் மண்டலம் சதகம் என்று செய்க.

இதனுள் தொண்ட னென்பது வழக்கியற்பாடு ஒற்றுமைச்செறிவு வேற்றியற்காணம் குறிப்புயர் நோக்கம் பொருள்விரியாக்கம் குற்றியல்வண்ணம் இடைப்பல்வயிற்றொகை முதலிய சொல்லியற்பாகு பாட்டி னமைந்த முதறொகைச் சிறப் புயர்திணைக் காரணப் பொருட்பெயர். மண்டல மென்பது வட சொன் ஞேக்கியற் காரணப் பண்புகோ ளிடப் பெயர். சதக மென்பது வடசொற் பாட்டியற் காரண வெண்ணிலைக் குழூஉக் கோட் பெயர்.

இத் தொடர்க்கண் இயை பின்மையிற் பொருள் கொளின்: தொண்டன் - ஆதொண்டன், மண்டலம் - வட்டம், சதகம் - நூற்றின லாய கூட்டம் என்று கொள்க. இயை புண்மையிற் பொருள் கொளின்: தொண்டன் - ஆதொண்ட னென்னு மோ ரரையன், மண்டலம் - இருபதின் காத வெல்லை வட்ட மாய நாடு, சதகம் - நூறு செய்யுட்களா லாய கூட்டம் என்று கொள்க. பொருத்த மியைபிற் பொருண் முடிபு கொளின்: ஆதொண்ட னென்னு மரையனா லாளப் பட்ட விருபதின் காத வெல்லை வட்டமாய நாட்டின் வண்மையைக் குறித்த நூறு செய்யுட் கூட்டத்தா லுய வோர் வகை யாப் பென்று கொள்க. இங்ஙனம்

வழங்கல் சொற்சுருங்கியல் பொருளாழ்பியல் குறிக் கோளியல் தொகையின்பம் அளவிசைப்பாடு பல் வயின்வழக்கு ஒருங்கியலுடைமை முதலிய தோன் றக் காரணம் பற்றிய பெயர்க்கோள்களை வழங்கு விக்குங் கலைவல்லோர் கண்ணிய நிலை யென் றுணர்க. இஃ தின்னும் விரிக்கிற் பெருகும்.

இதனுள் தொண்டமண்டல மென்பத னியலை விளங்க வகுத் துணர்த்துக வெனின்: ஆதொண்டந் தழைவயிற் கிடத்தப் பட்டதனா லாதொண்ட னெனக் காரணக் குறிப் பெய ரேற்று, இரவி மரபின் கண் ணோ ரிறைமகனா லாளப்பட்ட வெதிரி லாட்சி யுடை மையின் இம் மண்டலத்திற்குத் தொண்ட மண்டல மெனப் பெயர் வழங்கிற்று.

இனி, ஆதொண்டந் தழையானு மலரானு மியற் றிய தொங்க லணிந்தமையின் ஆதொண்ட னெனப் பெயர் வழங்கிற் றென்பாரு முளராலோவெனின்: அங் ஙனங் கூறினு மிங்ஙனம் வழங்க லொத்த நிலை யென்க.

அற்றேல், ஆதொண்டந் தழைவயிற் கிடத்தப் பட்டவனை ஆதொண்ட னென்று குறியீடு செய்த லெங்ஙன மெனின்: மேற் கலைவல்லோர் கண்ணிய நிலை யென்று மதனா லுணர்க வென்க. அன்றி, கடம் பந் தழை வயிற் கிடத்தப்பட்டவனைக் கடம்ப னென் றும், வேப்பந் தழையானு மலரானுந் தொடுத்த தொங்க லணிந்தோனை வேம்ப னென்றும்—இங்ங னம் பலபட வழங்குங் காரணக் குறிப் பெயர்கள் பலவுள வவற்றாற் றேர்ந்து தெளிக வென்க.

அற்றேல், ஆதொண்டன் மண்டலமெனல் வேண்டும்; தொண்டமண்டல மெனல் எங்ஙன மெனின்: நிறுத்த மொழிக்கண் ணீற்றுச் சிறப் புயர்திணை யாண்பாற் படர்க்கை விகுதி யாய அன் னென்பதன் னகர மெய் குறித்து வரு கிளவியோ டந் நிறுத்த மொழி பிளவுபட் டிரு சொன் னீர்மையிற் பொருந் தாப் புணர்ச்சியாய்ப் புணர்ச்சி யின்பம் பெறுமை நோக்கி, அவை யொன்றுபட் டொரு சொன் னீர்மை யிற் பொருத்தப் புணர்ச்சியாய்ப் புணர்ச்சி யின்பம் பெறற்பொருட்டு ஒத்த கிழத்திக்குங் கிழவோற்கும் புணர்ச்சி யின்பந் தோன்றற்பொருட் டகன்று நிற்கு முயிர்ப் பாங்கி போன் றகன்று நிற்பவும்; நிறுத்த மொழிக்கண் முதனிலை வேற்றுமை யொற்றுமை விரவுறுப் பாகாரம் பல்வயின் வழக்குத் தொகை யின்ப முதலிய நோக்கித் தொகுக்கப்பட்டுந் தொகா வியலின் ஞாபக விடய வுருவி னருகிக் கண்ணுற்று நிற்பவும்—தொண்டமண்டல மென்று வழங்கிற் றென்க.

இஃது இருவயிற்றோற்றம் சிறப்பாட்சியுடைமை பொருளடைச்சேர்பு ஒற்றுமைச்செறிவு ஒத்திசைப்பேறு நுனித்துணர்புணர்வு முதலிய நோக்கியலைப் பெற்றுத் தேயவழக்குச் சிறப்புடைச் சொற்றொடரிற் போந்த காரணக் குறிப் பெயரென்க.

தொண்டமண்டல் மெனிற் காரணக் குறி விளங்கப் புலப்பட லின்றாலோ வெனின்: மேற் சொற்

சுருங்கியன் முதலிய குறித்து வழங்குவித்தல் கவிஞர் கண்ணிய நிலை யென்றும், ஆதலிற் கூர்ந் தறிக வென்க.

கூர்ந்தறிதற் றன்மையது செய்யுள் வழக்கே யன்றிப் பாடை வழக்குத் தேய வழக்கு முதலிய வன்று லெனின்: இத் தொண்ட மண்டல மென்பது செய்யுள் வழக்கு முதற் பல்வகை வழக்கினும் பயின்று வாலானு முற்காலத்த தன்றிப் பிற்காலத்துக் காரணக்குறி யாக்கப்பெயராய் வழங்கலானும் புறப் பாட்டிற் பொருண்முடிபு வல்லுநரல்லார்க்கும் விளங்கப் புலப்படுதலானு மத னகப்பாட்டிற் செய்கை முடிபு முதலிய இயன்மாத்திரையே கூர்ந்தறிக வென்று மென்க.

இஃது செய்யுண் முதலிய பல்வகை வழக்கினும் பயின்று வருதன் முதலிய இச் சதக யாப்பின்கண் ணும் காஞ்சி மான்மியத்தைக் குறித்த காப்பிய முதலியவற்றின்கண்ணும் பாடை வழக்குத் தேய வழக்கு நகர் வழக்கு முதலிய வழக்கியற்கண்ணும் பல்வகைப் பெயர்க்கு மிலக்கணம் புலப்படுத்தற் கருவியாய முந்து நூன் முதலிய நூன் முடிபின் கண் ணும் வழக்குணர்ச்சிக்கண்ணுங் காண்க வென்க.

அற்றேற் கூர்ந் தறிக வென்ற வகப்பாட்டிற் செய்கை முடிபு முதலிய விளங்கப் புலப்படுத்துக வெனின் :—பயன் றரூஉந் தொழிலது புடைபெயர்ச் சிக்கண் ணுரிமை தோற்றி யுரிமையுடைமைக்கு முதலாய முதற்பொருளெஞ்சிநிற்ப அம் முதலாய முதற்

பொருட் டொழின் முடிபிட னேற்ற தன் ருெழிற் பய னுறுதற் கிடனாய செய்பொரு ளம் முதற்பொரு ளுேக்கிய் லொருபுடை யொப்பத் தொழிற்பயன் ருெற்றற் கிடனாய தரப்பொருள் வேற்றுமை யேற் றுத் தன்ருெழின் முடிபின் முற்றிப் புடைபெயர்ச்சி யி னுரிமை பெற்ற முதற் பொருண்மையி னுெப்புமை பெற்றுந் தன் புடைபெயர்ச்சியி னுரிமை யேற்று வேற்றுமை முதற் பொருட் காணத் தொழிற்பய னுறப்படூஉஞ் செய்பொருளைத் தன் கருமத் தொழிற் பயனுறப்படூஉஞ் செய்பொருளாப் புடைபெயர்ந் தத னுரிமை யேற்ற முதலாய முதற்பொருட்பாடு பெற் றும் வந்த விரிசொற் றெரிநிலே வினைமுற்ரு னணைந்த பெயர்க்கோணிலே நோக்காய—ஆதொண்டந் தழையிற் கிடத்தப்பட்டவன் ஆதொண்டைத் தழையிற் கிடத்தப் பட்டவன் ஆதொண்டந் தழையானு மலரானு மியற் றப்பட்ட மாலையைத் தரித்தவன் என்பன தன் வினை முதற் ருெழிற்பயன் ருெற்றுமிடனுந் தன் ருெழிற்பய னுறப்படூஉஞ் செய்பொருளு மிடனாக ஆதொண்டந் தழையன் ஆதொண்டைத் தழையன் என விரிசொற் குறிப்பு வினைமுற்ரு னணைந்த பெயர்க்கோணிலே நோக் காய்ப் பின்னர் இடப்பொரு ளவயவியுங் கருவிப் பொரு ளவயவியு மிடனாகப் பெற்று, ஆதொண்டை யென்பத னீற்றைகாரங் கெட் டஃ தூர்ந்த மெய்ம் மேல் விகுதி அன் னூர்ந்து ஆதொண்டன் எனக் குறுந்தடியுஞ் செம்பட்டு" மாயவாறு போற் ருெகை கிலே யேற்றுப் பெயரேயாய் நின்றது.

அல்லதூஉம், ஆசிரியர் தொல்காப்பியர் கூறிய

பனையு மரையு மாவிரைக் கிளவியு
நினையுங் காலை யம்மொடு சிவணு
மையெ னிறுதி யரைவரைந்து கெடுமே
மெய்யவ ணொழிய வென்மனார் புலவர்292

என்னுஞ் சூத்திரத்துள் நினையுங்காலை யென்பதனாற் றழை யென்னுஞ் சொல்வந்துழி தொண்டை யென்னுஞ்சொல் லிறுதி யைகாரங்கெட் டஃ தூர்ந்த மெய்ம்மே லம்முச்சாரியை யூர்ந்து நின்றதன்றே: அங்ஙனம் உயர்திணை யாண்பாற் படர்க்கை விகுதி யாய அன் னென்பதனை யேற்குமிடத் தத் தழை யென்ப தெஞ்சி யத் தழையிற் கிடத்தப்பட்டவ னென் றறிந்து கோடற் குறியாத் தழையாற் போந்த அம் முச்சாரியையின் மகரவொற்று நீங்க நின்ற அகரத்தின் பின்னர் அவ் வுயர்திணை யாண்பால் விகுதி அன் னென்பதி னகர நீங்க நின்ற னகர வொற் றடுத்து ஆதொண்டன் என் றாயது எனினு மமையும். இதனை, முதனிலை இறுதிநிலை இடைநிலை முதலிய பல்வகை யுறுப்புக்களிற் பல்வகை நோக்குடைப் பல்வகைப் பெயரும் செறிப்பிற் றிறப்பட நெறிப்படூஉம் வழக்கிற் பல்வகை விகாரத்தாற் செந்நிலைபெறாஉ மென விதித்த வுணர்வுடையோ ருயர் நெறி வழக்கா லுய்த் துணர்க.

இங்ஙனம், ஆதொண்ட னென்னும் பெயர் முதற் பொருண் முடிபு தன் முடிபிற் பெற்ற தன்றெழிற்

292. தொல்காப்பியம், எழுத்ததிகாரம், உயிர்மயங்கியல், அக.

பய னுறப்படுஉஞ் செய்பொருட் டன்மை யகப்பாட்டினும், உடைப்பொருட் பிறிதி னுரிமையுடைமைத் தன்மை புறப்பாட்டினும், உயர் பொருளடைச் சிறப்பிடப் பெயர் அவ் விருவயினும் பொருந்த நின்ற மண்டல மென்பதனோடு மருவும் வழி, மேல் வகுத்தவண்ணந் தன்னீறும் முதலுந் தொகுத்தலைப் பெற்றதென்க. அல்லதூஉம், முதலெஞ்சிநின்ற இப் பெயர் மண்டலத்தோ டணைந்தவழி விகுதி அன் எஞ்சி அம் முச்சாரியை பெற்று வருமொழி நோக்கி மகர மொழியத் தொண்டமண்டல மென் றாய தெனினு மமையும். இதனை ஆசிரியர் தொல்காப்பியர் கூறிய

அப்பெயர் மெய்கெடுத் தன்கெடு வழியு
நிற்றலு முரித்தே யம்மென் சாரியை
மக்கண் முறைதொகூஉ மருங்கி னான[293]

என்னுஞ் சூத்திர நோக்கத்தாற் காண்க வென்க.

ஆதொண்ட னென்பது தென்சொன் னோக்கு மண்டல மென்பது வடசொன் னோக்கு தம்முட் செறிவா னொத்தவேனும் பாடையா னொவ்வாமை பெறலின் அங்ஙனம் பெருமை நோக்கியும், முன் நிலையாய வந்நிலைக்கும் பின் னிலையாய விந்நிலைக்கு மிலச்சினையாத னோக்கியும், விசேடண விசேடியச் செந்நிலை மரபு நோக்கியும் இங்ஙன முதலு மீறுந் தொகுத்தலைப் பெற்ற தெனினும்; முதனிலை வண்ண வொற்றுமை இசையொற்றுமை உருபொற்றுமை நோக்கியும் இறுதிநிலை சிறப்புநிலை இனவொற்றுமை நோக்கியுந்

293. தொல்காப்பியம், எழுத்ததிகாரம், புள்ளிமயங்கியல், ௬௫.

தொகுத்தலைப் பெற்ற தெனினு மமையும். இஃ தின்னுங் கூறிற் பெருகும். ஆகலின் ஆசிரியர் தொல்காப்பியர் கூறிய

உணரக் கூறிய புணரியன் மருங்கிற்
கண்டுசெயற் குரியவை கண்ணினர் கொளலே 294

என்னுஞ் சூத்திரக் கருத்தா னமைக வென்க.

அன்றி, ஆதிநாராயணன் புரம் - நாரண புரம், ஆபூதன் மங்கலம் - பூத மங்கலம், பெரும்பற்றிநெற் புலிப்பாதன் பூசித்தவூர் - பெரும்பற்றிநெற் புலி பூசித்தவூர் - பெரும்பற்றப் புலியூர் - புலியூர் முதலிய பெயர்க்கோள்களையும்; புள்ளம் பூதன் குடி - பூதங்குடி, கொற்றன் குடி - கொற்றங்குடி, சாத்தன்குடி - சாத்தங்குடி, கொற்றன் மங்கலம் - கொற்ற மங்கலம், சாத்தன் மங்கலம் - சாத்த மங்கலம், வேடன் மங்கலம் - வேட்ட மங்கலம், வேடன் குடி - வேட்டங்குடி, சாத்தன் மங்கை - சாத்த மங்கை, விஜயன் மங்கை - விஜய மங்கை, கண்ணன் மங்கை - கண்ண மங்கை, கண்ணன் புரம் - கண்ணபுரம், கண்ணன் குடி - கண்ணங் குடி, சீராமன் விண்ணகரம் - சீராம விண்ணகரம், வரகுணன் மங்கை - வரகுண மங்கை, ஐயைபுரம் - ஐயபுரம் முதலிய பெயர்க்கோள்களையும்; நந்தன் மண்டலம் - நந்த மண்டலம், சேரன் மண்டலம் - சேர மண்டலம், சோழன் மண்டலம் - சோழ மண்டலம் முதலிய பெயர்க் கோள்களையும்—பற்றுகக் கொண் டமைக

294. தொல்காப்பியம், எழுத்ததிகாரம், புள்ளிமயங்கியல், ௧௧0.

வென்க. இதனைப் பிற்காலத்து மரூஉ வழக் கென்று கொள்வாரு முளராலோ வெனின், அங்ஙனம் கொள் வது மா பன்று; கொள்கினுங் கொள்க வென்க.

இத் தொண்ட மண்டல மென்பது பல் வகைப் புணர்ச்சிக்கும் பல் வகை வழக் கியற்கும் இயற்பா டின் னோசை முதலியவற்றிற்கும் ஒத்த நிலை யென்க.

இங்ஙன மன்றி, தொண்டை மண்டல மென்பாரு முளராலோ வெனின்: அங்ஙன மாறுபடக் கூறு வோர் நுண்ணிய அறிஞர் கண்ணிய நிலையும் மாற்றம் பொருளுறூஉ மாற்ற னிலையும் பல்வகைப் புணர்ப்பிற் செல்வகை நிலையுங் கடிபுகோ ணெறியின் முடிபுறூஉ நிலையு மிழுக்கறூஉம் பல்வகை வழக்கிய னிலையு மொரு வாற்றானு மோர்ந் துணர்கிலராய்ப் போலிய னிலை கோலுந ரென்க. என்னை? இலக்கண நுட்பங் கூர்ந்துய்த் துணர்தற் றன்மை யுளரே லங்ஙனங் கூறற் கியையா ராகலின்: அவர் சில வழூஉ நெறி வழக்குப்பற்றிக் கூறுதன் மாத்திரைய ரன்றி விவகரிக்கக் கடவால்லர்.

ஆயினும், அவர்க்கு மற்றவர்க்கும் அவ் வழக் கழி வழக்கே யன்றி யிழி வழக்கு மா மென் றுணர்ச்சி தோன்றற் கியாமே அத் தலைக்கண் ணின் றவர் கூற் றாக விவகரித் ததனை மறுக்கின்றாம்:—

அவர் கூற்றாக விவகரித்தல்—தொண்டைத் தழையானு மலரானு மியற்றிய மாலை யணிந்தவ னுண்ட மண்டல மாகலின், தொண்டை மண்டல மெனல் வேண்டும்.

அதனை மறுத்தல்—தொண்டை மண்டல மெனின்

கொவ்வைத் தூற்றை யுடைய மண்டல மென்றும் ஒரு வாறு ஆதொண்டைத் தூற்றை யுடைய மண்டல மென்றும் தெளி வின்றிக் கருதப்படுவ தன்றித் தொண் டைத் தழையானு மலரானு மியற்றிய மாலை யணிந்தவனு லாளப்பட்ட மண்டல மென்று கருதப்படுவ தன்று.

அல்லதூஉம், சேரன் மண்டலம் - சேர மண்டலம், சோழன் மண்டலம் - சோழ மண்டலம் என்பனபோ லிம் மண்டலத்திற்கு, முன்னர் துண்டீரனு லாளப் பட்டமையின் துண்டீரன் மண்டலம் - துண்டீர மண்ட லம், துண்டீரன் புரம் - துண்டீர புரம் என்றும்; பின் னர் தண்டகனு லாளப்பட்டமையின் தண்டகன் நாடு - தண்டக நாடு, தண்டகன் புரம் - தண்டக புரம் என் றும் பெயர் வழங்கின. அவை போல், அதன் பின்னர் ஆதொண்டனு லாளப்பட்டமையின், ஆதொண்டன் மண்டலம் - ஆதொண்ட மண்டலம் - தொண்டன் மண்டலம் - தொண்ட மண்டல மென்றே மரபு வழு வாமை வழங்கல் வேண்டும். இதற்குப் பிரமாணம்

முக்கணன் கணநா தர்க்கு முதன்மைத்துண் டீர னண்டு
மிக்கதுண் டீர னாடாய்த் தண்டக வேந்தன் றங்கித்
தக்கதண் டகனன் னாடாய்த் தபனன்மா குலத்துச் சோழன்
றொக்கதார்த் தொண்ட மான் காத் தாயது தொண்ட நாடே. 295

இங்ஙனம் பல் காப்பியங்களினும் பல பிரபந்தங் களினும், பிரபல வித்துவான்களாக முன்னிருந்த ஔவையார் கம்பன் ஒட்டக்கூத்தன் முதலானோர்கள்

295. இது ஒரு தனிப்பாடலாகத் தோன்றவில்லை.

பல் வகைக் காரணங் குறித்துச் செய்த பல் வகைச் செய்யுட்களினும், ஈண்டு முன்னும் பின்னும் வகுத் தமைக்குப் பிரமாணங்க ளிருக்கின்றன. அவைகளை விரிக்கிற் பெருகும். ஆகலின் அவற்றைத் தனித்தனி காண்டொறு மாங்காங் குணர்ந் தமைக.

அங்ஙன மன்றித் தொண்டை மண்டல மெனின்: சான்றோர் வழித்தாய மரபு வழுவி மயங்குவதூஉ மன் றிக் "காஞ்சி விருக்க முடைமையா னந் நகருடை வளா கத்திற்குக் காஞ்சி மண்டல மென்று வழங்கிற்று: அங் ஙனமே, தொண்டைத் தூறுடைமை பற்றித் தொண் டை மண்டல மென்று வழங்கிற் றிஃதே துணிபு" என்று திரிபு தோற்றும். அன்றித் தொண்டைத் தழையானு மலரானு மியற்றப்பட்ட தொங்க லணிந்த வோ ரரையனு லாளப்பட்ட மண்டலம் அவ் வரையனுக் குரிமை தோன்ற நிற்ற லின்றிப் பரம்பரையா னன்றி யிடைப்பாட்டாற் பெற்ற அத் தொண்டையை வேற் றுரிமையாகப் பெறற்கு எவ் வாற்றானும் பொருத்த மின்று. இதனைக் கல்வியிற் சாதாரணத் தன்மை யுடையோரும் "வாதராயண சம்பந்தத்தி னினம் போலும்!" என்று எள்குவர்; அன்றிக் "குமரியைக் கொண்டவனை விட்டுக் கூடவந்தவனோடு கூட்டியனுப் பியது போலும்!" என் றசதியாடுவர். என்னின், கற்று வல்லோர் முகப்பின் இஃ தென்னும்? இதன்கண் உரிமையின்மையும் பொருண்மையின்மையும் மரபுமின்மையும் வழக்கு மின்மையும் தகுதியின்மையும் உணர்ச்சியின்மையும் யூகமின்மையும் நியாய மின்மையும் கருத்துமின்மையும் முதலிய வின்மையின் றொகையே

புலப்படுகின்றன. ஆகலின், தொண்டை மண்டல மெனலமை வன்று; தொண்ட மண்டல மெனல் வேண்டும்.

அவர் கூற்றுக விவகரித்தல்—அஃதேல், அற்றன்று; பாண்டியன் மண்டலம் பாண்டி மண்டல மென்றாயதுபோல் தொண்டையன் மண்டலம் என்பது விகுதி அன் கெட்டுத் தொண்டை மண்டல மென்றாயது: ஆகலிற் றொண்டை மண்டல மெனல் வேண்டும்.

அதனை மறுத்தல்—பாண்டியன் மண்டலம் பாண்டிமண்டல மென்றாயது மரூஉ வழக்கு. இஃ தங்ஙனமன்று. மரூஉ வழக்காயினும் பாண்டி யென்பது குடிப்பெயர்க் கோளாய் அவ் வரையனையும் ஒற்றுமை யுரிமையா லம் மண்டலத்தையு மன்றி வேறு குறித்தலின்றி நிற்றலி னதினா லமைத்துக் கொள்ளப்பட்டது. தொண்டை மண்டல மென்பதை மரூஉ வழக்கி னமைத்துக்கொள்வே மெனின், இங்ஙனங் குறித்த லின்றிப் பல் வகையானும் வேறு குறித்து வழூஉ நிலையைப் பெறுகின்றது. என்னை? தொண்டைத் தழையானு மலரானுந் தொடுத்த தொங்க லணிந்தோனைத் தொண்டையன் எனின்; பிற்காலத்தின் மக்கள் வாலா றுணராமையின் "பெருந் தொண்டையனைத் தொண்டையனென்று வழங்கினர் கொல்? அன்றிப் புழைக்கையுடைமையாற் றும்பிமுகத்தவன் கொல்?" என் றையுறுதற்கும், தொண்டு ஐய னென்று பிரித் தேற்றபெற்றி கோடற்கும், ஒருவாற்றாற் கேள்வி யுடையோருங் "கொவ்வைத் தழையிற் புனைந்த மாலையுடை

யன்கொல்? ஆதொண்டைத் தழையிற் கிடத்தப்பட்ட வன்கொல்?" என் றையுற்று மயங்குதற்கும் இடனாய்ச் சொல்வலி பொருள்வலி இன்னிசைவண்ண முதலிய சிதைவுற நின்று வழூஉ நிலையைப் பெற்று மண்ட லத்தோ டணைந்து ஐயம் மயக்கம் கவர்கோண் முத லிய இழுக்கினை யேற்று வழுவினும் வழுவாய் நிற்றலா னும்; இங்ஙனம் வழங்கல் அறிஞர் வழக் கன் றாகலா னும்; இதனை வழூஉநிலை யென்றும். இஃது "உடற் றாய்மை கருதி நீராட் டுவந்து சென் றாண் டௗற்றி னழுந்திய தொக்கு" மென்று எள்குதற் கிட னன்றிச் சிறிது மமைத்துக் கோடற் கிட னன்று. ஆகலின், தொண்டை மண்டல மென லமை வன்று; தொண்ட மண்டல மெனல் வேண்டும்.

அவர் கூற்றாக விவகரித்தல்—அற்றேல், தொண் டை யென்பது ஆகுபெயராய் நின்று அரையனை யுணர்த்தி யுரிமை தோற்றி மண்டலத்தொடு புணர்ந்து தொண்டை மண்டல மென் றாயிற்று: அதனால் தொண்டை மண்டல மெனல் வேண்டும்.

அதனை மறுத்தல்—இடைப்பாட்டி னியதி யினை யின்றி வந்த கடம்பூர் என்பது கடம்ப விருக்கத்தை யுடைய வூ ரென்று தன் னளவே புலப்படுத்து மன்றி ஆகுபெயராய்க்கடப்ப மாலையைத் தரித்தவ னாரென்று பிறி தளவு புலப்படுத்துவ தின் று. என்னை? ஆகுபெயர் ஒன்றன் பெயரா னதற் கியை பிறிதைத் தொன் முறை யுரைப்ப தாகலின். அங்ஙனமே பாரம்பரையா னன்றி இடைப்பாட்டி னியதி யினை யின்றி வந்த தொண்டை

மண்டலத்தொடு புணர்ந்துழி தொண்டையை யுடைய மண்டல மென்று தன் னள வுணர்த்து மன்றித் தொண்டையை யுடையான் மண்டல மென்று பிறிதி னள வுணர்த்தற் கோர் வகையானும் வலி யின்று. இஃது "'யூக மின்றி ஒன்று குறித் தொன்று வரைய வொன்று பட்ட' தென்னு முலக வழக்கி னினம் போலும்!" என் றெள்குதற் கிடனும். ஆதலிற் றொண் டை மண்டல மென லமை வன்று; தொண்ட மண் டல மெனல் வேண்டும்.

அவர் கூற்றுக விவகரித்தல்—அற்றேல், தொண் டை யுடையனு லாளப்பட்டது தொண்டை யென்று ஈறுகெட் டை விகுதி யேற்றுச் சிறப்புப் பெயராய் மண்டலத்தொடு புணர்ந்து அங்ஙன மாயிற்று: ஆக விற் றொண்டை மண்டல மெனல் வேண்டும்.

அதனை மறுத்தல்—ஐ யீற்றின் ஐகார விகுதி போந்து கெட்டுப் புணரிற் குறியீ டின்மையிற் சிறப் பன்று; இங்ஙனம் புணர்த்தல் இயற்பாடு மன்று; அறி ஞர் மரபு மன்று. அங்ஙன மாயினும் தொண்டையை யுடைய தென் றுகு மன்றித் தொண்டை யுடையனு லாளப்பட்ட தென் றொரு வாற்றானு மாவ தன்று. அன் றிச் சோழ மண்டல முதலியவற்றோடு முரணும். அங் ஙன மமைதி யின்றிக் கூறினுஞ் சந்தி யின்பத்தான் நாகை பட்டினம் நாக பட்டின மென் றுயதுபோல், தொண்டை மண்டலம் தொண்ட மண்டல மென்றுதலே வேண்டும். இதனை முன்னர் விலக்கியவற்றுட் காண்க. இஃது பல் வகை யிழுக்கினுஞ் செல்வகைத்து. "இரும்

பொற் பூண் டரீஇச் சென்று கரும் பொற் றளை கை புகுத்தியதி னினம்!'' என் றெள்குதற் கிடனும். ஆக லிற் றொண்டை மண்டல மென லமை வன்று; தொண்ட மண்டல மெனல் வேண்டும்.

அல்லதூஉம், இங்ஙனம் தொண்டை யென்பது பல் வகைப் பொருட் கிடனுய பெயர்த் திரிசொல். ஆதொண்டை யென்பது தன் னளவே யுணர்த்தும் பெய ரியற்சொல். இங்ஙனம் திரி சொல்லாற் சிறப்புப் பெயர்க் காரணக்குறி செய்தல் வழக்கறிந்தோர் மர பன்று. இயற் சொல்லாற் காரணக் குறிப் பெய ரமைத்தலே யவரது மரபு. இஃது ஆதொண்டச் சக் கரவர்த்தி யென் று வழங்கும் அறிஞர் வழக்கா லறியப் படும்.

அவர் கூற்றுக விவகரித்தல் —அற்றேல், ஆதொண்டையன் என்பது மண்டலத்தொடு புணர்ந் துழி, முதலு மீறுங் கெட்டு அங்ஙன மாயிற்று: ஆக லின் தொண்டை மண்டல மெனல் வேண்டும்.

அதனே மறுத்தல்—ஆதொண்டையன் எனின், தொகையின்பமும் இசையின்பமும் செறிவுகோளு மின்றிப் புல்லென்கையானும், சுருங்கியற் பேரின்பங் குறித்து முன்னும் பின்னுந் தொகை செய் தமைத்த சான்றோர் ஒ ரெழுத்தா னீட் டியற் பெயர்ப்பாற் படுத்தி முடிபு வழூஉச் செயற் கியையா ராகலினும், இங் ஙனம் தொகுக்கப்படின் பொருளாட்சி முதலிய குன்ற வின்றிச் செந் நெறியிற் பெரும் பயன் றாலானும், அங் ஙன மமைத்தல் வழூவே யாம். இஃது ஆதொண்டை

யன் சக்ரவர்த்தி ஆதொண்டையச் சக்ரவர்த்தி யென்றது; ஆதொண்டன் சக்ரவர்த்தி ஆதொண்டச் சக்ரவர்த்தி யென்று வழங்கும் அறிஞர் வழக்கா லறியப் படும்.

அவர் கூற்றுக விவகரித்தல்—ஈண்டு ஆதொண்டைச் சக்ரவர்த்தி யெனின் வழூ வென் னெனின்.

அதனை மறுத்தல்—அங்ஙனம் பெறின், அவ்வரையற்கு ஆதொண்டையாற் காரணக் குறிப் பெய ரமைப்பான் கருதிய வன்றே கருதியதாதல் வேண்டும். அங்ஙன மின்றிப் பின்னர் செங்கோன்மை ஆண்மை முதலிய வண்மையுடைமை பற்றி முகமனு வமைக்கப் பட்டது ஆகலின், வழூஉ இங்ஙன மென்க. ஈண்டு ஆதொண்டன் சக்ரவர்த்தி ஆதொண்டச் சக்ரவர்த்தி யென்பது 'புடைப் புள கன்னிப் பொற் குலைக்கண்ணே இடைப்பிள வியையா விரட்டைப் பழம் போன்' றொரு பொருட்கிரு வயி னெழுந் திடைப் பிள வறியாச் சிறப்பினப் பெயர். ஆதொண்டன் சோழன் ஆதொண்டச் சோழ னென்பது மது. இதனை, தசரதன் சக்ரவர்த்தி - தசரதச் சக்ரவர்த்தி, நளன் சக்ரவர்த்தி - நளச் சக்ரவர்த்தி, புரூரான் சக்ரவர்த்தி-புரூரச் சக்ரவர்த்தி, சோழன் ராஜன் - சோழ ராஜன், சேரன் ராஜன் - சேர ராஜன், பாண்டியன் ராஜன் - பாண்டிய ராஜன், சோழன் மஹாராஜன் - சோழ மஹாராஜன், சைவன் சோழன்- சைவச் சோழன், குலோத்துங்கன் பாண்டியன் - குலோத்துங்க பாண்டியன், சோழன் மன்னன் - சோழ மன்னன், சேரன் மன்னன் - சேர மன்னன் என வழங்

கும் பல் வகை முடிபு வழக்குகளாற் றெளிந் தமையப் படும்; ஆகலின் ஆதொண்ட னெனல் வேண்டும்: ஆதொண்டைய னெனல் இழுக்கு. இங்ஙனம் இழுக் காய ஆதொண்டைய னென்பது முதலு மீறுங் கெட்டு மண்டலத்தொடு புணர்ந்து தொண்டை மண்டல மென் றாயிற் றெனினும், மேற் குறித்த பல் வகை வழூஉக்கட்கும் பேரிடனாகத் தக்கது. "'இட னறிந்து பிருண்டாத் தின வுண்ணி யெரிவிற் புழுங் கிற்று' என்பதற்கும், 'கருத் தறியாமற் கலப்பான் புகுந்து அருத்த மிழுக்குமா' லென்பதற்கு மினம்!" என்று எள்குதற் கிடனும். ஆகலிற் றொண்டை மண் டல மெனல் வழூஉ; தொண்ட மண்டல மெனல் வேண்டும்.

அவர் கூற்றுக விவகரித்தல்—தொண்டைக்கா டுடைமையாற் றொண்டை மண்டல மெனல் வேண்டும்.

அதனை மறுத்தல் — இங்ஙனம் தொண்ட மண் டல வரலாற்றை வகுக்குங் காப்பியத்திற் கண்டதே யன்று; இவ்வா றுண் டென் றறிஞரா னிதுகாறி யாங் கேட்டது மின்று: ஆகலின் வழூவாம். இஃது 'வழி யறியாக் கன்று குழி வழியாச் சென்' றென்பதற் கினம். இங்ஙனம் வழியறியாது மொழியினும், பொய் கூறினும் பொருந்தக் கூறுக வென்னு மிழிந்தோர் வழக்கின்கண்ணு மேற்புடைத் தன்று. என்னை யெனின் காஞ்சி தில்லை என்னு மரப் பெயர்கள் ஒற்றுமை யுரிமை குறித்து காஞ்சியைக் கண்டு தில்லையை யடைந்தா னென்று வழங்கப்படுகின்றன. அங்ஙனம் தொண்

டையைக் கண்டு என்று எவ் வகை வழக்கினும் வழங் கப்பட்ட தின் ருகலி னென்க. இதனலுந் தொண்ட மண்டல மெனல் வேண்டும்.

அவர் கூற்றுக விவகரித்தல்—தொண்டைமான் என்னும் பெயருள் வேற்ருே ரரைய னிருந் ததிகரித் தமையின் தொண்டைமான் மண்டல மென்பது மான் கெட்டு அங்ஙன மாயிற்று; ஆகலிற் ருெண்டை மண் டல மெனல் வேண்டும்.

அதனை மறுத்தல்—இங்ஙனம் புணரினும், மேற் குறித்த வழூஉ நிலைகட் கிடனும்.

அன்றித் தொண்டைமா னென்பதே வழு. என்னை? தொண்டைமா னென்பது தனி மொழி தொடர் மொழி யென்பவற்று ளெம்மொழி? விடை: தனி மொழி. வி: தனி மொழியாயின் இதற்கு முதனிலை இறுதிநிலை இடைநிலை என்னை? விடை: தொண்டை - முதனிலை, ஆன் - கடைநிலை, மகரம் - இடைநிலை யாம்.

அதனை மறுத்தல்—என்னின் முதனிலைக்கும் இறுதிநிலைக்கும் இடைப்பா டொத்து நிற்பது இங்ஙனம் வரூஉம் பெயர்கட்கு இடைநிலை. ஈண்டு முதனிலையீற் றைகாரக் குறுக்கம் விலங்கிப் பொருத் திசைப்ப விடைப்பா டின்றி யிறுதி நிலையோ டிணைந்து வேறு குறித்தலி னிடைநிலையி லமை யின்று. அன் னீறன்றி ஆ னீறு ஆறிறந்தன்றி யைந்திறந் தியையுந் தொடர் மொழிப் பெயர்க் கன்றி இங்ஙனம் உரித்தாவ தன்று, நயப்பாடின்மையின். ஆகலின் இறுதி நிலை யியலு மமை

வின்று. விகாரத்தால் வேறு குறித்தலின் முதனிலை யியலு மமை வின்று.

அல்லதூஉம், இஃ திடைநிலை யாயின், கோமான் என்பதற்கும் அங்ஙனம் இடைநிலை யாகல் வேண்டும். அங்ஙன மாயின், கோ-ம்-ஆன்: இவற்றுள், கோ - அரையன் என்னின், ஆன் விகுதி அதிகரிப் பின்றி மூங்கை போலும் யானை யுண்ட கனி போலும் பெயர்ச் சியும் பயனு மின்றி வற்றன் மாணி னின்றது. ஆகலின் இஃது இங்ஙன மன்று; ஆகலின் அஃது அங்ஙனமன்று. இஃது 'கைபட லறியான் பொய்பட லொன்றோ'296 வென்பதற் கினம். ஈண்டு, தொடர் மொழியாய்க் கோன்மன் - கோமான் என நிலைமொழி யீறு கெட்டு வருமொழி முத னீண்டது. இதனை வழுதிமன் என் னுங் காப்பிய வழக்கானுங் கண் டுணர்க. அன்றி, கோன் மஹான் - கோமான் என நிலைமொழி யீறு கெட்டு வருமொழி வடமொழி யாதலின் விகாரம் பெற்றுக் கோமான் என் றாயது. அன்றி, கோன்மான் என நிலைமொழி யீறு கெட்டுக்கோமா னென் றாயது. இங்ஙனமே தொண்டன்மன் - தொண்டன்மஹான் - தொண்டன்மான் என்பன தொண்டமா னென் றாயது. மன் மஹான் மான் என்பவைக்குப் பெருமையுடையவ னென்பது பொருள். ஆகலின், தொண்டைமா னெனல் வழு; தொண்டமா னெனல் வேண்டும். இங்ஙனமே

296. பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப்
பேதை வினைமேற் கொளின்.

—திருக்குறள், பேதைமை, க.

சேரன்மான் - சேரமான், மலையன்மான் - மலையமான் முதலியவுங் காண்க. ஆகலின் மண்டலத்தோடு கூடிய வழி தொண்ட மண்டல மெனல் வேண்டும். அன்றி, தொண்டனு டெனல் வேண்டும்; தொண்டைநா டெனல் வழூஉ. என்னை? சேரன் நாடு - சேரனுடு, சோழன் நாடு-சோழனுடு, பாண்டியன் நாடு - பாண்டிய னுடு, மலையன் நாடு - மலையனுடு என்பது போல், தொண்டன் நாடு-தொண்டனுடு எனல் மரபு ஆகலின். தொண்டனுடு எனில் அடிய னென்ன முதல் வேறு குறிக்குமே யெனின், அங்ஙனங் குறிப்பதில் ஆற்றலு மின்று பயனு மின்று. என்னை? ஆ வென்பது கரண விடயமாக நின்று உரியானைக் குறிக்கின்ற தாகலின்; அன்றி, உடையானை யன்றி உடைமை குறித்த லின் ருகலி னென்க.

இங்ஙனம் பல்வகையாற் சொல்வகை செய்த லென்? தொண்டை மண்டல மெனின் மேற்குறித்த வண்ணம் உரிமைமலைவு பொருண்மலைவு மரபுமலைவு வழக்குமலைவு தகுதிமலைவு உணர்ச்சிமலைவு யூகமலைவு நியாயமலைவு கருத்துமலைவு ஐயங்கவர்கோள் மயக்கம் வேற்றுக்குறிப்பு வேற்றுரிமைநிலைமை நியதியின்மை இயைபின்மை சொல்வலிச் சிதைவு பொருள்வலிச் சிதைவு பொய்க்கோள் அனர்த்தம் இன்னிசைவண் ணச்சிதைவு பிளவுபாடு முதலிய பல்வகை வழுக்கட் கிடனும்.

அன்றி, ஆதொண்டை யென்பத னீற் றைகாரக் குக்கறுங் குற் றவுகே பெற்றது. தொண்டை யென்

பத னீற் றைகாரக் குறுக்கங் குற்றலகோ டொற்ற லகு பெற்றது. என்னை? ஆதொண்டை: ஆ-தொண்டை: ஈரலகு-ஓரலகு-அரையலகு-முதலிடைப்பாடு இரு கலை - நடுவிடைப்பாடு காற்கலை - கடையிடைப் பாடு முக்காற்கலை ஆகலின், ஆதொண்டை யீற் றைகாரக் குறுக்கங் குற் றலகே பெற்றது. தொண்டை: தொண்டை: ஓரலகு-அரையலகு-முன்னிடைப்பாடு காற்கலை-பின்னிடைப்பாடு அரைக்கலை ஆகலின், தொண்டையீற் றைகாரக் குறுக்கங் குற் றலகோ டொற் றல்கும் பெற்றது. இங்ஙனம் தொண்டை மண்டலத் தோடு புணருங்கால், மண்-ட-ல-ம்: ஓரலகு-அரையலகு-ஓரலகு-அரையலகு - நான் கிடைப்பாடு: கால் - கால் அரை - அரை பெற்று வேற்றிசை விரவி நிற்றலின், புணர்ச்சியிடை ஐங் கலையைப் பெற்றுப் பிரிந்து வேறு குறிக்கின் றது ஆகலினும், தொண்டை மண்டல மெனல் வழு; தொண்ட மண்டல மெனல் வேண்டும்.297

இங்ஙனம் பெயர்க் கோள்கட்கு இயற்சொற் பெயர் முதலிய, சொல்திரிப் பெயர் முதலிய, செஞ் சொற் பெயர் முதலிய, சாதிகூற்றுப் பெயர் முதலிய, ஒரு மொழிப் பெயர் முதலிய, உயர்திணைப் பெயர் முதலிய, பாற்பெயர் முதலிய, பொதுவிற் பொதுப் பெயர் முதலிய, தன்மைப் பெயர் முதலிய, வழக்குப் பெயர் முதலிய, வெளிப்படைப் பெயர் முதலிய, வரை

297. இப் பத்தியில் கண்ட இலக்கண நுட்பம் வல்லாரது ஆராய்ச்சிக்கு உரியது.

யியனடைப் பெயர் முதலிய, உயருரிமைப் பெயர் முதலிய, சிறப்பு நிலைப் பெயர் முதலிய, சித்துப் பொருட்பெயர் முதலிய, இடுகுறிப் பெயர் முதலிய, மரபு நிலைப்பெயர் முதலிய, எழுத்துத் தொடர்ப்பெயர் முதலிய, பொருணிலைப் பகுபதப் பெயர் முதலிய, பெருஞ் சொல்லாட்சிப் பெயர் முதலிய, முதனூல் வாய்பாட்டுப் பெயர் முதலிய—இவை முதற் பெயர்ப் பாகுபாடுகளி னிலக்கணங்களும்; எழுத்துப் புணர்ச்சி, பதப் புணர்ச்சி, தொடர்புப் புணர்ச்சி, பொருட் புணர்ச்சி, வண்ணப் புணர்ச்சி, அளபுப் புணர்ச்சி, இயைபுப் புணர்ச்சி, சமநிலைப் புணர்ச்சி, கலவைப் புணர்ச்சி, தெரிநிலைப் புணர்ச்சி, குறிப்புப் புணர்ச்சி, வேற்றுமைப் புணர்ச்சி, ஒற்றுமைப் புணர்ச்சி, சிறப் புடைப் புணர்ச்சி, பொதுவுடைப் புணர்ச்சி, இருமைப் புணர்ச்சி முதலிய புணர்ச்சி யிலக்கணங்களும்—கூர்ந் துணரார்க்குத் தொண்ட மண்டல மென்பதி னிலக் கணமும் புலப்படுவ தன்று.

இங்ஙன முணரமாட்டாதார்—ஆதொண்டச் சக்ர வர்த்தி யென்பவர் தா மரசு செய்யுங் காலத்தில் தம்மாற் கட்டுவித்த ஆலயங்களிற் றம் பெய ரிலச்சினை சிலை யின்கட் பொறிப்பித்தனர்; ஆண்டும் ஆதொண்ட வென்றே இலக்கண வமைதி பெற் றிருக்கின்றது: இதனை—திருவலிதாயம் திருமுல்லைவாயல் முதலிய சிவ தலங்களிற் சென்றேனுங் கண்டு தெளியக் கடவர்.298 இஃ தின்னுங் கூறிற் பெருகும்.

298. அநுபந்தம் பார்க்க.

தொண்ட மண்டல மென்பதைத் தொண்டை மண்டல மென்று இச் சென்னை நகரி லிருக்கின்ற வித்து வான்களிற் சிலர் மாறாக வழங்க, அது குறித்துச் சில பிரபுக்களும் வித்துவான்களும் உபாத்தியாயர்களும் "இவ் விரண்டில் இலக்கண வமைதியும் உலக வழக்கு முள்ளது யாது? அதனை யொருவாறு தெரிவிக்க வேண்டும்" என்று கேட்டுக்கொண்டபடி,

சிதம்பரம் இராமலிங்கபிள்ளை யவர்களாற்
றெரிவிக்கப்பட்டது.[299]

1. நூற்பெயர் இலக்கணம் முற்றிற்று.

---

299. 291-வது அடிக் குறிப்பைப் பார்க்க. ஸ்ரீ சுவாமிகள் இங்குக் கையாண்டிருக்கும் வியாக்கியான முறையின் தனித்தன் மையை வல்லாரின் வல்லவர் எவரும் ஆராய்ந்துணர்வார் என்பதில் ஐயமில்லை.

## 2. வழிபடு கடவுள் வணக்கப்பாட் டுரை

### வழிபடு கடவுள் வணக்கம்

*ஆசிரிய விருத்தம்*

கொண்டலை நிகர்க்கும் வேளாண்
    குடியொடு தழீஇய தொண்ட
மண்டல சதகந் தன்னை
    வளமையான் வகுப்ப தற்குப்
புண்டர நுதலி ரண்டு
    புயமிசை யிருந்தி ரண்டு
குண்டல நிகரி ரண்டு
    குமரரை வணக்கஞ் செய்வாம்.[300]

கொ . . . ம்[301]: இச் செய்யுள்—வியனுறு மெதிரா தூஉம் விழாக் கொடையும் பயனுறாஉந் தொழிலும் பழியாப் பண்பும் வாய்மையு மறிவு மாஅண்பு மாண் மையும் தூய்மையும் பொறையுந் தோலூற்றமு மன்பு முளங்கொ ளிரக்கமு மொழுக்கமு முதலா விளங்கு விழுக்குடி வேளாண் குடியே இத் தொண்ட மண்டலத் திற் பெரும்பாலு மிறைகொளப்பட்டுத் தம் வளமையா

---

300. இது சதகத்தின் காப்புச் செய்யுள். பின்வரும் இதன் சீரிய உரையும் ஸ்ரீ சுவாமிகளால் இயற்றியருளப் பட்டதே. 291-ம் அடிக் குறிப்பைப் பார்க்க.

301. "கொ.....ம்" என்றது "கொண்டலை" என்பதை முதலாகவும் "செய்வாம்" என்பதை இறுதியாகவும் உடைய மேற் குறித்த செய்யுள்.

னீண்டுறாஉ மற்றைக் குடிகட்கும் இம் மண்டலத்திற்கும் வளமை தோற்றிற்று—அஃது நெறிப்பானுஞ் செறிப்பானுந் தோன்ற வழிபடு கடவுட் பாரதுயப் புலப்படுத்துவ லென்று புகுந்தமை யுணர்த்துகின்ற தென்க.

எங்ஙனமெனின், "கொண்டலை நிகர்க்கும் வேளாண் குடியொடு தழீஇய தொண்ட மண்டல சதகந் தன்னை வளமையான் வகுப்பதற்குக் குமரரை வணங்குவா" மென்ற தாய்த் துணர்கவென்க. இஃது வற்புறுத்தற்கு வேளாண் குடியை யளவை முகத்தான் வெளிப்படையின் விளங்க வைத்து மற்றைக் குடிகளை வேற்றுரு பொடுவிற் பாரமுகத்தாற் குறிப்பின்கட் சார்த்தி வைத்ததே யமையு மென்க. விளங்கு விழுக் குடி வேளாண் குடி யென்றதனு லன்றே அங்கையிற் கனி போன் றிங்ஙனம் பெற்றும்.

அஃ திண் டெற்றுற் பெறுது மெனின், கொண்டலை நிகர்க்கும் வேளாண் குடி யென்றதனாற் பெறுது மென்க. எங்ஙன மெனின், கொண்டலை-பருவப் புயலை, நிகர்க்கும் - ஒக்கும், வேளாண் குடி - வேளாண் குடிப் பிறப்பினர் எனவே: வேளாண் குடிப் பிறப்பினர் கைம்மாறு கனவினுங் கருத லின்றி வரையாது வழங்கும் வள்ளற்றன்மை யுடையா ரென்றும்; எவ் வாற்றானுயர்ந்தோர்கட்குந் தம்மை யன்றி உலகிய னடத்தப் படாச் சிறப்புடைக் கருவியாந் தன்மை யுடைய ரென்றும்; இங்ஙனம் வையகத்தார்க் கன்றி வானகத்தார்க்குங் குன்று நன்றி குயிற்றுந ரென்றும்; தம்மானே

யன்றித் தங் கருவியானுங் கருமத்தானும் எவ்வெவ் வளாகத் தெவ்வெவ் வுயிர்கட்கு மின்பந்தருஉ மியலின ரென்றும்; ஆன்ற கல்வி, ஊன்று கேள்வி, சான்ற வுணர்ச்சி, என்ற ஒழுக்க முதலிய உயர்நெறிக் குன் றத் தும்ப ரிம்பர் பல்காற் பயிலுறும் பாங்கின ரென் றும்; தொன்னெறி யரையர்க்குத் துணைவராகிப் பகைப் புல னடுங்கிய படர்ந் தெதிருறீஇ வாய்விட் டார்த்து வாள் புடைபெயர்த்து விற் புடைத்தழீஇப் பொற் பொடுபெய்யு மாண்மைய ரென்றும்; தண்ணளி யுருக் கொடுதாங்கிச் செங்கோ னிலைபெறச் செய்யுந் தலை மைய ரென்றும்; எத் திறத்தவரு மெதிர்கொடு பராஅய்ப் பற்பல திறப்படூஉம் பரிசிற் பழிச்ச உயரிடத் தோங் கிய பெயருள ரென்றும்; கடவு ளாணையிற் கடவாச் செறிவும் யாவரு மதிக்கு மேளருடைமையும் புலவாரற் புனையும் புகழி னீட்டமுங் களக்கறு மொண்மையும் விளக்குறு பசுமையும் பொய்யா மாற்றமும் போக் கறு தோற்றமு மின்சுவை நிறைவு மெத்திற நலனு முடைய ரென்றும்—உவமைக் குறிப்பாற் பெறப் படுதலின் இங்ஙன மென்க. ஈண்டு வகுத்தவை கொண்டலின் கண்ணு முய்த் துணர்ந்து கொள்க. இஃது வகுத்த தன்றி விரிப்பிற் பெருகும்.

இனி, கொண்டலை நிகர்க்கும் வேளாண்குடி என் பதற்குக் கொண்டல் - கொண்டலை நடாத்தும், ஐ - தலைவனாகிய இந்திரனை, நிகர்க்கும் - ஒத்த, வேளாண் குடி - வேளாண் குடிப்பிறப்பினர் எனினு மமையும். இங்ஙனம் பெறுங்கால், வேளாண் குடிப் பிறப்பினர்

தமது நல்லொழுக்க மென்னு மாணையாற் கொண்டலை யாங்காங்குப் பெய்வித்து நடத்தலும், ஐவகைத் திணையினு முய்வகைத் திணையாய மருதத்திணையை வளம்படுத்துக் காத்தலும், வேளாண் வேள்விக்கு வேந்தாதலும், வீழாது தரூஉம் வேளாண்மைக்குரிய கருவியை யுடையாதலும், யாவரானும் விரும்பப்படூஉ மியற்கைய ராதலுங் கொள்க. ஈண்டு வகுத்தவை இந்திரன்மாட்டு முய்த் துணர்க. இஃதும் விரிப்பிற் பெருகும்.

அன்றி, கொண்ட லென்ப திலக்கணையாற் காவற் கடவுளாய விண்டுவாகக் கொண்டு அக் கடவுளை யொத்த வேளாண்குடி யெனினு மமையும். இங்ஙனங் கொள்ளுங்கால், வேளாண்குடிப் பிறப்பினர் நடுநின் றெவ்வெவ் வுயிர்க்கு நுகர்ச்சி வருவித்தலும், பகைப்புலன் முருக்கிப் பாதுகாத்தலும், திருவிற் பொலிந்த சிறப்புடைய ராதலும், இன்சுவை யமுத மிரந்தோர்க் கீதலும், பூமகட் குரிமை பூண்டு நிற்றலும் சத்துவத் தனிக்குணத்தானே பயிறலும், ஊக்கமுஞ் செவ்வியு முடைய ராதலுங் கொள்க. ஈண்டு வகுத்தவை விண்டுவின் மாட்டு முய்த் துணர்க. இஃதும் விரிப்பிற் பெருகும்.

கொண்டலை நிகர்க்கும் வேளாண்குடி யென விரியுவமையின்கண் ணுவம வுரு பன்றியை யுருபும் விரித்த திங்ஙனம் விரிப்பதற்குக் குறியுணர்த்த வென்க. உவமைக்கும் பொருட்கு மொரு நோக்கத்தா னன்றிப் பலபட வகுத்த தெற்றா லெனின், 'உவமைப்

பொருள் புகழ் பொருண் மிகை குறித் தழுக்கற்று மூராணுதற் குறியா நிகர்க்கு மென்னுந் தடுமா றுவம வுருபு விரித்தமையி னென்க. என்னை? ஆசிரியர் தொல்காப்பியர் உவம வுருபுகளை வகுத்து முடிபு செய்யுமிடத்து, "கடுப்ப வேய்ப்ப"[302] வென்னுஞ் சூத்திரத்தா னிகர்ப்ப வென்பது மெய்யுவம வுருபென்று வகுத்தவண்ண மவ் வுருபு ஈண் டஃ தேலாது தொழில் பயன் முதலிய வேற்ற தாகலின். அஃதே லிஃ தியாண்டும் வரைத லின்றோ வெனின் "தடுமா றுருபுக டாம்வரை யின்றே"[303] யென்ப வாகலின் விரும்புமிடத் தின் றெனக. அன்றி இஃ தழுக் கற்று மூராணுதற் பெயர்ச்சிக்கட் போந்த வெச்சம் போறலி னங்ஙனங் குறிக்கவைத்த தெனினு மமையு மென்க. இவ் வுவமை நோக்கைச் "சுட்டிக் கூறா"[304] வென்னுஞ் சூத்திர நோக்கத்தானுங் காண்க. உவமை யும் பொருளு மொத்தல் வேண்டு மென்றவா றுத்த

---

302. "கடுப்ப வேய்ப்ப மருளப் புரைய
வொட்ட வொடுங்க வோட நிகர்ப்பவென்
றப்பா லெட்டே மெய்ப்பா லுவமம்" என்பது
தொல்காப்பியம், பொருளதிகாரம், உவம இயல், ௰௫.

303. "தடுமா றுவமங் கடிவரை யின்றே" என்பது
தொல்காப்பியம், பொருளதிகாரம், உவம இயல், ௩௫.

304. "சுட்டிக் கூறா வுவம மாயிற்
பொருளெதிர் புணர்த்துப் புணர்ந்தன கொளலே"
—தொல்காப்பியம், பொருளதிகாரம், உவமஇயல், எ.

வண்ண முய்த்துணர்க. அன்றி உவமப்போலி மறுக்கப் படா வாகலி னீண்டவற்றுள்ளு மேற்பன விரும்பினு* மிழுக்கின் றென்க. இஃ தின்னும் விரிக்கிற் பெருகும்.

கொண்ட லென்பது விரவு மிகையொலிக் காப்பிய வழக்குத் தொடரியற் பால்பகா வஃறிணைப் பல் பொருள் குறித்த வொருபெயர்த் திரிசொல். ஈண்டுச் சிறப் புய ருரிமைக் கருவி யவயவப் பொது நிலைப் பூதப் பொருட்டாகிய மேகத்தை யுணர்த் திற்று.

வேளாண்குடி யென்பது உயர்நிலைக் காப்பிய வழக்குச் சொன்னடைச் சிறப்பு முன்னிலைக் காரணம் பின்னிலை யிடுகுறிச் சாதிக் கூற்றுத் தொடர் நிலை கருத்துப் பொருட்புறத் துயர்திணைக் காட் சிப்பொருட் பன்மைத் தோற்றத் தன் மொழித் தொகைச் சொற்றொடர். இதனை வேளாண்மைக் குரிய குடிப்பிறப்பின ரென்று விரித்துக் கொள்க. வேளாண்மை நன்றி ஈகை வேளாண்டொழின்மை முதலிய பல்பொருள் குறித்த வொரு சொல். அஃது வேளாண்டொழி லுடைமையா னன்றி ஈகை முதலிய நற்செய்கை யுடைமைக்கு முரிய வோர் குடிப் பண்பாயிற்று. குடி யென்பது குலம் ஊர் முதலிய குறித்த வோர் சொல். அஃ தீண்டு குலத்தின் மே னின்றது. அன்றி மருதத்திணை யூரென்பது மொன்று. வேளாண்டொழில் என்பதில் வேள் என்பது நன்னிலம், ஆண் என்பது உரிமைத்தலைமை,

* விருப்பினை (?)

தொழில் என்பது முயன்று முடித்தல்: இதனால் நன் னிலந் திருத்திச் செந்நெறி பொங்கப் பைங்கூழ் விளைக்கு முரிமைத் தலைமைத் தொழில் என்பது பெறப்பட்டது. அல்லதூஉம் வேள் என்பது விரும்பப்படுகை, ஆண் டொழில் - ஆண்மைத்தொழில்: இதனால் அரையரால் விரும்பப்படூஉம் மந்திரித் தலைமை சேனைத் தலைமை யென்னும் ஆண்மைத் தொழிலுடையோ ரென்பதூஉ மமையு மென்க. இதனையுடைய குடிப்பிறப்பினர் வேளாண் குடிப்பிறப்பினர் வேளாள ரென்க. இவ் வேளாண் குடிப்பிறப்பினர் ஈகை முதலிய நற்செய்கை களின் மிக்கா ரென்பதற்கு வேறு கூறவேண்டுவ தின்று: இவர் குடிப்பெயரே தக்க சான் றென்க. அன்றி அந்தணர் அரையர் வணிகர் முதலியோர் தத் தமக் குரிய வொழுக்கங்களை நடத்தற்கு வேளாண் குடிப் பிறப்பினரது உதவி முற்றும் வேண்டுதலின், இவர் நெறி பெருநெறி யென்பதற்கு மஃதே சான் றென்க. இதனைத் தொல்காப்பியத்தில் "நாற்றமு"305 மென்னுஞ் சூத்திரத்துள் "வேளாண் பெருநெறி" யென்றதனாற் காண்க. அன்றி யிவர்க் கித் தொழி லுரிமைச் சிறப் பென்பதூஉம் இவரது மேம்பாட்டுத்

305. தொல்காப்பியம், பொருளதிகாரம், களவியல், உ௩: "வேளாண் பெருநெறி வேண்டிய விடத்தும்" என்பதற்குத் "தலைவற்குத் தாஞ்சில கொடுத்தலை தலைவி வேண்டிய விடத்தும்" என்று பொருள் கூறுவது காண்க.

தன்மையையு மாபியலிற்[306] காண்க. இதனை விரிக்கிற் பெருகும்[307].

2. வழிபடு கடவுள் வணக்கப்பாட் டுரை முற்றிற்று.

---

306. தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல்,

அய. வேளாண் மாந்தர்க் குழுதூ ணல்ல
தில்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி.

அக. வேந்துவிடு தொழிலிற் படையுங் கண்ணியும்
வாய்ந்தன ரென்ப வவர்பெறும் பொருளே.—

என்பன காண்க.

307. 291-வது அடிக் குறிப்பைப் பார்க்க. வேளாண்மைச் சிறப்பினை நயம்பட வகுத்துரைக்கும் இவ்வியாக்கியானத்தை ஆராய்ந் துணர்க.

# 3. சுவாமிகள் பதிப்பித்த தொண்ட மண்டல சதக[308] மூலமும் அவர்கள் அதன் சார்பாக எடுத்துக்காட்டிய மேற்கோள்களும்[309]

## தொண்ட மண்டல சதகம்

*கட்டளைக் கலித்துறை*

சீர்கொண்ட கச்சித் திருவேகம்
பத்தான் செல்வமுக்கட்
கார்கொண்ட மும்மதத் தைங்கரந்
தாங்கிக் கடவிகடப்
பேர்கொண்ட சக்கரப் பிள்ளையைத்
தான்பெற்ற பேறதனால்
வார்கொண்ட கீர்த்தி படைத்ததன்
றேதொண்ட மண்டலமே. க

---

308. 1899-ம் வரு-ப் பிரதியில் தலைப்பும் இறுதியும் தொண்ட மண்டலமென்றே எழுதியிருக்கிறது. முதற்பாட்டுக்களிலும் முதற்கண் அங்ஙனம் எழுதியிருப்பதைப் பிறகு தொண்டைமண்டலமென்று மாற்றியிருக்கிறது. 291-வது அடிக்குறிப்பைப் பார்க்க.

309. ஸ்ரீசுவாமிகள் பதிப்பில் உள்ள சதக மேற்கோள்கள் அத்தனையும் அவர்களால் முதன்முதல் எடுத்துக் காட்டப்பட்டனவா அல்லது அவர்களுக்குக் கிட்டிய ஏட்டுப் பிரதியிலேயே இருந்தனவா அல்லது அங்ஙனம் இருந்தவற்றை அவர்கள் ஆராய்ந்து கூட்டியும் குறைத்தும் பதிப்பித்தார்களா என்பனவற்றைக் குறித்துக் கிடைத்த ஆதாரங்களைக் கொண்டு வேறெதுவும் திட்டமாய்க் கூற முடியவில்லை. 291, 310, 319-வது அடிக்குறிப்புகளையும் ஆங்காங்குள்ள மேற்கோள்களைப் பற்றிய சிற்சில அடிக்குறிப்புகளையும் கொண்டு ஒருவாறு ஆராய்க.

மேற்கோள்[310]

ஸ்காந்தம்

கலி விருத்தம்

திகட சக்கரச் செம்முக மைந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயக
னகட சக்கர வின்மணி யாவுறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்.[311]

---

சேவடி செய்வ தறியாத
மாவலி முன்புசென்று
மூவடி வேண்டுந் திருமான்
மருகனிம் மூவுலகும்[312]
காவடி யாக வொருகலி
மேவிய காஞ்சிபுர
மாவடி மேவும் பெருமான்
பதிதொண்ட மண்டலமே. க

மேற்கோள்

ஸ்காந்தம்

ஆசிரிய விருத்தம்

மூவிரு முகங்கள் போற்றி முகம்பொழி கருணை போற்றி
யேவருந் துதிக்க நின்ற விராறுதோள் போற்றி காஞ்சி

---

310. 1887-ம் வருடப் பதிப்பில் சதகப் பாட்டினை ஒட்டிய மேற்கோள் என்ற ஒரு பகுதியே இல்லை. பதிப்பாசிரியரது பொழிப்புரையினூடேதான் மேற்கோள்கள் காணப்படுகின்றன.

311. விநாயகர் காப்பு. இது 1887-ம் வருடப் பதிப்பில் இல்லை. இனி, வருஷம் குறித்த விடத்தெல்லாம் அவ்வருஷப் பதிப்பையோ அல்லது பிரதியையோ கொள்க. 312. அம்மூவுலகும்—1899.

மாவடி வைகுஞ் செவ்வேண் மலரடி போற்றி யன்னான்
சேவலு மயிலும் போற்றி திருக்கைவேல் போற்றி போற்றி.313

---

கயிலையுங் கச்சியும் விற்கோ
லமுநற் கழுக்குன் றமும்
பயில்வலி தாயமும் பாசூரு
மச்சிறு பாக்கமுநல்
லயிலையும் வல்லந் திருவொற்றி
யூரு மரசிலியு
மயிலையு மீசன் மகிழ்ந்ததன்
றேர்தொண்ட மண்டலமே. ரு

மேற்கோள்

1.

கட்டளைக் கலித்துறை

ஈரைட் டிரண்டு மலைநாட்டி
லொன்றுகொங் கேழுவையை
வாரைட்டீ ரேழ்நடு நாட்டெழு
மூன்றொன்றைந் தாம்வடக்கிற்
சோணாட் டொருநூற்றுத் தொண்ணூறெண்
றோர்வர் துளுவத்தொன்று
நாணாட் டியதொண்ட நன்னாட்டி
லாறைந் திருநகரே.314

---

313. சுப்பிரமணியர் துதி. இது 1887-ல் இல்லை.

314. தனிப்பாடல் (?)

ஈரைட் டிரண்டு மலைநாட்டி லொன்று கொங்கேழவை
வாரைட் டீரேழ மகதையை யைந்து வடக்குமைந்தாந்

## 2. திருப்பதிக் கோவை

ஆசிரிய விருத்தம்

தண்ணூர்தண் டலைப்பாதி ரிப்புலியூர் முண்டீச்
சரம்புறவார் பனங்காட்டூர் திருவாமாத் தூரே
யெண்ணாரண் ணாமலையு நடுநாட்டி லிருபத்
திரண்டாகு மிப்பாலே கம்பமேற் றளிவிண்
கண்ணேங்கு மதிலோண காந்தன்றளி யனேக
தங்காவ தங்கச்சி நெறிக்காரைக் காடே
யுண்ணாடு குரங்கணின்முட் டந்திருமா கறலோத்
தூர்வன்பார்த் தான்பனங்காட் டூர்வல்ல மாற்பேறே. 315

## 3.

இதுவுமது

ஊறலிலம் பையங்கோட்டூர் விற்கோல மாலங்கா
டியர்பாசூர் வெண்பாக்கங் கள்ளில்கா ளத்தி
மாறிறிரு வொற்றியூர் வலிதாயம் பாலி
வட்டமுல்லை வாயில்வேற் காடுதிரு மயிலை
யீறிறிரு வான்மியூர் கச்சூரா லக்கோயி
லிடைச்சுரங் கழுக்குன்ற மச்சிறுபாக் கம்மே

---

சோணாட் டொருநூற்றுத் தொண்ணூற்றுமூன்று துளுவொன்றதா
நாணாட் டியதொண்ட நாட்டிரண் டாறைந்து நன்னகரே.—1899.

கிடைத்த வேறு பதிப்புக்களிலும் பிரதியிலும் காணும் மேற்கோள்களின் பாடபேதங்களில் ஆராயத் தக்கவைமட்டும் இந்நூலில் குறித்து வைக்கப்படும்.

315. யஉ-வது திருவிருத்தம். இது 1887, 1899-ல் இல்லை.

மாறிறிரு வக்கரையே யரசிலிதொல் விரும்பை [டே. 316
மாகாளந்தொண்டநன்ருட் டெண்ணின்முப்பா னிரண்

---

இளைத்தெழு வெண்பிறை யார்கச்சி
யேகம்ப ரின்னருளால்
விளைத்தெழு நாவி லொருமருந்
தாலும் விலக்கரிதாய்
முளைத்தெழும் பொற்சிக ரம்போலு
மம்மை முலைத்தழும்பும்
வளைத்தழும் பும்பெற் றிருப்பதன்
ருேதொண்ட மண்டலமே. ௪

மேற்கோள்

காஞ்சிபுரத்தின் பழைய புராணம்

ஆசிரிய விருத்தம்

மங்கைநா யகிதன் வரிவளைத் தழும்பும்
வளரிள முலைசெய்த சுவடும்
கொங்கைநா யகமுங் கண்டுகண் டுள்ளக்
குறிப்புட னல்குவாய் கோவே
சிங்கநா யகமா யிருந்த நாரணனைச்
சிம்புளா யடர்த்தசே வகனே
கங்கைநா யகனே கம்பனே கச்சிக்
கடவுளே காக்குநா யகனே. 317

---

316. ௫௯-வது திருவிருத்தம். இது 1887, 1899-ல் இல்லை.
317. இது 1887-ல் இல்லை.

சேணார் கழுகு பழகுதெய்
வீகச் சிறப்புமன்றி
யேணாரும் பூதங் கொடுபோ
வதுமன்றி யெண்ணிமுரல்சீர்க்
காணாது காண்பது கச்சியி318
லேயென்று காசினியோர்
வாணா ளளவுந் துதிப்பதன்
றேதொண்ட மண்டலமே. (நு)

மேற்கோள்

திருவாசகம்

பிட்டு நேர்பட மண்சு மந்த
பெருந்து றைப்பெரும் பித்தனே
சட்ட நேர்பட வந்தி லாத
சழக்க னேனுனைச் சார்ந்திலேன்
சிட்ட னேசிவ லோக னேசிறு
நாயி னுங்கடை யாயவெங்
கட்ட னேனையு மாட்கொள்வான் வந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே.319

---

நீடார் துளப மணநாறு
கச்சியி னீலமொன் றுங்

---

318. காஞ்சியிலே—1899.

319. திருக்கழுக்குன்றப் பதிகம், உ-வது திருவிருத்தம். இது 1887, 1924-ல் இல்லை. இங்ஙனம் 1924 குறித்தவிடத்தெல்லாம் அதன் மேற்கோள் பகுதியில் இல்லை என்று கொள்க.

கோடா விளக்கொடு சேர்நீல
மொன்றுங் குலவுபுக
ழோடார் சுனையின் மலர்நீல
மொன்றுமற் றெப்பொழுதும்
வாடாமற் காட்டவும் வல்லதன்
றேகொண்ட மண்டலமே.

மேற்கோள்

1.

நேரிசை வெண்பா

நீல மழைமுகிலோ நீலமணிக் குன்றமோ
கோல நிறைந்த[320] குரைகடலோ—சோலையிளங்
காயா வனமோ கழுநீரோ கண்ணமங்கை
மாயா வுனதுவடி வம்.[321]

2. காஞ்சிபுரத்தின் பழைய புராணம்

(விருத்தம்)

எந்நாளு மொருசுனையி லிந்திரநீ லப்போது
மலர்ந்தே தோன்றும்[322]

---

பூதவஞ் சூத முதலாக
நின்ற பொதும்பிற்சந்த

---

320. கோலமணி நிறைந்த—1899.
321. தனிப்பாடல் (?) இது 1887-ல் இல்லை.
322. இது 1887, 1924-ல் இல்லை.

பாதவம் போன்மிக்க வேளாளர்
தங்கிய பான்மையினு
லாதவஞ் சூழ்தரு பல்கோடி
தேச மனைத்தினுமா
மாதவஞ் செய்தகன் ருேதமிழ்
சேர்தொண்ட மண்டலமே. எ

மேற்கோள்

பஃறொடை வெண்பா

வையக மெல்லாங் கழனியா வையகத்துச்
செய்யகமே நாற்றிசையுட் டேயங்கள் செய்யகத்து
வான்கரும்பே தொண்ட வளநாடு வான்கரும்பின்
சாறேயந் நாட்டுத் தலையூர்கள் சாறட்ட
கட்டியே கச்சிப் புறமெல்லாங் கட்டியுட்
டானேற்ற மான சருக்கரை மாமணியே
யானேற்ருன் கச்சி யகம்.323

---

இன்னும் புகழ்நிற்க வோர்பழிக்
காமற்[324] றெழுபதின்மர்
துன்னுந் தழல்புக் கொளித்தெல்
லாஞ்சுரு திப்பொருளா
யுன்னும் புரிசைத் திருவாலங்
காட்டி னுரைபதிக
மன்னுந் தமிழில் வகுத்ததன்
ருேதொண்ட மண்டலமே. அ

323. காரிகை, செய்யுளியல், ச — பஃறொடை வெண்பா விற்கு உதாரணம். இது 1877, 1899-ல் இல்லை.

324. நிற்க வோர் பழிக்காமல் எழுபதின்மர்—1887.

## மேற்கோள்

### திருக்கடைக் காப்பு

(பண் - தக்கராகம்)

துஞ்ச வருவாருந் தொழுவிப் பாரும் வழுவிப்போய்
நெஞ்சம் புகுந்தென்னை நினைவிப் பாரு முனைநட்பாய்
வஞ்சம் படுத்தொருத்தி வாணாள் கொள்ளும் வகைகேட்
டஞ்சும் பழையனூ ராலங் காட்டெம் மடிகளே. 325

---

கண்ணூர் கருணைக் கடற்றொண்ட[326]
மான்கைக் கடாசலத்தைத்
தண்ணூரு முல்லைக் கொடிதடுத்
தாட்கொண்ட தன்மையெல்லாம்
பண்ணூருஞ் செஞ்சொற் றிருமுல்லை
வாயிற் பதிகஞ்சொல்ல
மண்ணூழி காலமு நிற்பதன்
றோதொண்ட மண்டலமே. ௬

## மேற்கோள்

### 1. திருப்பாட்டு

(பண் - தக்கேசி)

சொல்லரும் புகழான் றொண்டமான் களிற்றைச்
சூழ்கொடி முல்லையாற் கட்டிட்

---

325. திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருஆலங்காட்டுத் திருப்பதிகம், க.

326. உழற்றொண்டமான்—1899.

டெல்லையி லின்ப மவன்பெற வெளிப்பட்
டருளிய விறைவனே யென்று
நல்லவர் பரவுந் திருமுல்லை வாயி
லுதனே நரைவிடை யேறீ
பல்கலைப் பொருளே படுதுயர் களையாய்
பாசுப தாபரஞ் சுடரே.[327]

2

இரட்டைப் புலவர்கள் பாடிய ஏகாம்பரநாத ருலா.
முல்லைக் கொடிதடுத்த மூதூரும்.[328]

---

நன்கண்மை யாக வயாவுற்ற
நோய்கண்டு நாடரிய
புன்கண்மை நோக்கியுஞ் சற்றுமெண்
ணுதொர் புலவனுக்காத்
தன்கண்மை சூலி முதுகினிற்
சோறிட்ட தன்மையினுல்
வன்கண்மை செய்யவும் வல்லதன்
றோதொண்ட மண்டலமே. ௧௦

மேற்கோள்

இரட்டை யாசிரிய விருத்தம் - மடக்கு

பன்றி கோடுழுத நந்தி வெற்பனிரு
பார வெற்பினை யடுக்கிலான்[329]

---

327. சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவடமுல்லைவாயில் திருப்பதிகம், ம. இது 1887-ல் இல்லை. 1899-ல் இதன் முதல் வரி மட்டுமே இருக்கின்றது.

328. —தாவுபரி
மல்லற்றிருடைத் தொண்ட மான்கடவுந் தேரையொரு
முல்லைக் கொடிதடுத்த மூதூரும்.
இது 1887, 1924-ல் இல்லை.

329. எடுக்கிலான்—1899.

பாணன் வெம்பிண மெடுத்தவன் கொடிய
பாணன் வெம்பிண மெடுக்கிலான்
சென்று நென்முளையை வாரினேன் புதிய
திங்கள் வெண்முளையை வாரிலான்
செட்டி தன்பழி தவிர்த்த வன்பரிவு
செய்து பெண்பழி தவிர்க்கிலான்
அன்று சூலிமுது கன்ன மிட்டவனெ
னன்னை கூன்முது களிக்கிலான்
அங்கை யாடரவின் வாயி லிட்டவனெ
னல்கு லாடரவு தீண்டிலான்
வென்றி மேவுதொடை யாடை கீறினவ
னேமி யாடையது கீறிலான்
வீறு லாவுதமி ழாறை மேவுபர
மேஶ்வரன் புதல்வ னெல்லனே. 330

---

வீறு ரிசையு நசையும்வல்
லோரிந்த மேன்மைசற்றுந்
தேறுத போதிது செப்புவ
ரால்வரைத் திண்புயத்தே
பேறுன பாணன் பிணஞ்சுமந்
தேவரும் பெற்றிகொண்டே
மாறுத கீர்த்தி படைத்ததன்331
ரேறுதொண்ட மண்டலமே. கக

---

330. ஆறைக் கலம்பகம் (?). மூன்றாவது வரியின் முதற்பாதி தவிர்த்து மற்றவை 1924-ல் இல்லை.

சூலி முதுகிற் சுடச்சுட வப்போது சலமை
பாலடிசிற் றன்னப் படைக்குங் கை—1924.

331. சமப்பதன்றே—1899.

மேற்கோள்

பாணன் வெம்பிண மெடுத்தவன்.[332]

இதனை மேற்காட்டிய "பன்றிகோடுழுத" வென்னும் பாட லிற் காண்க.[333]

---

கொங்கலர் மாலையுங் கல்லாய்
விடுமன்பு கொண்டெறிந்தா
லிங்கல ராய்விடுங் கல்லா
னதுமென்ப நின்றறிந்தோருஞ்
செங்கலி னாலெறிந் தேசிவ
னார்பதஞ் சேர்வர்சங்க
மங்கையின்[334] மேவிய சாக்கிய
னார்தொண்ட மண்டலமே. கஉ

மேற்கோள்

1. திருத்தொண்டத் தொகை

(பண் - கொல்லிக் கௌவாணம்)

மறவாது கல்லெறிந்த சாக்கியர்க்கு மடியேன்.[335]

---

332. இது 1887, 1899, 1924-ல் இல்லை.

333. சதகப்பாட்டு, ய. 243-ம் பக்கம் பார்க்க.

உறவைப் பிரிந்துவந் தேயிறந் தானங் கொருபுலவன்
மறவைப் பதிநதி வம்சம்வந் தோனரங் கேசவள்ளல்
அறவைப் பிணஞ்சுடத் தான்செ யெண்ணுன்கி னறத்ததென்றே
பிறர்கைக் கொடாமலெடுத்தா னப்பாணன் பிணத்தினையே— [1924.

334. மங்கல—1899.

335. சுஉ-வது "வார்கொண்ட வனமுலையாள்" என்னும் திருப்பாட்டு. இது 1887, 1924-ல் இல்லை.

## 2. புராண சாரம்

### ஆசிரிய விருத்தம்

சங்கமங்கை வருவேளாண் டலைவர் காஞ்சிச்
சாக்கியரோ டியைந்தவர்தந் தவறுஞ் சைவத்
துங்கமலி பொருளுமுணர்ந் தந்த வேடந்
துறவாதே சிவலிங்கந் தொழுவோர் கண்டோ
ரங்கன்மலர் திருமேனி யழுந்தச் சாத்தி
யமருநாண் மறந்தொருநா ளருந்தா தோடிச்
செங்கலெறிந் திடுமளவின் மகிழ்ந்த நாதன்
திருவருளா லமருலகஞ் சேர்ந்துளாரே336.

---

தெள்ளத் தெளிந்தவர் செய்தக்க
தோர்முறை செய்யிலையா
வெள்ளத் தனைமலை யத்தனை
யாமென்ப தின்றறிந்தோ
முள்ளற் கரிய தொடையாடை
கீறிய தொன்றுமொரு
வள்ளற் றகைமையொ டொத்துள
தாற்றொண்ட மண்டலமே. கரு

### மேற்கோள்

வென்றி மேவுதொடை யாடைகீறி னவன்.

இதனையும் மேற்காட்டிய "பன்றி கோடுழுத" வென்னும் பாடலிற் காண்க337.

---

336. ௩௬௯-வது திருவிருத்தம்.

337. சதகப்பாட்டு, ய. 243-ம் பக்கம் பார்க்க. இது 1887 1899, 1924-ல் இல்லை.

தாயினு நல்ல தயையுடை
யோர்க டமதுடலம்
வீயினுஞ் செய்கை விடுவர்கொல்
லோதங்கண் மெய்ம்முழுதுந்338
தீயினும் வீழ்வர் முதுகினுஞ்
சோறிட்டுச் சீறரவின்
வாயினுங் கையிடு வாரவர்
காண்டொண்ட மண்டலமே. கச

மேற்கோள்

1

விருத்தம்

துளையிட்ட முள்ளெயிற் றரவின்வாய் முழையிற்
றுறுத்திட்ட வநசத்தினல். 339

2

கொச்சகம்

மாறே செபுமரவின் வாய்தீண்ட வும்பயந்து
பேறே மணியுதவப் பெற்றகுல மென்னும
லூறே பரந்தையர்க ளூன்வாயில் வைத்தகுறி
யாறேன் களந்தை யழகப் பெருமாளே. 340

---

. . . . ஆமுந்
தொடையி லெழுசிலந்தி தோற்றுவிக்கப் பட்டின்
புடவை கிழித்த பெருங்கை—1924.

338. மெய்ம்முழுகும்—1899.

339. இது 1887, 1899, 1924-ல் இல்லை.

340. தனிப்பாடல் (?) இது 1887-ல் இல்லை.

மீனவர் நாட்டினுஞ் செம்பியர்
நாட்டினும் வில்லவர்கோ
னானவ னாட்டினு மிக்கதென்
பார்க ளதிசயமோ
கோனவ னாட்டினும் மூளையமு
தாகிற் குலவமுதார்
வானவர் நாட்டினு மிக்கதன்
றோதொண்ட மண்டலமே. கரு

மேற்கோள்

புராண சாரம்

ஆசிரிய விருத்தம்

மன்னியவே ளாண்டொன்மை யிளசை மாறர்
வறுமையா லுணவுமிக மறந்து வைகி
யுன்னருநள் ளிருண்மழையி லுண்டி வேண்டி
யும்பர்பிரா னணையவய லுழுது வித்துஞ்
செந்நென்முளை யமுதுமனை யலக்கா லாக்கிச்
சிறுபயிரின் கறியமுது திருந்தச் செய்து
பன்னலரு முணவருந்தற் கெழுந்த சோதிப்
பரலோக முழுதாண்ட பான்மை யாரே. 341

---

சாய்த்திட் டவர்க்குத் திருமேனி
முன்கையைச் சந்தனமாத்
தேய்த்திட் டவர்க்கெவர் நேரென்ப
ராலங்கஞ் செந்தழலிற்

---

341. எ.்வது திருவிருத்தம். இது 1887, 1899-ல் இல்லை.

ரேய்த்திட் டவருக்குச் சர்வாங்க
முந்திரி தூள்படவே
மாய்த்திட் டவர்க்கரி தோவெளி
தோதொண்ட மண்டலமே. கசு

மேற்கோள்

சேக்கிழார் புராணம்

ஆசிரிய விருத்தம்

மாறுகொடு பழையனூர் நீலி செய்த
வஞ்சனையால் வணிகனுயி ரிழப்பத் தாங்கள்
கூறியசொற் பிழையாது துணிந்து செந்தீக்
குழியிலெழு பதுபேரு மூழ்கிக் கங்கை
யாறணிசெஞ் சடைத்திருவா லங்காட் டப்ப
ரண்டமுற நிமிர்ந்தாடு மடியின் கீழ்மெய்ப்
பேறுபெறும் வேளாளர் பெருமை யெம்மாற்
பிறித்தளவிட் டிவளவெனப் பேச லாமோ. 342

---

கேட்டாலு மின்பங் கிடைக்குங்கண்
டீர்கொண்ட கீர்த்தியொடு
பாட்டா லுயர்ந்த புகழேந்தி
சொன்ன படியறிந்து
பூட்டார் சிலைமன்னன் வையம்
பெறினும்பொய் நானுரைக்க
மாட்டா ரெனச்சொன்ன நாட்டார்
திகழ்தொண்ட மண்டலமே. கஎ

---

342. கரு-வது திருவிருத்தம். இது 1887, 1899, 1924-ல் இல்லை.

மேற்கோள்

ஆசிரிய விருத்தம்

வையம் பெறினும் பொய்யுரைக்க
மாட்டார் தொண்ட நாட்டாரென்
றையன் களந்தைப் புகழேந்தி
யாண்டா ருரைக்கு மவரோநீ
ரெய்யுஞ் சிலைக்கை மதவேளே
யெழுபார் புரக்கு மெங்கோவே[343]
யையந் தவிர்த்த பெருமானே
யாவோ மடியோ மாவோமே. [344]

---

கையா றிரண்டுடைக் காளைதன்
வாயிற் கவிதைகொண்ட
பொய்யா மொழிக்கும்[345] புகலிட
மானது பொய்கையெல்லாஞ்
செய்யார் கமல மலரவண்
டானங்கள் சென்றுதிகழ்
மையார் குவளை வயல்புடை
சூழ்தொண்ட மண்டலமே. கஅ

மேற்கோள்

நேரிசை வெண்பா

விழுந்ததுளி யந்தரத்தே வேமென்றும் வீழ்ந்தா
லெழுந்து சுடர்சுடுமென் றேங்கிச்—செழுங்கொண்டல்

---

343. எய்யுஞ் சிலைவேள் வடிவோனே
இராசா திபனே இரப்போர்கள்—1924.

344. ஓர் பாண்டியன்(?) தனிப்பாடல். இது 1887-ல் இல்லை.

345. பொய்யா மொழிக்குப்—1899.

பெய்யாத கானகத்தே பெய்வளையும் போயினளே
பொய்யா மொழிப்பகைஞர் போல்.346

---

விண்ணிற் பிறக்கும் புகழ்க்குன்ற 347
நாடன் விளங்குதமிழ்ப்
பண்ணிற் பிறக்கும் பெரிய
புராணம் பகர்ந்தபிரா
னெண்ணிற் பிறக்கும் பததூளி
யென்றலை யெய்தவந்த
மண்ணிற் பிறக்கவும் வைக்குங்கொ
லோதொண்ட மண்டலமே. கக

மேற்கோள்

1. சேக்கிழார் புராணம்

ஆசிரிய விருத்தம்

சேக்கி ழானமது தொண்டர் சீர்பரவ
நாமகிழ்ந் துலக மென்றுநம்
வாக்கி னலடி யெடுத்து ரைத்திட
வரைந்து நூல்செய்து முடித்தனன்
காக்கும் வேல்வளவ நீயி தைக்கடிது
கேளெ னக்கனக வெளியிலே
யூக்க மானதிரு வாக்கெ ழுந்தது
திருச்சி லம்பொலியு முடனெழ.348

---

346. முருகக் கடவுள் தனிப்பாடல்.
347. குன்றை-1899. இங்ஙனமே பின்வரும் இடங்களிலும்கொள்க.
348. கஅ-வது திருவிருத்தம். இது 1887, 1899-ல் இல்லை.

2.

நேரிசை வெண்பா

கொண்டறவழ் தண்டலைசூழ் குன்றநகர்ச் சேக்கிழா
ரொண்டரணி யோருய்ய வோதினார்—தண்டலில்சீ
ரேன்றபுகழ் நாலா யிரத்திருநூற் றெண்பத்து
மூன்று திருவிருத்த மும்.[349]

---

தேமாம் பொழிறிகழ் சம்பந்தர்
வாழுஞ் சிரபுரம்போற்
றுமா தவஞ்செய்த தெத்தலை
யோதென் றமிழியல்சேர்[350]
பாமாலை சூட மதுரநல்
வாயிற் பதியுடனே
மாமா சிலாமணிச் சம்பந்தன்
வாழ்தொண்ட மண்டலமே. உ0

மேற்கோள்

கட்டளைக் கலித்துறை

பொருமா கடலிடைத் தோன்றலல் லாது புணரிவெள்ளந்
தருமா மணியொன்று கண்டதுண் டோவையந் தந்தவனுந்
திருமாலும் போற்றுந்தென் ஞாநூரிற் சம்பந்த தேசிகனு
மொருமாசி லாமணி பேரின்ப வாரி யுதவியதே.[351]

---

349. தனிப்பாடல் (?). இது 1887-ல் இல்லை.
350. என்றருமையினில்—1899.
351. தனிப்பாடல் (?) இது 1887-ல் இல்லை.

பொய்யக மாகிய மாயாப்
பிரபஞ்சம் போக்குதற்குக்
கையக நெல்லிக் கனியதன்
றேகச்சி யேபெரிதாய்
மெய்யக மேபுரி காரிகைப்
பாட்டில் விளங்கவைத்த
வையக மென்னுந் தமிழே
புனைதொண்ட மண்டலமே. உக

மேற்கோள்

பஃறொடை வெண்பா

வையக மெல்லாங் கழனியா வையகத்துச்
செய்யகமே நாற்றிசையுட் டேயங்கள் செய்யகத்து
வான்கரும்பே தொண்ட வளநாடு

இப்பாடலை யேழாவது பாட்டின் மேற்கோளிற் காண்க. 352

---

அஞ்சொன் முதுதமிழ் நால்வேந்தர்
வைகு மவையிலௌவை
செஞ்சொற் புனைகின்ற வேளாளர்
வைகுஞ் சிறப்புடைத்தால்
விஞ்சிய வேழ முடைத்தென்னும்
பாடல் விளம்பிப்பின்னும்
வஞ்சி வெளிய வெனுப்பா
மொழிதொண்ட மண்டலமே. உஉ

---

352. 241-ம் பக்கம் பார்க்க.

## மேற்கோள்

### 1.

நேரிசை வெண்பா

வேழ முடைத்து மலைநாடு மேதக்க
சோழ வளநாடு சோறுடைத்து—பூழியர்கோன்
றென்னாடு முத்துடைத்து தெண்ணீர் வயற்றொண்ட
நன்னாடு சான்றோ ருடைத்து.353

### 2.

இன்னிசை வெண்பா

வஞ்சி வெளிய குருகெல்லாம் பஞ்சவன்ற
னன்மாடக் கூடலிற் கல்வலிது
சோழ னுறந்தைக் கரும்பினிது தொண்டமான்
கச்சியிற் காக்கை கரிது.354

---

படவேங் கடற்கட லன்னதொல்
காப்பியப் பாயிரஞ்சொல்
விடவேங் கடலின்றி யேபனம்
பாரமற் றெல்லைசொல்லக்
கடவேங் கடலன்ன செந்தமிழ்க்
கேயென்று காட்டுதற்கு
வடவேங் கடந்தென் குமரியென்
றூர்தொண்ட மண்டலமே. உரு.

---

353. ஔவையார் தனிப்பாடல்.

354. ஷை யாப்பருங்கலம், கக—விருத்தி யுரை.

## மேற்கோள்

தொல்காப்பியச் சிறப்புப் பாயிரம்

வடவேங்கடந் தென்குமரி
யாயிடைத்
தமிழ்கூறு நல்லுல கத்து
வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலி
னெழுத்துஞ் சொல்லும் பொருளு நாடிச்
செந்தமி ழியற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு முறைப்பட வெண்ணிப்
புலந்தொகுத் தோனே போக்கறு பனுவ
னிலந்தரு திருவிற் பாண்டிய னவையத்
தறங்கரை நாவி னான்மறை முற்றிய
வதங்கோட் டாசாற் கரிறபத் தெரித்து
மயங்கா மரபி னெழுத்துமுறை காட்டி
மல்குநீர் வரைப்பி னைந்திர நிறைந்த
தொல்காப் பியனெனத் தன்பெயர் தோற்றிப்
பல்புகழ் நிறுத்த படிமை யோனே.355

---

இடஞ்சூழுங் காரிகை யாப்பிற்
குதாரண மென்றுகொண்ட
விடஞ்சூ ழரவென் றெழுவாயிற்
றோற்றி வெறிகமழ்வேங்
கடஞ்சூழ் காடக் கடக்களிற்
றுணியற் காளிம்பன்மேல்

---

355. இது 1887-ல் இல்லை. இதன் முதல் மூன்று வரிகள் மட்டுமே 1899-ல் காணப்படுகின்றன.

வடந்நூ லெனச்சொன்ன பாமாலை
யுங்கொண்ட மண்டலமே. உச

மேற்கோள்

ஆசிரிய விருத்தம்

விடஞ்சூ ழரவி னிடைநுடங்க
வில்வாள் வீசி விரையார்வேங்
கடஞ்சூழ் நாடன் காளிம்பன்
கதிர்வேல் பாடு மாதங்கி
வடஞ்சூழ் கொங்கை மலைதாந்தாம்
வடிக்க ணீல மலர்தாந்தாந்
தடந்தோ ளிரண்டும் வேய்தாந்தா
மென்னுந் தன்கைத் தண்ணுமையே.356

---

படையிற் கொடையிற் பெரியோனை
யக்கணம் பாடக்கம்பற்
கடையக் *கொடுத்திட வாங்கின
னலரு மந்தமுத்தைக்
கடையிற் கடைசிய ருப்பிற்கு
மாறக் களகவெள
மடையிற் றாளஞ் சொரிவயல்
சூழ்கொண்ட மண்டலமே. உரு

---

356. காரிகை, செய்யுளியல், கூ—ஆசிரியவிருத்தத்திற்கு உதாரணம்.

* கடையிற்.—1887.

## மேற்கோள்

வெண்பா

புக்க விடைதழுவிக் கோடுழுத புண்களெல்லாந்
திக்கிலுயர் காளிம்பன் றென்புழன்மா—னக்கணமே [கு
தோள்வேது கொண்டிலளேற் சுந்தரப்பொற் ரேன்றலுக்
வாழ்வேது கண்டிலேன் மற்று.357

---

கிளப்பார் கிளப்ப வடிமடக்
காகக் கெழுமியசொல்
லளப்பா மதுரத் துடன்பூக்
கமலமென் ருய்ந்தெடுத்த
களப்பாள னெற்குன்ற வாணனங்
காதிக் கலித்துறையே
வளப்பார் புகழை வளர்ப்பிக்கு
மாற்றொண்ட மண்டலமே. உசு

## மேற்கோள்

1. திருப்புகலூ ரந்தாதி

கட்டளைக் கலித்துறை

பூக்க மலத்து விழிவளர் வானென்றும் போற்றியவூர்
மாக்கம லத்து மகிழ்கின்ற வூர்மது வானிறைந்த
தேக்கயி லத்து வழியே பரக்குந் திருப்புகலூர்
நோக்க மலத்துயர் சோதிநெஞ் சேநம்மை நோக்குதற்கே.358

---

357. கம்பர் தனிப்பாடல். இது 1887-ல் இல்லை.

358. இது 1899-ல் இல்லை.

2. இதுவுமது

வளப்பா டிலாத வெருக்கு மிதழி மலருமன்ப
ருளப்பா டுறைபுக லூரருக் காதலி னுேதிமிக்கோர் [சொற்-
தளப்பா டிதுதமிழ்க் கென்னினுஞ் சாற்றுவன் சந்திரன்
களப்பாள னெற்குன்றை வாணனந் தாதிக் கலித்துறையே.359

---

போனத்தி னுலோர் புறவினை
யேற்றவன் போலவுமோ
ரேனத்தி னுலெதி ரேற்றவன்
போலவு மென்றுகொண்ட
மீனத்தி னுன்மற் றொருகோடி
செம்பொன் விலைகொடுத்த
மானத்தி னுலும் வலியதன்
றேதொண்ட மண்டலமே.360 உஎ

கூட்டுங் கரந்தங் கொழுநர்க்கல்
லாமற் கொடிவெருவ
வோட்டும் பொழுதுங் கரங்குவி
யாமு தட்டுதற்கு361

---

359. இது 1924-ல் இல்லை. 1899-ல் கடைசி வரி மட்டும் காணப்படுகிறது.

360 1924-ல் கண்ட இதன் மேற்கோள

குறுநடைப் புறவி னெடுந்துயர் தீர
வெறிதரு பருந்தி னிடும்பை நீங்க
அரிந்துடம் பிட்டோன் அறந்தரு கோலும்—

சிலப்பதிகாரம், நீர்ப்படைக்காதை.

மூட்டுந் தழற்கொரு மூன்றினில்
லார்கற்பு மூட்டியெரி
மாட்டுந் திறமனை தோறுமுண்
டேதொண்ட மண்டலமே. ௨அ

பின்போர் தமைக்கண்டு பாவித்த
தோவன்றிப் பின்புவந்தோர்
தன்போ னடக்கப் பணிப்பித்த
தோதமிழ்க் கேயிரங்கி
முன்போம் புலவர்க்குப் பின்போயி
னானு முகுந்தனிது
வன்போ மனத்தினி லன்போசொல்
வீர்தொண்ட மண்டலமே. ௨௯

## மேற்கோள்

### 1.

நேரிசை வெண்பா

கணிகண்ணன் செல்கின்றான் காமருபூங் கச்சி
மணிவண்ணா நீகிடக்க வேண்டா—துணிவுடைய
செந்நாப் புலவனுஞ் செல்கின்றே னீயுநின்
பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்.362

### 2.

இதுவுமது

முன்போம் புலவற்கு மூதறிவாற் * பாய்சுருட்டிப்
பின்போஞ் சவரிப் பெருமாளே—யன்பாகப்

---

361. ஊட்டுதற்கு—1899, 1924.
362. திருமழிசை யாழ்வார் தனிப்பாடல். இது 1924-ல் இல்லை.
* மூதரவப்பாய் சுருட்டி—1899.

பேய்முலைப்பா லுண்டவனே பேதையே னின்னமொரு
தாய்முலைப்பா லுண்ணுமற் று.[363]

---

சென்னியிற் சென்ற துகிலோடு
சென்று சிலரிழிந்தார்
பன்னியிற் சென்றது போலிழிந்
தார்சிலர் பாங்குடனே
பொன்னியிற் சென்று கரையேறி
னாரைப் புணர்ந்ததன்று
வன்னியிற் சென்று கரையேறி
னார்தொண்ட மண்டலமே. ௫0

பொள்ளா நுழைவழி போய்த்தலை
நீட்டும் புலவன்முன்னாள்
கள்ளாறு செஞ்சொற் கலம்பக[364]
மேகொண்டு காயம்விட்ட
தெள்ளாறை நந்தி யெனுந்தொண்ட
மான்கவி தீர்ப்பதற்கு
வள்வார் முரச மதிர்த்தாண்ட
துந்தொண்ட மண்டலமே. ௫௧

மேற்கோள்

1.

விருத்தம்

துயிலுணர்ந்து வெட்டுமெங்கள் தொண்ட வேந்தே.[365]

---

363. தனிப்பாடல் (?)

364. புலவர் முன்சொல் கள்ளாருஞ் செஞ் சொற் கலம்பகம்
—1887.

365. இது 1887, 1924-ல் இல்லை.

## 2. நந்திக் கலம்பகம்

ஆசிரிய விருத்தம்

வானூறு மதியை யடைந்ததுன் வதனம்
வையக மடைந்ததுன் கீர்த்தி
கானூறு புலியை யடைந்ததுன் வீரங்
கற்பக மடைந்ததுன் கரங்க
டேனூறு மலரா ளரியிடஞ் சேர்ந்தாள்
செந்தழல் புகுந்ததுன் மேனி
யானுமென் கலியு மெவ்விடம் புகுவே
மெந்தையே நந்திநா யகனே.366

---

நீளத் திரிந்தென்று வெண்பாவி
னாலன்று நின்றையர்கோன்
காளத்தி வாணனைப் பாடிய
பாடல் கருதுமண்ட
கோளத் தினுஞ்சென்று பாதாளம்
புக்குக் குலவுசக்ர
வாளத் தினுஞ்சென்ற தாலெளி
தோதொண்ட மண்டலமே. ௬௨

மேற்கோள்

நேரிசை வெண்பா

நீளத் திரிந்துழன்றாய் நீங்கா நிழற்போலு
நாளைக் கிருத்தியோ நல்குரவே—காளத்தி

366. இறுதிப்பாட்டு. இது 1924-ல் இல்லை.
"நந்தி கலம்பகத்தான் மாண்டகதை நாடறியுஞ்
சுந்தரஞ்சேர் தென்குளத்துச் சோமேசா"
என்பது 1924-ல் கண்ட மேற்கோள்.

நின்றைக்கே சென்றக்கா னீயெங்கே நானெங்கே
யென்றைக்குக் காண்பே னினி.367

---

பாகொன்று சொல்லியைப் பார்த்தமை
யாலன்று பாண்டியன்மு
ஞேகின்ற சிற்றிடை வேழம்பக்
கூத்தி னொடிவரையிற்
சாகின்ற போது தமிழ்சே
ரயன்றைச் சடையன்றன்மேன்
மாகுன் றெனச்சொன்ன பாமா
லையுக்கொண்ட மண்டலமே. ௩௩

### மேற்கோள்

### 1.

கட்டளைக் கலித்துறை

மாகுன் றனையபொற் ேறுளான்
வழுதிமன் வான்கரும்பின்
பாகொன்று சொல்லியைப் பார்த்தெனைப்
பார்க்கிலன் பையப்பையப்
போகின்ற புள்ளினங் காள்புழற்
கோட்டம் புகுதுவிரேற்
சாகின் றனளென்று சொல்வீ
ரயன்றைச் சடையனுக்கே.368

---

367. மதுரகவிராயர் தனிப்பாடல்.
368. ஓர் ஆடல்மகளின் தனிப்பாடல் இது 1924-ல் இல்லை.

2.

ஆசிரியப்பா

இரவ லாளரே பெருந்திரு வுறுக
வரவுமிழ் மணியு மலைகட லமிர்துந்
திங்கட் குழவியுஞ் சிங்கப் பாலுங்
குதிரை மருப்பு முதிரை வாலு
மீகென மொழியினு மில்லென மொழியான்
சடையனை யயன்றைத் தலைவனை நீர்போ
யுடையது கேளு முறுதியுள் ளோரே.369

---

சொல்லையி லாகச் சொரிகவி
மாரி சுருதிவல்லான்
செல்லையில் சோலைக் குறுங்குடி
வாழ்நம்பி சென்றுகண்ட
வெல்லையி னீடுங் கரடக்
கடாக்களி றென்றுசொன்ன
வல்லையிற் காளத்தி வாழ்வா
னதுந்தொண்ட மண்டலமே. ௬௪

மேற்கோள்

கட்டளைக் கலித்துறை

பொரடக் கயம்பிடி யென்றான் மதனனிப் பூவையுமா
தரடக் கமுஞ்சற் றறிந்தில ளேதனைத் தாள்பணியா

---

369. இது ஒரு ஆடல்மகளின் தனிப்பாடல் என்றோ, அல்லது, அவள் கூறும் வழுதியின் தனிப்பாடல் என்றோ கருதப்படுகிறது. இது 1924-ல் இல்லை.

முரடக் கவுடக் கெடிமண்ட லீகர் முடிபிடுங்குங்
கரடக் கடாக்களிற் ருய்வல்லை மாநகர்க் காளத்தியே.370

---

நூலார் கலைவல்ல செம்பியன்
கேட்க நொடித்து மிக்க
கோலா கலனொட்டக் கூத்தனை
யன்றுதற் கோலியென்று
மேலார் கவிசொல்லி நெய்த்தானத்
தேசென்று வென்றுகொண்ட
மாலார் களந்தைப் புகழேந்தி
யுந்தொண்ட மண்டலமே. ௯௫

### மேற்கோள்

1.

ஆசிரிய விருத்தம்

தற்கோ லிப்பூ சற்பா சத்தே
தப்பா மற்சா கைக்கே நிற்பீர்
முற்கோ லிக்கோ லிப்பூ சித்தே
முட்டா மற்சே வித்தே நிற்பீர்
வற்ரு நெட்டோ டைப்பா ரச்சேன்
மைப்பூ கத்தே றித்தா விப்போய்
நெற்ரு ளூற்ரு லைப்பா கிற்சேர்
நெய்த்தா னத்தா னைச்சே வித்தே.371

---

370. திருக்குறுங்குடி நம்பி தனிப்பாடல். இது 1924-ல் இல்லை.
371. புகழேந்திப் புலவர் தனிப்பாடல்.

2.

இதுவுமது

விக்கா வுக்கா வித்தா விப்போய்
விட்டார் நட்டார் சுட்டேர் புக்கா
ரிக்கா யத்தா சைப்பா டுற்றே
யிற்றே டிப்போய் வைப்பீர் நிற்பீ
ரக்கா டப்பேய் தொக்கா டச்சூ
ழப்பா டத்தீ வெப்பா டப்பூ
ணைக்கா டக்கா னத்தா டப்போ
நெய்த்தா னத்தா னைத்தியா னித்தே.[372]

---

ஏரி ளியற்றுங் களக்கோட்டை[373]
யீந்தன்ன மிட்டுநல்ல
பாரி பறித்தென்னும் பாடல்கொண்
டோன் பண்பு சேர்பழய
னாரி விருப்பவ னௌவைதன்
பாடற் குவந்தபிரான்
மாரி யெனத்தரு கைக்காரி
யுந்தொண்ட மண்டலமே. ௯௩

மேற்கோள்

வெண்பா

பாரி பறித்த பறியும் பழையனூர்க்
காரி கொடுத்த களக்கோடுஞ் — சேரமான்

---

372. ஒட்டக்கூத்தர் தனிப்பாடல்.
373. களக்கொட்டை—1887; களக்கோடு—1899.

வாரா யெனவழைத்த வாய்மையு மிம்மூன்று
நீலிச்சிற் றுடைக்கு நேர்.374

---

விழுவே[375] னெனச்சென்று வீழ்ந்தாரி
 லோர்மைந்தன் வேறுபட
வழுவே லியிற்சென் றொருநீலி
 முன்கை யுடையவற்குக்
கொழுவே படைக்கல மென்றுசொல்
 லாமுனங் கூறியசொல்
வழுவே யெனப்பொன்று வல்லாள
 னுந்தொண்ட மண்டலமே. ௫௭

மேற்கோள்

பழமொழி

முன்கை யுடையார்க்குக் கொழுவே படைக்கலம்.376

---

வீறுர் நெருப்பிடை வீழ்த்தவும்
 பாடிமுன் வீழ்த்ததற்பி
னூறு நெருப்பினை யாறவும்
 பாடி யடியவரைச்
சீறுத தெய்வத் திருஞான
 சம்பந்தர் செய்த தமிழ்

---

374. ஔவையார் தனிப்பாடல்

375. விழுவேம்—1887.

376. "பலகுடை நீழலும்" என்ற திருக்குறளோடு ஒத்துணர்க.

மாருறா நிற்கப் படைத்தசெகன்
பார்தொண்ட மண்டலமே.[377] ௫அ

ஏத்தளித் தாயிரம் பாடல்கொண்
டேநிரை யிங்கொருமைப்
போத்தளித் தாடையும் பூணூ
மூந்தந்து போதரவாய்க்
காத்தளித் தாதரித் திட்டதல்
லாமலுங் கம்பருக்கு
மாத்தளித் தாட்பட்டு வாழ்வதன்
றேதொண்ட மண்டலமே.[378] ௫௯

புறவோ டேற்றதை[379] போக்கிய
வேந்தன் புரிந்ததிலு

---

377. இதற்கு 1924-ல் கண்ட மேற்கோள் :—
ஆற்ற லடல்விடை யேறும் ஆலவா யான்திரு நீற்றைப்
போற்றிப் புகலி நிலாவும் பூசுரன் ஞானசம் பந்தன்
தேற்றித் தென்னன் உடலுற்ற தீப்பிணி யாயின தீரச்
சாற்றிய பாடல்கள் பத்தும் வல்லவர் நல்லவர் தாமே—
திருஞான சம்பந்தர் தேவாரம்.

378. இதற்கு 1924-ல் கண்ட மேற்கோள் :—
"............கனக்கவே
அன்றீன்ற நாகெழுப தானவெரு மைத்திறத்தைக்
கன்றோடு நல்குங் கடகக்கை"
"............தேமருவு
நாவிற் புகழ்கம்ப நாடற் கடிமையென்றே
மாவைக் கரைத்து முன்னே வைக்குங்கை"—
திருக்கை வழக்கம்

379. புறவோடுயிர் செலப்—1899.

மறவோ கொடிது கொடிதுகண
டீரற னன்றுமற்றுப்
பிறவோ மறுத்துரை செய்யான்
மிகச்சிரம்[380] பேர்த்துவைத்த
மறவோனைத் தாங்கிய வையமன்
றோதொண்ட மண்டலமே. ௪0

மேற்கோள்

1.

தலையிந் தாவெனு மைந்தா தாலோ தாலேலோ
தண்குன் றைப்பதி யெல்லா தாலோ தாலேலோ.[381]

2.

வெண்பா

ஆலெங்கே யங்கே யரும்பறவை யாற்றுயிலு
மாலெங்கே யங்கே மலர்மடந்தை—சோலைதொறுஞ்
செங்கேத கைமணக்குஞ் செங்குன்றை யெல்லனெங்கே
யங்கே யிரவலரெல் லாம்.[382]

---

வள்ளல் சிலைப்பெரு மாணச்சர்
சாத்தர் வழுதிமுதற்
றள்ளுவ னார்க்குந் தலையான
பேரையுந் தன்னுரையை

380. மிகுசிரம்—1887.
381. எல்லப்பன் பிள்ளைத் தமிழ்.(?)
382. பல பட்டடைச் சொக்கநாதப் புலவர் தனிப்பாடல். இது 1924-ல் இல்லை

வில்லுவ னார்க்குந் திருக்காஞ்சி
வாழ்பரி மேலழகன்
வள்ளுவ னார்க்கு வழிகாட்டி
னன்றொண்ட மண்டலமே. சக

மேற்கோள்

1.

வெண்பா

தருமர் மணக்குடவர் தாமத்தர் நச்சர்
பரிமே லழகர் பருதி—திருமலையர்
மல்லர் கவிப்பெருமாள் காளிங்கர் வள்ளுவர்நூற்
கெல்லையுரை செய்தா ரிவர். 383

2.

இதுவுமது

பாவெல்லா நல்லாவின் பாலாமோ பாரிலுள
நூலெல்லாம் வள்ளுவர்செய் நூலாமோ—நூலிற்
பரித்தவுரை யெல்லாம் பரிமே லழகர்
தெரித்தவுரை யாமோ தெளி. 384

---

383. தனிப்பாடல் (?)

இது 1899-ல் இல்லை. அதில் கண்ட மேற்கோள் பின் வருமாறு:—

திருத்தக்க தெய்வத் திருவள் ளுவனார்
கருத்தமை வெல்லாங் கருதி—விரித்துரைத்தான்
பன்னுந் தமிழ்தேர் பரிமே லழகனென
மன்னு முயர்நாமன் வந்து.

384. பரிமேலழகர் உரைப் பாயிரம். இது 1887, 1899, 1924-ல் இல்லை.

கண்ணாலென்[385] னெஞ்சத் தழுக்கறுத்
 தேகடை யேன்றனையுந்
தண்ணாருங் கூலிக் கடிமைகொண்
 டேதடுத் தாண்டருளி
யெண்ணாருங் காஞ்சித் திருக்குறிப்
 புத்தொண்ட ரென்னுந்தெய்வ
வண்ணார் வடிவு கொடுபோந்
 ததுந்தொண்ட மண்டலமே.* ௪௨

---

385. இப்பாட்டிற்கு முன் பின்வரும் பாட்டும் மேற்கோளும் 1899-ல் காணப்படுகின்றன.

அறமுள வாகி லரசுள வாகி லவருறையு
ணிறமுள பொத்தப்பி நாடுள வாகி னிறைந்தசிவத்
திறமுள வாகிநங் கண்ணப்ப னார்தந் திருக்குலத்து
மறையுள வாகிற் குறையுள வோதொண்ட மண்டலமே. ௪௨

மேற்கோள்

(1) கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பற் கடியேன்.

(2) வேடரதி பதியுடுப்பூர் வேந்தன் நாகன்
 விளங்கியசேய் திண்ணனார் கன்னி வேட்டைக்
காடதின்வாய் மஞ்சனமுங் குஞ்சிதரு மலருங்
 காய்ச்சினமன் றிடுதசையுங் காளத்தி யார்க்குத்
தேடருமன் பினிலாறு தினத்தளவு மளிப்பச்
 சிறுசிவ கோசரியுந் தெளியவிழிப் புண்ணீர்
ஓடவொரு கண்ணப்பி ஒருகண் ணப்ப
 ஒழிகவெனு மருள்கொடரு குறநின் றூரே.

* இச்செய்யுள் 1887-ல் இல்லை.

## மேற்கோள்

### 1. திருத்தொண்டத் தொகை

(பண் - கொல்லிக் கௌவாணம்)

திருக்குறிப்புத் தொண்டர்தம் மடியார்க்கு மடியேன். 386

### 2. புராணசாரம்

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

கொந்தலர்பூம் பொழிற்கச்சி நகரே காலிக்
  குலத்தலைவர் தவர்குறிப்புக் குறித்து ளார்பால்
வந்திறைவர் நமக்கின்று தாரீ ராகில்
  வருந்துமுட லெனவாங்கி மாசு நீத்த
கந்தைபுல ராதொழிய மழையு மாலைக்
  கடும்பொழுதும் வரக்கண்டு கலங்கிக் கன்மேற்
சிந்தமுடி புடைப்பளவிற் றிருவே கம்பர்
  திருக்கைகொடு பிடித்துயர்வான் சேர்த்தினரே. 387

---

சயிலைத் திருமுலைப் பாலுறு
  மட்டுண்ட தண்டமிழாற்
குயிலைப் பணிகொண்டு வெந்தற
  மாண்ட குடத்திலென்பை
மயிலைப் பொருகண் ணதிரூப
  மென்கிளி யாக்குவித்த
மயிலைப் பதியுஞ் சிவநேச
  ருந்தொண்ட மண்டலமே.  ௯௩

---

386. ௯-வது "மும்மையால்" என்னுந் திருப்பாட்டு. இது 1887, 1924-ல் இல்லை.

387. ௨௨-வது திருவிருத்தம். இது 1887-ல் இல்லை.

## மேற்கோள்

### 1. பெரிய புராணம்

(விருத்தம்)

தம்மை யுள்ளவா றறிந்தபின் சங்கரற் கடிமை
மெய்ம்மை யேசெயும் விருப்பினின் மிக்கதோ ரன்பாற்
பொய்ம்மை நீக்கிமெய்ப் பொருளிது வெனக்கொளு முள்
செம்மை யேபுரி மனத்தினார் சிவநேச ரென்பார். 388 [ளச்

### 2. திருக்கடைக் காப்பு

(பண் - சீகாமரம்)

மட்டிட்ட புன்னையங் கானன் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச் சுரமமர்ந்தா
னொட்டிட்ட பண்பி னுருத்திர பல்கணத்தார்க்
கட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய். 389

---

பிணிக்கோர் மருந்தனை யார்வாயி
லாரன்று பிஞ்ஞகனார்
பணிக்கோர் குறைவின்றி யங்கரி
யாகத்திற் பண்ணுவித்த
வணிக்கோ யிலும்பொற் சிகரமும்
வீதியு மாடரங்கு
மணிக்கோ புரமு முடையதென்
பார்தொண்ட மண்டலமே. ௬௬

388. திருஞானசம்பந்த சுவாமிகள் புராணம், ௧௦௩௯-வது திரு விருத்தம். இது 1887-ல் இல்லை.

389. திருஞானசம்பந்த சுவாமிகள் திருமயிலைத் திருப்பதிகம், ௧. இது 1887, 1924-ல் இல்லை.

மேற்கோள்

1. திருத்தொண்டத் தொகை

(பண் - கொல்லிக் கௌவாணம்)

துறைக்கொண்ட செம்பவள மிருளகற்றுஞ் சோதித்
தொன்மயிலை வாயிலா னடியார்க்கு மடியேன்.390

2. புராணசாரம்

ஆசிரிய விருத்தம்

ஞாயிலார் மதிற்றொண்ட நாட்டு மேன்மை
நண்ணுமயி லாபுரியின் வேளாண் டொன்மை
வாயிலார் மலைவில்லா னடியே போற்றி
மறவாமை தலைநின்ற மனமே செம்பொற்
கோயிலா வுயர்ஞானம் விளக்கா நீராக்
குலவியவா னந்தமன்பே யமுதாக் கொண்டு
தாயிலா னிருசரண நிகழ வேத்துந்
தன்மையா ரருள்சேர்ந்த நன்மை யாரே.391

---

பேணிய செந்தமிழ்த் தாதனுக்[392]
கேயன்பு பெற்றமையா
ணணிய கம்பன் சிவிகையுந்
தாங்கி நயந்ததமிழ்
பூணிய நின்றதும் பொச்சாப்பி
லாது புகுந்துபின்னும்

390. அ-வது "கறைக்கண்டன்" என்னும் திருப்பாட்டு. இது 1887, 1899-ல் இல்லை.

391. ருக-வது திருவிருத்தம்.

392. செந்தமிழ்த் தாய் தனக்கே—1887.

வாணியத் தாதற்குத் தாதா
னதுந்தொண்ட மண்டலமே. ௬௫

## மேற்கோள்

கட்டளைக் கலித்துறை

ஓங்கிய செந்தமிழ் தாதற் கடிமையவ் வூரதனு
ளாங்கவி சொல்வது மில்லையென் றேகம்ப நாடன்சொல்ல
வாங்கவ னேறுஞ் சிவிகை சுமந்து மடைப்பையிட்டுந்
தாங்கவி கொண்டதுங் கூவந்தி யாக சமுத்திரமே.393

---

பட்டாபி டேகம் பரித்தார்க்குண்
டோவிந்தப் பான்மைகெடக்
கெட்டார் கவிசொல்லி வந்தோர்க்கெல்
லாய்பொற் கிழியனைத்துந்
தட்டா னுதவிடுங் கூவந்தி
யாக சமுத்திரத்தின்
மட்டார் கவிகொண்ட மண்டலங்
காண்டொண்ட மண்டலமே.394 ௬௬

## மேற்கோள்

கட்டளைக் கலித்துறை

மட்டாருஞ் செங்கழு நீர்மணி மார்பரை வாழ்த்துமந்தக்
கிட்டாத யாசகர் கிட்டிவந் தாலதைக் கேட்டுமுன்னாட்
பட்டோலை வாசித் தவரவர்க் குள்ள பரிசிலெல்லாந்
தட்டா னளிப்பதுங் கூவந்தி யாக சமுத்திரமே.395

---

393. தனிப்பாடல். இது 1887-ல் இல்லை.

394. இச்சதகப் பாடல் 1887-ல் இல்லை.

395. தனிப்பாடல்(?). இது 1887-ல் இல்லை.

தன்னு லிசைபெறக் கூவந்தி
யாக சமுத்திரமென்
றன்னு ளொருவ னெடுந்தூண்டி
லிட்டிட வாங்கொருமீன்
பொன்னு லமைத்துப் பொருந்திடச்
சேர்த்துப் புகழ்கொண்டதான்
மன்னு வுலகத்து மன்னிய
சீர்த்தொண்ட மண்டலமே. ௯௭

மேற்கோள்

வெண்பா

இடுவார் சிலரு மிடாதார் பலரும்
வடுவிலா வையத் திருக்கப் — படுபாவீ
கூவத்து நாரணனைக் கொன்றுயே கற்பகப்பூங்
காவெட்ட லாமோ கரிக்கு.396

---

ஈட்டால மன்னவன் பின்னே
யறிய வெனக்கெனமுன்
கேட்டா னதற்குமுன் சென்றதவ்
வாருயிர் கேட்டவர்க்கு
நீட்டா விடினுந் தனக்கெனக்397
கேட்பினு நெஞ்சமுய்ய
மாட்டா திரண்டுமுன் கற்றில
தேதொண்ட மண்டலமே. ௯௮

---

396. ஒப்பிலாமணிப் புலவர் தனிப்பாடல். இது 1899, 1924-ல் இல்லை. 1899-ல் "நேற்றினும்" என்னும் பாடல் இதற்கு மேற்கோளாகக் காட்டப்பட்டிருக்கிறது. அசு-வது சதகப்பாடல் பார்க்க. 397. தனக்கென்ன—1887.

உளத்துத் தயைபற்ற வோர்புல
வோனுக் குடையுதவிக்
குளத்துப் புனலை யுடுத்துநின்
றேபின்பு கூவியவைக்
களத்துப் புகுதக் கலையுடுத்
தேகரை யேறிவந்த
வளத்துப் புகழ்பெற்ற வல்லாள
னுந்தொண்ட மண்டலமே. ௪௬

வில்லைச் செருப்பிட்ட காலா
லுதைத்து வியனுலகிற்
சொல்லற் கரிய புகழ்கொடுத்[398]
தோன்றுட்ட வீரன்றன்னூற்
பல்லக்கிலே யன்றி மண்படு
மோவெனும் பாடல்கொண்ட
வல்லப் பதிக்கச்சி யப்பனும்
வாழ்தொண்ட மண்டலமே. ௫

மேற்கோள்

வெண்பா

மண்படுமோ வெய்யலிலே வாடுமோ புல்லரிரு
கண்படுமோ வன்பாகக் கற்றவர்க்கு—மண்புகழ
மெச்சியப்பா லும்புகழும் வீறுவல்லை யாளவந்த
கச்சியப்ப னையுதைத்த கால்.399

398. புகழ்படை—1899.
399. வீர கவிராயர் தனிப்பாடல். இது 1924-ல் இல்லை.

மிண்டரை வெல்லும் வளர்சிங்க
ராயன் விலைகொடுப்பத்
தண்டமிழ் மேக முறத்தூரில்
வேதியன் ருனும்விற்பக்
கொண்டவன் பின்சென்று மண்டலத்
தேபுகழ் கொண்டபிரான்
வண்டமிழ்க் கும்ப னனதாரி
யுந்தொண்ட மண்டலமே. ருக

மேற்கோள்

வெண்பா

கம்பனென்றுங் கும்பனென்றுங் காளியொட்டக் கூத்த
[னென்றுங்
கும்பமுனி யென்றும்பேர் கொள்வரே—அம்புவியின்
மன்னு வலர்புகழும் வாயலன தாரியப்ப
னந்நாளி லேயிருந்தக் கால்.400

---

கொல்லையிற் பாற்பசு மேய்ப்போன்
கறப்பவன் கொண்டுசென்றே
யெல்லையிற் சேர்ப்பவன் பாலடு
வோனிவை401 யித்தனையும்
சொல்லையிற் பாவல ரேரோர்
கவிசொல்லச் சொல்லநல்கும்

400. தனிப்பாடல். இது 1924-ல் இல்லை. "தெரிக்கும் புலவர்க் கமுதூறியும்," "புலவர் நாவாயறைந்தும்" என்பன 1899-ல் மேற்கோள்களாகக் காணப்படுகின்றன. 401. இவர்—1887.

வல்லையிற் காளத்தி வாழ்வான
துந்தொண்ட மண்டலமே. ரு௨

## மேற்கோள்

### 1.

வெண்பா

பள்ளமே செய்யுட் பயிரையெல்லாங் கொள்ளுமுடி
வெள்ளமே யும்மையுநாம் வென்றோமே—புள்ளலம்பும்
பொற்காவி வாவிவல்லைப் பூபதிகா ளத்தியெனு
நற்கார் நெடுமுடியை நட்டு.402

### 2.

கட்டளைக் கலித்துறை

பெற்றா ளொருபிள்ளை யென்மனை யாட்டியப் பிள்ளைக்குப்
பற்றாது கஞ்சி குடிக்குந் தரமன்று பாலிரக்கச் [பால்
சிற்றாளு மில்லைமற் றெல்லா வறுமையுந் தீரவொரு
கற்றாத் தரவல்லை யோவல்ல மாநகர்க் காளத்தியே.403

### 3.

இதுவுமது

வழிமேல் விழிவைத்து வாடாம லென்மனை யானைமற்றோர்
பழியாமற் பிள்ளையும் பாலென் றழாமற் பசிரெனுஞ்சொன்
மொழியாம லென்னை வரவிட்ட பாவி முசித்துச்சதை
கழியாம லாவளித் தான்வல்ல மாநகர்க் காளத்தியே.404

---

402. திருக்குறுங்குடி நம்பி தனிப்பாடல்.
403. திருக்குறுங்குடி நம்பி தனிப்பாடல். இது 1924-ல் இல்லை.
404. திருக்குறுங்குடி நம்பி தனிப்பாடல். இது 1899, 1924-ல் இல்லை.

சீருறும்* பாடல்பன் னீரா
யிரமுஞ் செழுந்தமிழ்க்கு
வீரர்தஞ் சங்கப் பலகையி
லேற்றிய வித்தகனார்
பாரதம் பாடும் பெருந்தேவர்
வாழும் பழம்பதிகாண்
மாருதம் பூவின் மணம்வீ
சிடுந்தொண்ட மண்டலமே. ருங

மேற்கோள்

வெண்பா

கடல்கிழிய வோடுங் கலம்போல வொன்னா
ருடல்கிழிய வொள்வாள் விதிர்த்து—மடல்கிழியும்
பைம்பொற்றார் மன்னர் படைநடுவே யோடிற்றே
செம்பொற்றண் டேந்தினான் றேர்.405

---

சொல்லாயு மௌவை பரிவாய்த்
தனக்கிட்ட சோறுலக
மெல்லாம் பெறுமென்று பாட்டோதப்
பெற்றவ னின்னருளாற்
கல்லாரற் சுற்றிக் கிணறேறிப்
பாயுங் கழனிபெற்றான்
வல்லாண்மைப் பூத மகிபால
னுந்தொண்ட மண்டலமே.† ருச

---

சீர்தரும்—1899.

405. பெருந்தேவனார் பாரதம் (?) இது 1887-ல் இல்லை.

† இச்சதகப் பாடல் 1899-ல் இல்லை.

## மேற்கோள்

### வெண்பா

வரகரிசிச் சோறும் வழுதுணங்காய் வாட்டு
முரமுரலு றும்புளித்த மோரும்—விரகுடனே
புள்ளலூர்ப் பூதன் புகழ்ந்து விருந்திட்டா
னெல்லா வுலகும் பெறும்.406

---

ஆரான் முடியுமிக் காரியந்
தோடவி ழாத்திமலர்த்
தாரானை வேம்பின் றொடையானைப்
பெண்ணையந் தாமனையும்
போராடிக் காவலில் வைத்தவப்
பாட்டும் புனைந்ததன்றோ
வாராரு மோட்டிளங் கொங்கைநல்
லாய்தொண்ட மண்டலமே.* ௫௫

குழுவார் குடிமக்க ளானகண்
ணுளர் குறும்படக்கி
எழுவா யமைந்த மநுநீதி
யாற்பதி னெண்மரபு
முழுவா னரித்துக் கிடந்து
விடாம லுலகுக்கெல்லாம்

---

406. ஔவையார் தனிப்பாடல். இது 1889, 1924-ல் இல்லை. 1887-ல் பின் இரண்டடிகள் மட்டும் காணப்படுகின்றன.

* இச்சதகப் பாடல் 1899-ல் இல்லை.

வழுவா தமைக்கவும் வல்லது
நீடொண்ட மண்டலமே.407 ருசு

அழுவதுங் கொண்டு புலம்பாது408
நஞ்சுண் டதுமறைத்தே
யெழுவதுங் கொண்டு புகழ்க்கம்ப
நாட னெழுப்பவிசை
முழுவதுங் கொண்டொரு சொற்பேச
நெய்யின் முழுகிக்கையின்
மழுவதுங் கொண்டு புகழ்கொண்ட
தாற்றொண்ட மண்டலமே. ருஎ

---

407. இச்செய்யுளுக்கு 1899-ல் கண்ட மேற்கோள்கள் :—

(1) உன்னியசீ ரோச்சனென்றுங் கணக்கன் கும்பன்
உத்தமத்தி லேனாதிபூ விடுவான் பள்ளி
கைந்நெறியாற் றெழில்செய்வான் கொல்லன் தச்சன்
கார்கனகஞ் செய்கொல்லன் கன்னான் வண்ணான்
பன்னியுகம் பறையறையும் பறைய னாகப்
பன்னிருவர் குடிமக்கட் கடைவி தென்று
மன்னியசீர் மறைமுறைதேர் நால்வர்க் காக
மனுக்காஞ்சி செப்பேட்டில் வரைவித் தாரே.

(2) கத்தி யிரண்டு கடிப்பிரண்டு கல்லிரண்
டொத்த குலத்தார் ஒருமூவர்—இத்தலத்துப்
பூமாலை காரன் புனல்கடத்தி மெய்காப்பான்
கோமாறன் வைத்த குடி.

408. புலம்பாமல்—1887.

மேற்கோள்

வெண்பா

ஆழியான் பள்ளி யணையே யவன்கடைந்த
வாழி வரையின் மணித்தாம்பே—யூழியான்
பூணே யப்பூணுன் புரமெரித்த பொற்சிலையி
னுணே யகல நட.409

---

நேயத் துடன்பிறந் தோன்பிண
மூடி நெருப்பவித்துத்
தாயோப் பெனவெதிர் கொண்டழைத்
தேதன் னுடனெனவே
யாயத் தமிழ்கொண் டருங்கவி
ராய னுக் கன்புசெய்த
வாயற் பதியில் வடுகனும்
வாழ்தொண்ட மண்டலமே. நஅ

---

409. கம்பர் தனிப்பாடல். இது 1924-ல் இல்லை. 1899, 1924-ல் கண்ட மேற்கோள்கள்:—

(1) மேழி பிடிக்குங்கை வேல்வேந்தர் பார்க்குங்கை
ஆழி தரித்தே அருளுங்கை —சூழ்கலியை
நீக்குங்கை நின்று நிலைக்குங்கை நீடுழி
காக்குங்கை காராளர் கை.—1899.

(2) "......... பாவலர்தாம்
ஏரெழுப தோதியரங் கேற்றுங் களரியிலே
காரிவிட நாகங் கடிக்குங்கை."—திருக்கை வழக்கம்—1924.

மேற்கோள்

கட்டளைக் கலித்துறை

தன்னுடன் கூடப் பிறந்த சகோதரத் தம்பியுயி
ரந்நிலை மாண்டது தோன்றுமன் மூடிவைத் தன்னமிட்டான்
மன்னவர் போற்றிட வாழ்செங் கலங்கை வடுகனுக்குக்
கன்னனுஞ் சோமனு மோவிணை யாகக் கழறுவதே. 410

---

நெடுக விரித்துப் பிணமூடி
 னேன்மக னீயெனில்வா
கடுக வெனக்குமுன் முந்தவென்
 றேயோர் கவிதைசொல்லி
முடுக வழைப்ப மனையாள்
 பிணந்தனை மூடிச்சென்ற
வடுக னளித்த மகன்வாய
 லான்றொண்ட மண்டலமே. ருசு

மேற்கோள்

வெண்பா

முந்தவிளை யோன்மாள முத்தமிழோற் கன்னமிட்ட
வந்தவடுகன் மகனுயின்—வந்தென்
றலைக்கலியா ணத்துக்கே தான்பிணத்தை மூடி
யிலக்கணமாச் செய்குவைநீ யே. 411

---

410. புகழேந்திப்புலவர் (?) தனிப்பாடல்.

411. புகழேந்திப் புலவர் (?) தனிப்பாடல். 1899-ல் கண்ட
மேற்கோள்:—

இளையவன் பிணமூடி யமுதளித் தாய்சாத
 தடிகொடு புடைத்த புலவர்க்

பயிரைப் பெரும்பன்றி தின்றதற்
காகப் பரிசனத்தோ
ருயிரைப் பருகி யுடலவர்க்
கீய வொருபுலவோன்
செயிரப் புடைத்ததுந் தானே
பொறுத்தந்தச் செய்யுதவும்
வயிரப்ப னென்பவன் வாழ்வா
னதுந்தொண்ட மண்டலமே.[412] சுo

---

கினியலூண் நல்கியு மனைவியுயிர் விடுத்தனு
ளிரவலர் மணத்து வந்தாய்.

412. இதற்கு 1924-ல் கண்ட மேற்கோள்:—

குருகு தங்கள்கரு வெனவெண் முத்தமிசை
குடியி ருக்குமெழில் பழனநீள்
குமுத மல்குதட மேய வென்றிதிரு
தொண்ட மண்டல வரம்பினுள்
பரவு கால்வளபல் குன்ற கோட்டமெய்
யூர மர்ந்தவயி ரப்பபூ
பதித னக்கடிமை வேலை செய்பவர்வ
ளர்த்தபன் றியொரு பாவலன்
விரிநி லத்தில்சிறு பயிர ழிக்கநனி
வெகுளி கொண்டுவிறல் கவிவலான்
விரைவி லாங்கத னையம்வ ளர்த்தவ
னையுஞ்செ குக்கவயி ரப்பவேள்
கருதி வாணனிகல் முனிவு தீரநெடு
கதிர்வி ளைச்சலுத விப்புகழ்
கமழ்பெ ருங்குவளை மாலைசே ரிலகு
கங்கையங் குலவே ளாண்கொலோ.

ஈரக் கருக்கரி வாள்கொண்டு
போகையி லின்புலவோ
னேரொக்க வேநின்று வண்டோ
விடுமென நின்றுதனஞ்
சேரக் கொடுப்பவொன் றில்லாமன்
மன்னவன் செம்பொனெல்லாம்
வாரிக் கொடுக்கத் துணியவல்
லான்றொண்ட மண்டலமே. சுக

மேற்கோள்

வெண்பா

வண்டோ விடுந்தொண்ட மண்டலத்தா னேதியாக
முண்டோ விலையோ வுரை.413

---

பண்டை நிகண்டு திவாகரம்
பிங்கலம் பன்னுரிச்சொ
லெண்டிசை யின்சொல் வடமொழி
செய்யுளெல் லாமுணர்ந்தே
தண்டமிழ் கொண்டு நிகண்டுசூ
ளாமணி தானுரைக்க
மண்ட லவன்குடி கொண்டது
நீடொண்ட மண்டலமே.414 சுஉ

---

413. தனிப்பாடல் (?)

414. 1899-ல் கண்ட மேற்கோள் :—

பனியிமந் துகினமுப்பேர் பரிவேட மூர்கோள் வட்டந்
தனியிடும் வானவில்லே யிந்திர தனுவென் றகும்
வினைவென்ற வீரர்போற்றும் வீரமண் டலவன் செய்தான்
இனையவை தேவர்பேரால் ஈட்டந்தொண் ணூற்றே ழென்ப.

காரார் களந்தைப் புகழேந்தி
சொன்ன கலம்பகத்தி
னேரான நையும் படியென்ற
பாடலை நேரியர்கோன்
சீராகச் செப்பிய நற்பாடல்
கொண்டவன் செஞ்சியர்கோன்
மாராபி ராமனங் கொற்றந்தை
யூர்தொண்ட மண்டலமே. கங

மேற்கோள்

விருத்தம்

நையும் படியே நாங்கொற்ற
நங்கோன் செஞ்சி வரைமீதே
யையம் பெறுநுண் ணிடைமடவா
யகிலின் றூப முகிலன்று
பெய்யுந் துளியோ மழையன்று
பிரசத் துளியே பிழையாது
வையம் பெறினும் பொய்யுரைக்க
மாட்டார் தொண்ட நாட்டாரே. 415

---

தாறற்ற *செந்தமி ழொப்பாரி
யென்னுந் தமிழ்புனைந்தோன்
சேறைப் பதிசந்த்ர சேகர
வாணன்முன் சென்றவந்நாள்

---

415. புகழேந்திப் புலவர்—செஞ்சிக்கலம்பகம் (?)

* தாறற்ற—1887; தாரொத்த—1899.

வீறற் றனரென்று வேளா
ளரைமன் விலங்கிலிட
மாறற்கு வந்து முடிசூட்டி
னான்தொண்ட மண்டலமே. ௯௪

மேற்கோள்

கட்டளைக் கலித்துறை

ஒப்பாரி யாய்நின் மகவைத்
தெருவி லொருத்திகண்டே
யப்பா வெனவெடுத் தாளணைத்
தாளன்னை தானுமென்று
டப்பாதுன் மைந்தனென் றானங்கு
னேதலை சாய்த்து நின்றாள்
செப்பா யவளெவள் காண்சேறை
வாழ்சந்த்ர சேகரனே. 416

—

தன்னூர்ச் சனகையிற் சன்மதி
மாமுனி தந்தமைந்த
னன்னா லுரைத்த பவணந்தி
மாமுனி நற்பதியுஞ்
சின்னா லுரைத்த குணவீர
பண்டிதன் சேர்பதியு
மன்னா புரத்திரு வன்னமின்
னேதொண்ட மண்டலமே. ௯௫

416. கம்பர் தனிப்பாடல்.

மேற்கோள்

1.

அகவற்பா

மலர்தலை யுலகின் மல்கிரு ளகல
பவணந்தி
யென்னு நாமத் திருந்தவத் தோனே.417

2.

வெண்பா

பண்பார் கவிஞர் வியந்தெடுத்த பாட்டியலை
வெண்பா வந்தாதி விளம்பினான்—மண்பாவும்
கோடாத சீர்த்திக் குணவீர பண்டிதனும்
பீடார் களந்தைப் பிரான்.418

---

ஊரார் மலிபுலி யூர்க்கோட்ட
நற்குன்றத் தூரிலுள்ள
சீரார் * வளமலி பாக்கிழ
வோன்புகழ் சேக்கிழவோன்
காராளன் கூடற் கிழவோன்
முதுமொழிக் காஞ்சிசொற்ற
வாரார் புரிசைக் கிழவோனும்
வாழ்கொண்ட மண்டலமே.419

சாசா

417. நன்னூல், சிறப்புப் பாயிரம். இது 1887-ல் இல்லை.

418. வெண்பாப் பாட்டியல், சிறப்புப் பாயிரம்.
இது 1887-ல் இல்லை. * சீரார்—1899.

419. 1899, 1924-ல் கண்ட மேற்கோள்கள்:—.
(1) குளத்துழானு முண்டு—1899.

நீண்டார் வணங்குந் திருவாலங்
காடர்க்கு நெல்லமுதே
வேண்டா வெனக்கிந்தக் கூழே
யமைகென்று வேண்டியகூ
ழாண்டா ரொருவ ரறுபத்து
மூவரி லன்புவைத்து
மாண்டா ரவர்க்கு வளநாடு
நீதொண்ட மண்டலமே. சுஎ

நன்றாய் விளைந்ததை வேதியர்க்
கீந்தந்த நன்மையினாற்
பொன்றான் விளைந்திட நெற்போல
வேயதைப் போரடித்துக்
குன்றாக் குவித்ததை நெற்பரி
மாற்றங் கொடுத்தளித்தான்
மன்றார் களந்தைக் குடிதாங்கி
யுந்தொண்ட மண்டலமே. சுஅ

---

சேக்கிழார் புராணம்

நாடெங்குஞ் சோழன்முனந் தெரிந்தே யேற்று
நற்குடிநாற் பத்தெண்ணா யிரத்து வந்த
கூடல்கிழான் புரிசைகிழான் குலவு சீர்வெண்
குளப்பாக்கி ழான்வரிசைக் குளத்து ழான்முன்
தேடுபுக ழாரிவருஞ் சிறந்து வாழச்
சேக்கிழார் குடியிலிந்தத் தேச முய்யப்
பாடல்புரி யருண்மொழித்தே வரும்பி னந்தப்
பாலரு வாயரும்வந் துதித்து வாழ்ந்தார்—1924

## மேற்கோள்

வெண்பா

பொன்னெல்லை யெல்லாம் பொதிப்பொதியாய்ப் பூசுரற்குச்
செந்நெல்லே420 போலச் சிறந்தளித்தான்—பன்னகத்தின்
சீரார் மணியைவிலை செய்யானுஞ் செய்யகளத்
தாரானுஞ் செய்கரும மொன்று.421

வெங்கோலைக் கஞ்சி யடைக்கலந்
தான்புக வேந்தன்மைந்த
னுங்கலை யாம லொளித்துவைத்
தேதன் னொருமகவை
யிங்கிவன் றனவ னென்றே
யடையலர்க் கீந்துவிட்டான்
மங்கலஞ் சேர்கிடங் கிற்பெரு
மான்கொண்ட மண்டலமே. சா ஙெ

## மேற்கோள்

விருத்தம்

வந்தவுயிர் தனையளித்தான் கிடங்கில் வேந்தன்
வயலுழா னறமடங்கா தெனவு ரைத்தான்
செந்தமிழோர் கிளைவளர்த்தான் வேலூர் மன்னன்
செம்பியன்முன் வயிறிடந்தான் பேறை யூரா
னந்தமுள நாணளித்தான் வீடு ராதி
யடையாத வாசலா னிடையா லத்தா
னந்தனுட னமுதுண்டான் பேரா வூரா
னடைப்பரியா யிரங்கொடுத்தா னுறை யானே 422

420. செந்நெல்லைப்—1899. 421. தனிப்பாடல் (?)
422. ஆறைக் கலம்பகம் (?) 1924-ல் முதல் வரி மட்டும் காணப்படுகிறது.

எண்ணுன் கறந்தொண்ட மண்டலத்
தார்க்கன்றி யில்லையெனத்
தண்ணார் வயலுழான் ருன்சொல[423]
வேந்தன் றலைதடிந்த
தெண்ணுமன் மன்னனு மப்படி
யேசொல விப்படியின்
மண்ணுளும் வேந்தன் வரிசைபெற்
ருன்ருெண்ட மண்டலமே. எ0

மேற்கோள்

"வந்தவுயிர் தனை"யென்னும் பாடலிற் காண்க.[424]

---

கோனூ ருழவுக் குடியா
னவன்றன் குமிழம்பட்டு
வேலூர்க் கிழாரொரு வேளாளன்
பஞ்சம் விடியளவு
நாலூரி லுள்ள புலவோர்க்குந்
தேசத்து நாவலர்க்கு
மாலூரு[425]மன்னங் கொடுத்தளித்
தான்ருெண்ட மண்டலமே. எக

---

423. வயலுழன்ருன் சொல—1887, 1924.

424. முன் செய்யுளின் மேற்கோள். இது 1887, 1924-ல் இல்லை. "வயலுழா னற மடங்கா தெனவுரைத்தான்" என்பது 1899-ல் கண்டது.

425. மாலூரில்—1887.

மேற்கோள்

ஷை பாடலிற் காண்க.426

நறுங்கூ ழெனையன்றி யுண்டனை
யோவென நாணிவயி
றிறுங்கூர் நுதிவடி வாளாற்
பிளந்திட் டிருங்கரினை (?)
யுறுங்கூழ் புறத்தி லிருந்தானுக்
குய்த்துப்பி லாதபுற்கை
வறுங்கூழ் சொரிந்திட்ட முற்றவுண்
டான்றொண்ட மண்டலமே. எஉ.

மேற்கோள்

ஷை பாடலிற் காண்க.427

போதாருந் தண்பொழில் வீடு
ரதிபன் புலவர்க்கெல்லாந்
தாதா வெனக்கொடி கட்டுத
லாலவன் றன்மனையை

426. சுகூ-வது சதகச் செய்யுளின் மேற்கோள், இது 1887, 1924-ல் இல்லை. "செந்தமிழோர் இனைவளர்த்தான் வேலூர் மன்னன்" என்பது 1899, 1924-ல் கண்டது.

427. சுகூ-வது சதகச் செய்யுளின் மேற்கோள். இது 1887, 1924-ல் இல்லை. "செம்பியன் முன் வயிறிடந்தான் பேராவூரான்" என்பது 1899, 1924-ல் கண்டது.

நீதா வெனவொரு பாவாணன்
கேட்பவந் நேரிழையை
மாதா வெனவழைத் தானென்கொ
லாந்தொண்ட மண்டலமே. ௭௩.

மேற்கோள்

அந்தமுள நாணளித்தான் வீரோதி.[428]

---

கடைவா யலினின்றி யாசகர்
கூப்பிடக் காதிலது
தடையா யவனும்[429] பசியால்
வருந்தத் தடையகற்றி[430]
அடையாத வாச லுடையா
னெனும்பெய ராதரித்தான்
மடையார் கழனி யிடையாலத்
தான்றொண்ட மண்டலமே. ௭௪

மேற்கோள்

ஷை பாடலிற் காண்க.[431]

---

428. ௬௯-வது சதகச் செய்யுளின் மேற்கோள் பார்க்க. இது 1887-ல் இல்லை.

429. தடையாக வெம்—1887.

430. வருந்தா மற்றடையகற்றி—1887.

431. ௬௯-வது சதகச் செய்யுளின் மேற்கோள் பார்க்க. இது 1887, 1899, 1924-ல் இல்லை. "அடையாத வாசலா னிடையாலத் தான்" என்பது 1899, 1924-ல் கண்டது.

தரையார் மழையுந் தபனனும்
போலத்[432] தடையுமின்றி[433]
யுரையாது நீசனோ டுண்டமை
யாலுமொ ரூனமின்றித்
திரையார் புவியிற் புகழே
படைத்துத் தினந்தினமும்
வரையாது[434] வள்ளன்மை காட்டுவ
தாற்றொண்ட மண்டலமே. ௭௫

### மேற்கோள்

நந்தனுட னமுதுண்டான் பேராவூரான்.[435]

---

கூற்றார்ப் புலவ னொருபரி
கேட்பக் கொடைமதத்தா
லாற்றார்க் கிழான்பரி யாயிர
மீந்தன னாதலினால்
வேற்றார் பலவிது நம்மூ
ரெனும்படி வெம்பசியை
மாற்றார் பலவுள மண்டலங்
காண்டொண்ட மண்டலமே. ௭௬

### மேற்கோள்

நடைப்பரி யாயிரங் கொடுத்தா னுறையானே.[436]

---

432. போலோர்—1899.
433. தடையொன்றின்றி—1887.
434. வரையாத—1899.
435. ௬௯-வது சதகச் செய்யுளின் மேற்கோள் பார்க்க. இது 1887-ல் இல்லை.
436. ௬௯-வது சதகச் செய்யுளின் மேற்கோள் பார்க்க.

ஏதிலுந் தொண்டர்க் கிசையா
தனகுற்ற மின்பஞ்செய்தாற்
றீதிலு நன்மை பெறலா
மெனவையந் தேறத்தெவ்வைச்
சூதிலும் வென்று புலனைந்தும்
வென்றெம தூதரையும்
வாதிலும் வென்று வருமூர்க்
கருந்தொண்ட மண்டலமே. எஎ

மேற்கோள்

1.

(பண் - கொல்லிக் கௌவாணம்)

நாட்டமிகு தண்டிக்கு மூர்க்கருக்கு மடியேன். 437

2.

விருத்தம்

தொண்டவள நன்னாட்டு வேற்காட் டேர்வாழ்
தொல்லுழவர் நற்சூதர் சூது வென்று
கொண்டபொருள் கொண்டன்பர்க் கமுத ளிக்கும்
கொள்கையினற் றிருக்குடந்தைக் குறுகி யுள்ளார்
விண்டிசைவு குழறுமொழி வீணர் மாள
வெகுண்டிடலான் மூர்க்கரென விளம்பு நாம
மெண்டிசையு மிகவுடையா ரண்ட ரேத்து
மேழுலகு முடனாளு மியல்பி னாரே. 438

---

437. திருத்தொண்டத் தொகை, ரு-வது "வம்பறு வரிவண்டு" என்னும் திருப்பாட்டு. இது 1887, 1924-ல் இல்லை.

438. புராணசாரம், ௬எ-வது திருவிருத்தம்.

மெய்ப்பார் மனைவியைக் கொள்வாரு
மற்று விளக்குமுட்டக்
கைப்பாணி கொண்டு கழுத்தீர்ந்
துதிரங் கலத்துளட்டிப்
'பொய்ப்பார் புகழ வகல்விளக்
கோடு புகழ்விளக்கு
வைப்பார் கலியர் திருவொற்றி
யூர்தொண்ட மண்டலமே.439 எஅ

மேற்கோள்

1.

. விருத்தம்

தடமலர்சூ ழொற்றியூர் நகருள் வாழுஞ்
சக்கரப்பா டியர்குலமெய்த் தவமா யுள்ளார்
படர்புகழார் கலியனார் நலியுங் கூற்றைப்
பாய்ந்தவற்கு விளக்கெரிக்கும் பரிவான் மற்றோ
ருடலிலராய்ச் செக்குழல்வார்க் கதுவு நேரா
துயர்மனைவி யைக்கொள்வா ருளரு மின்றி
மிடற்றுதிரங் கலனிறைய வரிய நாதன்
வியன்கைகொடு பிடிப்பவருண் மேவி னாரே.440

2. திருத்தொண்டத் தொகை

(பண் - கொல்லிக் கௌவாணம்)

கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பற் கடியேன்.441

---

439. இச் சதகச் செய்யுள் 1887-ல் இல்லை.

440. புராணசாரம், ௬0-வது திருவிருத்தம். இது 1887-ல் இல்லை.

441. எ-வது "பொய்யடிமை யில்லாத புலவர்" என்னும் திருப்பாட்டு. இது 1887, 1924-ல் இல்லை.

கொத்தலர் கோதை யியன்பாண்டி
மண்டலக் கொம்பைத்தன்பால்
வைத்திருந் தாங்கவ டன்கேள்வன்
றேடி வரவவற்கே
யுய்த்திரு வோர்க்கும் வரிசையு
மாற்றி யுடனுஞ்சென்று
மைத்துனக் கேண்மை படைத்ததன்
றேதொண்ட மண்டலமே.[442] எசு

மோதிச் சிவந்த கவிகாள
மேக மொழிந்தவெண்பாப்
பாதிக்கு முந்திப் பரிசளித்
தோன்களப் பாளனெனு[443]
மாதிக்கம் பெற்றவ னூமூர்
முதலி யாசிருப்பா
மாதிக்கெ லாம்புகல் கின்ற[444]தொல்
சீர்த்தொண்ட மண்டலமே. அ0

---

442. இதற்கு 1924-ல் கண்ட மேற்கோள் :—
சென்டுகொண்டு குன்றைமோதி யன்றுவென்ற பாண்டியன்
றேசவாச மாதுளங் திகைத்துசுற்றி சுற்றரை
விண்டுதொண்ட மண்டலத்தை கண்டுகுன்ற வர்த்தனம்
மேவிவாடி தேம்பிநின்ற மின்னையன்ன வீடேனக்
கொண்டுகொண்ட பதிபின்வந்து கூடகூட னுடதிற்
கொஞ்டுபோய் நற்சீதனங் கொடுத்துசீர் நடத்தியே
பண்டுபோ லிருத்திதங்கை முறைமைபெற்ற சீலன்பூ
பாலர்தங் குலத்தில்வந்த பாலகிருஷ்ண சாமியே.

443. களப்பாள னென்று—1887.

444. புகழ்கொண்ட—1899.

## மேற்கோள்

வெண்பா

உள்ளங்கால் வெள்ளெலும்பு தோன்ற வொருகோடி
வெள்ளங்கா லந்திரிந்து விட்டோமே—தெள்ளுதமி
ழாமூர் முதலி யரசர்பிரா னிங்கிருக்கப்
போமூ ரறியாமற் போய்.445

---

வேலி யழித்துக் கரும்பையெல்
லாந்தின்ன விட்டிரவோர்446
காலில் வணக்கமுஞ் செய்தேத்திப்
பின்னுங் கரும்புதின்னக்
கூலி யளந்துங்447 கொடுத்தா
ெனாருவன் குமணனைப்போல்
வாலிதின் மிக்க கொடையாள
னுந்தொண்ட மண்டலமே. 448 அக

---

445. காளமேகப் புலவர் தனிப்பாடல்.
446. விட்டறவோர்—1899.
447. அளித்து—1899.
448. இதற்கு 1924-ல் கண்ட மேற்கோள்:—

"உத்தம கங்கா நதிமர பினிற்கண்
ணாரின்மா வேலியைத் திறந்தே
இத்தனை மனித ரெனுங்கணக் கின்றி
யிருநிலந் தனிற்புகழ் வளரச்
சுத்தமாஞ் சுவைசெங் கரும்பினைப் புசிக்கச்
சொல்லியே பினுந்தினுங் கூலி
பத்தியாய்க் கொடுத்தான் றொண்டமண் டலத்தின்
பலத்தினல் வீரபத் திரனே."

உணலைப் பசும்பொன் முதலான
வற்றை யுதவிப்பின்னுங்
குணலச்சை யுள்ளவர் கேட்கவுங்
கூசுவர் சொல்லெனவே
யெணலைக் கருதி யெழுதிவைப்
பீரென வின்மறைந்து
மணலைப் பரப்பிய முன்றிலுள்
ளான்றொண்ட மண்டலமே. 449 அஉ

பன்னுந் தமிழ்க்கவன் மாமனை
தாதி பரிசளிப்ப

---

449. இதற்கு 1924-ல் கண்ட மேற்கோள்:—
"நீணிலத் திலுறு மேழைமாந்த ரீர்
நீவிர்வேண் டுவன வின்புறீஇ
நேரில்கேண் மினவை தருவன்யா னலதும்
நினைவி லுன்னுமவை நவிலநீர்
நாணிலென் னுடைய மனைமுன் வாயிறனி
னன்மணன் மிகுதி கொட்டியே
நாம்பரப் பியுமி ருக்கிறோ மதனி
னுடிவந் ததனை யெழுதுமின்
காணிலங் குடனே யருள்வமென் னலவன்
கட்டளைப் படியே திட்டமாய்க்
கையினா லெழுத வுவகையோ டுபொருள்
கண்டளித் தப்ரபு யாரெனிற்
பூணிலங் குவர நதிகுலத் தில்வரு
புண்யனு னவதி கண்யனும்
புலவர் போற்றுமா கறலின்மேவு மெழில்
புண்யகோ டியெனும் பூபனே."

முன்னம்பி காளிக்கு நெற்குன்ற
 வாண முதலியென்போன்
பின்னுஞ் சிலபல பொன்னுங்
 கொடுத்துத்தன் பேர்நிறுத்த
மன்னுந் தமிழு முரைத்தா
 னவன்றொண்ட மண்டலமே. அரு

மேற்கோள்

கட்டளைக் கலித்துறை

கற்குங் கவிவல்லை யாதவர் கோனம்பி காளிக்கியாம்
விற்கும் பரிசன மாகிவிட் டோம்வட வேங்கடமும்
பொற்குன்ற மும்புகழ் கங்கா நதியும் பொதியமும்போ
னெற்குன் றமுநம் மரபுமெந் நாளு நிலைநிற்கவே.450

---

சீரொன்று தேவர் முதலாத
 லாற்றில்லை வாழ்முதலி
யாரென்று நாமம் படைத்தது
 போன்மற் றவருமந்தப்
பேரொன்று பெற்றது வேளாண்
 முதன்மையைப் பெற்றல்லவோ
வாரொன்று பூண்முலை யாரெளி
 தோதொண்ட மண்டலமே.451 அச

---

450. நெற்குன்றவாண முதலியார் தனிப்பாடல்.

451. இதற்கு 1924-ல் கண்ட மேற்கோள்:

சைவமே வாழச் செம்பியன் கேட்பத்
 தாழ்விலாத் திருத்தொண்டர் சீர்த்தி

கசிட்டன் புடைய விராவணன்
வீழக் கயிலையுறைந்
தசிட்டன் றிருவடித் தாமரை
பூசிக்கச் சார்ந்தபசு
விசிட்டந் தரு[452]மூலைப் பாலாறு
கொண்டு விருப்பமுடன்
வசிட்டன் றவஞ்செய்த மண்டலங்
காண்டொண்ட மண்டலமே. அரு

மேற்கோள்

கலித்துறை

கழிந்த பற்றுடை வசிட்டன திருக்கையாங் கவிஞர்
மொழிந்த நந்தியம் பெருவரை மொய்த்தசூன் முகில்கள்
பொழிந்த நீரது பொற்புறு தாழியிற் பொங்கி
வழிந்த பாலெனத் திசைதொறு மிழிந்தது மன்னோ.

---

வெல்லாமல் வென்றுநற் சந்தனக்
காட்டத்தின் மேலிருந்து

---

யுய்வகைச் சிற்றம் பலத்தொரு முதலி
யுவந்தருண் மொழிமுத லாகத்
தெய்வமாக் கதைமுன் செப்பிய திறத்தாற்
றிகழ்தரு முதலியே எனவு
ஐவறு மேவ லாற்றலா னலோர்
நற்பத்த ரெனவுமண் வழங்கும்.

452. விசிட்டன்றிரு—1887, விசிட்டன் தரு—1899.

* கந்தபுராணம், ஆற்றுப்படலம், கூ-வது செய்யுள். இது 1887, 1899-ல் இல்லை.

நல்லாறை நந்திக் கலம்பகங்
கேட்டபி னற்றுணைக்குக்
கொல்லா புரிசந்த்ரன் மாமுடி[453]
சூட்டக் குடைகவித்து
மல்லார் புரித்தொண்ட மானுன
துந்தொண்ட மண்டலமே. அ௬

## மேற்கோள்

கட்டளைக் கலித்துறை

நேற்றினு மின்று மிகுந்தது காத னிலவெனுங் கூன்
கூற்றினு மன்னை கொடியள்கண்டாய் மள்ளர் கொன்றபழஞ்
சேற்றினு மேதிக் குளம்பா னெருக்குண்ட செங்கருப்பஞ்
சாற்றினுஞ் சங்கந் தவழுங்கொல் லாபுரி சந்திரனே.[454]

---

அந்தப் புரமு மறுநான்கு
கோட்டகத் தாருமொன்றுய்க்
கந்தப் புராணம்பன் னீரா
யிரஞ்சொன்ன கச்சியப்பர்
தந்தப்பல் லக்குச் சிவிகையுந்
தாங்கியச்[455]சந்நிதிக்கே

---

453. சந்திரன்முடி—1887.

454. நந்திக்கலம்பகம் பாடிய தொண்டமான் தனிப்பாடல். இது 1899-ல் இல்லை.

455. பல்லக்கையுந் தாங்கிக் குமரர் போற—1887.

வந்தப் புராண மரங்கேற்றி
ஞர்தொண்ட மண்டலமே.[456] அ௭

உறைவா ளரச னொறுப்பானென்
றஞ்சி யொளித்ததுவும்
பிறவாமல் வைத்தவர் பேணுத
லாலவர் பேர்புனைந்து
திறவா ணிபர்[457]முதற் சாதியுள்
ளோரன்று[458]செய்தநன்றி
மறவாம லின்னமும் பாராட்
டிடுந்தொண்ட மண்டலமே. அஅ

மேதைப் புலவரொண் ணேகாம்
பரசம்பு [459] மெச்சநெடுங்
காதைப் புலவ ரிரட்டையர்
பாடுங் கலம்பகமு

---

456. இதற்கு 1924-ல் கண்ட மேற்கோள்:

கந்தபுராணம்

''வேதமொடு வேதாங்கம் பயின்று வல்லோன்
விரிந்தசிவா கமமுணர்ந்து மேன்மை பூண்டோன்
போதநிறை சிவமறையோன் காஞ்சி வாழும்
புனிதமிகு கச்சியப்ப குரவ னானேன்
வாதமுறு புலவர்குழா மகிழ்ந்து போற்ற
மதிமலிமா டம்புடைசூழ் குமர கோட்டத்
தேதமறு சகாத்தமெழு நூற்றின் மேலா
யிலகுகந்த புராணமரங் கேற்றி னானே.''

457. திறல் வாணியர்—1899.
458. சாதியுள்ளோரென்று—1887; சாதியுள்ளொன்று—1899.
459. ஏகாம்பரச் சம்பன்—1899.

மோதற் கரியகல் லேகம்ப
வாண ருலாவுமந்த
மாதைப் பனுவலும் பாராட்
டிடுந்தொண்ட மண்டலமே. அசு

மேற்கோள்

கட்டளைக் கலித்துறை

எறிக்கும் புகழ்க்கச்சி யேகாம்
பரசம்ப னெண்டிசையும்
பொறிக்கும் புலிக்கொடி யான்புயம்
வேட்டபின் பூவையன்னாள்
வெறிக்குங் குமக்கொங்கை மீதே
விழிசொரி வெள்ளந்துள்ளித்
தெறிக்குந் திவலை யழிக்குஞ்சிந்
தூரத் திலதத்தையே. 460

---

தாளாண்மை யுள்ள புகழ்க்கிருஷ்ண
ராயன் சமுகத்திலே
வேளாண் மகளிரைப் போலே
விநோதித்து வேடங்கொண்டு
கோளார் வயிரியர் கூத்தாடத்
தங்கள் குடிமையெண்ணி
வாளா லவனுயிர் மாய்த்ததன்
றோதொண்ட மண்டலமே. கூ0

---

460. இரட்டையர்—பல்லவராயன் கோவை (?). இது 1887-ல் இல்லை.

தருவுற்ற காளத்தி கச்சியந்[461]
தாதியுந் தண்டமிழ்தேர்
திருவொற்றி யூரிற் குறுந்தொகை
தானுந் திரைகடலைப்
பொருவுற்ற கச்சிம லிதே
ரெனமுன் புகல்கவியு
மருவுற்ற சுந்தன்மின் னேயுண்டு
காண்டொண்ட மண்டலமே. சுக

## மேற்கோள்

1.

காளத்தியுங் கயிலாயமு நேரென்பர்.[462]

2.

அறந்தா னியற்று மவனிலுங்கோடிய திகமில்லம்.[463]

3.

ஓங்குகட லுடுத்த வொற்றி யூர![464]

---

461. காளத்தி நாதரந்—1899.

462. இது 1887, 1924-ல் இல்லை.

463. பட்டினத்துப் பிள்ளையார் திருவேகம்பமாலை, க-வது திரு விருத்தம்.

"மெய்த்தொண்டர் செல்லு நெறியறி யேன்மிக நற்பணிசெய்
கைத்தொண்டர் தம்மிலு நற்றொண்ட னேந்தில னுண்பதற்கே
பொய்த்தொண்டு பேசிப் புறம்புற மேயுன்னைப் போற்றுகின்ற
இத்தொண்ட னேன்பணி கொள்ளுதி யோகச்சி யேகம்பனே"

என்னும் தொடக்கமுடைய திருவந்தாதியும் காண்க. இது 1887, 1924-ல் இல்லை.

464. பட்டினத்துப் பிள்ளையார் திருவொற்றியூர் ஒருபாவொரு பஃது, எ-வது பாட்டு. இது 1887, 1924-ல் இல்லை

4.

மலிதேரான் கச்சியு மாகடலுந் தம்மு
ளொலியும் பெருமையு மொக்கும்.465

---

பண்டையோர் நாளை யிலோரேழ்
கலிங்கப் பரணிகொண்டு
செண்டையு மேருவிற் றீட்டுவித்
தோன்கழற் செம்பியன்செய்
தொண்டநன் னாடு புரக்கின்ற
கோனந்தித் தோன்றலெங்கள்
வண்டையர் கோனங் கருணை
கான்றொண்ட மண்டலமே. ௯௨

மேற்கோள்

*தாழிசை*

இறைமொ ழிந்தளவி லெழுக லிங்கமிவை
யெறிவெ னென்றுகழ றெழுதனன்
மறைமொ ழிந்தபடி மரபில் வந்தகுல
திலகன் வண்டைநக ராசனே.466

---

465. —மலிதேரான்
கச்சி படுவ கடல்படா கச்சி
கடல்படுவ வெல்லாம் படும் —காரிகை, செய்யுளியல, ௩-வது இன்னிசை வெண்பாவிற்கு உதாரணம். இது 1887, 1924-ல் இல்லை.

466. கலிங்கத்துப்பரணி, ௰௧, காளிக்குக் கூளி கூறியது, ௩௰ இது 1924-ல் இல்லை. அதில் கண்ட மேற்கோள் பின்வருமாறு:—

தேர்கொடுத் தோனும் பரிகொடுத்
தோனுந் திருமணையிற்
றூர்கொடுத் தோனுங் கலிகொடுத்
தோனுந் தமிழினுக்கா
வூர்கொடுத் தோனு முயிர்கொடுத்
தோனு முதைகொடுக்க
மார்கொடுத் தோனு மனைவோரு[467]
ளார்தொண்ட மண்டலமே. சுரு

துரைத்தியாக ராயர்முன் சுந்தரர்க்
காவொரு தூதுசென்ற
விரைத்தா மரைமணம் வீசுதல்
போல்விடப் பாய்சுருட்டித்
திரைத்தா வணத்தி லொருபுல
வோன்பின்பு சென்றசெந்தா
மரைத்தாண் மணமின்ன நாறுங்கண்
டீர்தொண்ட மண்டலமே.[468] சுச

---

சானிரைத் தாலன்ன கண்பனி
தாங்கத் தலைமிசைச்செங்
கானிரைத் தாரையுங் காண்பன்கொல்
லோகலிங் கத்துவெம்போர்
நானிரைத் தார்தந்த மால்யானை
கள்பொன்னி நாடளவும்
வானிரைத் தான்றொண்ட மான்வண்டை
மாநகர் மன்னவனே.

467. அனையரு—1887; அனைவொரு—1899.

468. இதற்கு 1899, 1924-ல் கண்ட மேற்கோள்கள்:—
(1) நடந்த செந்தாமரையடி நாறுமால்—1899.

வானப்பிர காசப் புகழ்க்கிருஷ்ண
ராயற்கு மஞ்சரிப்பா
கானப்பிர காசப் புகழாய்ந்து
கச்சிக் கலம்பகஞ்செய்
ஞானப்பிர காச குருராயன்
வாழ்ந்து நலஞ்சிறந்த
மானப்பிர காச முடையோர்
வளர்தொண்ட மண்டலமே. 469 ௬௫

மந்தா கினியிற் றிரிவேணி
சங்கத்தின் மாண்டொருவன்
மந்தா கினியுற்ற பாதாளம்
புக்கு வணங்கிநின்று
மந்தா கினிக்கு மகவாகக்
கேட்ட வரங்கொடுப்ப

---

(2) திருவாரூர் இரட்டைமணி மாலை.

பேணாது விட்ட பரவை யெனும்பெயர்ப் பெண்ணிடைப்(?)
பேணுவிக் கும்படி பின்னரும் வேண்டிட முன்னயன்மால்
காணா முடியடி யவ்வீடு கண்டிடச் சுந்தரர்க்காக்
கோணாது சென்ற குரைகழற் கன்பென் றுங் கூறுநெஞ்சே-1924.

469. இச் சதகப்பாடல் 1899-ல் இல்லை. இதற்கு—1924-ல் கண்ட மேற்கோள்:—

மண்டல புருடர் நிகண்டு:

படைமயக் குற்ற போதும் படைமட மொன்றில் லாதான்
மடைசெறி கடகத் தோளான் மதிக்குடை மன்னர் மன்னன்
கெடிமன்னர் வணங்குந் தாளான் கிருட்டின ராயன் கைபோற்
கொடைமட மென்று சொல்ப வரையாது கொடுத்த லாமே.

மந்தா கினிக்கு மரபான
துந்தொண்ட மண்டலமே.470 சுஎசு

காவிய மாகிய காமீகங்
கண்டுகங் காகுலத்தோ
ரோவிய சூத்திர ராக
விருபத்து நான்குயர்ந்த
மேவிய கோட்டத்தி லுங்கரி
கால வளவன்மிக்க
வாவிய மேன்மை கொடுத்தளித்
தான்றொண்ட மண்டலமே.471 சுஎ

470. இதற்கு 1924-ல் கண்ட மேற்கோள்:—

வேளாளர் அம்மானை

சீராரித் தாரணியில் தெய்வத்தன்மை யார்குலத்தார்
காராளும் வேளாளர் கங்கைகுல மம்மானை
காராளும் வேளாளர் கங்கைகுல மாமாயின்
பேராரு மாறுப் பிரியாரோ வம்மானை
ஆறுகச் செய்கை யமைந்தார்கா ணம்மானை.

471. இச் சதகப்பாடல் 1899-ல் இல்லை. இதற்கு 1924-ல் கண்ட மேற்கோள்:—

"அழகுறுமே ழிக்கொடியார் தொண்டமண் டலத்தா
ரருண்ஞானப் பிரகாச ரடியார் கோட்டம்
புழல்புலியூ ரீக்காடு மணவூர்செங் காடு
புகழ்பையூ ரெயிற்றாமல் புணலூற்றுக் காடு
விழைவுறு களத்தூர்செம் பூராமூ ரீதூர்
வெண்குன்றம் பல்குன்ற மிளங்காடு படுவூர்
தழைசோவலக் காலியூர் சிறுகாரை கடிகை
சந்திரிகை குன்றபத்திரம் வேங்கடம்வே லூரே."

புகமேழு கோடி யிருபதி
லக்கமு முள்ளமட்டுஞ்
சகமேழு மேழும் புகழே
நிறுத்தித் தமிழ்புனைந்து
புகழ்மேழி வாகைப் பதாகையும்
வீரப் புலிக்கொடியு
மகமேரு விற்சென்று நீட்டிய
தாற்றொண்ட மண்டலமே.[472] கூஅ

நாடான கோட்ட மிருபத்து
நான்கினு ணற்றண்டகத்
தாடாத செக்கு மரையாத
வட்டியு மாகிவளர்
பீடாதி பீடத் திருக்காமக்
கோட்டம் பிறங்குகச்சி
மாடா திபரெனுங் காலாண்ட
ருந்தொண்ட மண்டலமே.[473] கூகூ

இன்னவர் காலத்தி லெத்தனை
பேர்மற் றிவர்களுக்கு

472. இதற்கு 1924-ல் கண்ட மேற்கோள்:—

கலிங்கத்துப்பரணி

செண்டு கொண்டுகரி காலனொரு காலி னிமயச்
சிமய மால்வரை திரித்தருளி மீள வதனைப்
பண்டு நின்றபடி நிற்கவிது வென்று முதுகிற்
பாய்பு லிக்குறி பொறித்தது மறித்த பொழுதே.

473. இச் சதகப் பாடல் 1899-ல் இல்லை

முன்னவர் காலத்தி லெத்தனை
பேரிம் முதலிகடம்
பின்னவர் காலத்தி லெத்தனை
பேர்கள் பிறப்பவர்முன்
மன்னவர் காலத் தொடர்புடைத்
தாற்றொண்ட மண்டலமே. ௧00

நிலைவாழ்வு பெற்றிடும் வேளாளர்
வாழிநன் னீருழவு
தலைவாழி யேகம்பர் சந்நிதி
வாழிசங் காழிதண்டு
சிலைவாழி வாழி திருநெடு
மாறிரு வேங்கடமா
மலைவாழி யெண்ணெண் கலைவாழி
வாழ்தொண்ட மண்டலமே. ௧0௧

நூலின் அநுபந்தம்

1.

தகைவந்த சீர்த்தொண்ட மண்டலத்
தார்தஞ் சரிதையயித்
தொகையென் றொருவர்க்குஞ் சொல்லப்
படாதுசொன் னாலுமிக்க[474]
நகைவந் திடுஞ்சொற் புலவோர்
சபையினி னாமுநம்மால்

474. மெத்த—1899.

வகைவந்த மாத்திரஞ் சொல்லிவைத்
தோமிந்த மண்டலத்தே.475

2.

காவைவென் றிடுகத் தூரி
கண்மணிக் கறுப்ப னென்னு
மாவையம் பதியான் றூண்ட
மண்டல சதகங் கேட்டு
நாவலர் புகழ்ந்து மெய்ச்ச
நவநிதி பொழிந்து நன்றுப்
பூவுல கெங்கும் போற்றப்
புகழ்நிலை நிறுத்தி னானே.476 க

475. இது இந்நூலின் அவையடக்கம் என்று தோன்றுகிறது. இச் சதகப் பாடல் 1887, 1924-ல் இல்லை.

476. இது முதல் ஐந்து செய்யுட்களும் இந்தச் சதகம் அரங்கேற்றுகைக்கு உதவிய கறுப்பன் என்னும் வள்ளலை இந்நூலாசிரியர் அவ்வமயம் புகழ்ந்து கூறியனவாகும். இவ்வைந்து செய்யுட்களும் 1887, 1899-ல் இல்லை. 1924-ல் நூலாசிரியர் வரலாறு என்ற தலைப்பின் கீழ் அதன் பதிப்பாசிரியரவர்களால் இவற்றோடு பின் வரும் செய்யுளும் அவர் அவ்வமயம் கூறியதாகக் கருதிச் சேர்க்கப் பட்டிருக்கிறது.

கூடுந் திரைகொண் டிவன்வேலை பார்த்துக் குறுகலர்கள்
தேடுந்தென் மாவைக் கறுப்பனெங் கோனெஞ் சிவிகைதனைப்
பாடுந் தமிழ்ப்பெரு மானொட்டக் கூத்தன் பதாம்புயத்தைச்
சூடுங் குலோ:த்துங்க சோழனைப் போலச் சுமந்தனனே.

கன்மாரி காத்தமுகிற் கத்தூரி
　　யருண்மாவைக் கறுப்ப னென்னு
மின்மாரி தனதுகிளை யத்தனையுஞ்
　　சபைகூட்டி வியந்து கேட்டுச்
சொன்மாரி பொழிந்திடவே சிரகரகம்
　　பிதஞ்செய்து சுருளுந் தந்து
பொன்மாரி பொழிந்துதந்தப் பல்லக்குச்
　　சுமந்துமிகு புகழ்பெற் றானே.　　உ

ஓர்கறுப்பு மில்லாத தொண்டவள
　　நன்னாட்டி லுசித வேளைச்
சீர்கறுப்பொன் றில்லாத கத்தூரி
　　மன்னனருள் சேயைப் பார்மே
லார்கறுப்ப னென்றுசொல்லி யழைத்தாலு
　　நாமவனை யன்பி னாலே
பேர்கறுப்ப னிறஞ்சிவப்பன் கீர்த்தியினால்
　　வெளுப்பனெனப் பேசு வோமே.　　௩

எல்லப்ப னம்மையப்பன் றருதிருவேங்
　　கடநாத னெழிற்சீ ராமன்
வல்லக்கொண் டையன்மாதை வேங்கடே
　　சுரன்போல வரிசை செய்தான்
செல்வத்தம் பியருடனே கத்தூரி
　　மகன்கறுப்பன் றெருவீ திக்கே
பல்லக்குத் தான்சுமந்தா னதுநமக்கோ
　　ராயிரம்பொன் பரிசு தானே.　　௪

இந்தச் சதகக மாங்கேற்று
கைக்கிசைந் தேனெவரும்
வந்திக்குமா வைக்கத் தூரிக்
கறுப்பன் வளமைபெறு
புந்திக் குலாவுநள் ளாறர்தம்
பாதம் பொருந்துமன்பன்
வந்துற் பவிக்க மகிழ்வான
தூந்தொண்ட மண்டலமே.477 ௫

3. சுவாமிகள் பதிப்பித்த தொண்ட மண்டல சதகமூலமும் அவர்கள் அதன் சார்பாக எடுத்துக்காட்டிய மேற்கோள்களும் முடிந்தன.478

---

477. பின்வரும் இரண்டு சதகப்பாடல்கள் 1887-ல் மட்டும் காணப்படுகின்றன:—

முழங்கு மியத்தட னேர்பா வலன்வர முன்னியவன்
றழங்குஞ் சிவிகையைத் தாங்கிக் கொணர்ந்தபின் முன்விரும்புங்
கிழங்குட னேயா யிரவகை யாங்கறிக் கீரனமும்
வழங்கும் பெருநகர்ப் பிச்சையப் பன்றொண்ட மண்டலமே.

ஈழந் திறைகொண் டெதிர்த்தோரை வென்ற விரவிகுலச்
சோழன் கவியு மவன்றேவி பாடலுஞ் சூட்டிக்கொண்டான்
வேழம் புரைசொற் கவிவீர ராகவன் வீற்றிருந்து
வாழுந் தமிழ்மண் டலமல்ல வோதொண்ட மண்டலமே.

478. அடுத்த இரண்டு பாடல்களும் 1899-ன் இறுதியில் சேர்க்கப்பட்டிருக்கின்றன:—

வண்டீர மலர்த்தேன் சிந்தும் பெண்ணையில் வடபால் வேழங்
கண்டீர வங்கண் டார்க்குங் காளத்தி வரையன் றென்பால்
தண்டீரப் புணரி மேல்பால் பவளமர் சயிலக் கீழ்பால்
தொண்டீரத் திருநா டென்னு மதன்வளம் வகுத்துச் சொல்வாம்.

## 4. இந் நூலாசிரியரைப்பற்றிச் சுவாமிகள் பதித்த குறிப்பு

இத்தொண்ட மண்டல சதகஞ் செய்த புலவர் செங்குந்த மரபிற் றோன்றிச் சிவானுக்கிரகத்தால் தமிழ்க்கலை முழுதும் பயின்று, தெய்விகம் விளங்கிய நல்வாக்கினைப் பெற்று,[479] சிதம்பரத்தில் நடேசர்

---

வடதிசைக்குக் காளத்தி வாருதியே நேர்கிழக்காந்
திடர்சைல வருமருவணைத் தெற்காகும்—குடதிசைக்கும்(?)
அண்டர்போற் றும்மருவண யைம்மூன்றேன் பான்காதந்
தொண்டநாட் டெல்லையெனச் சொல்.

479. இப்புலவர் பெருமான் வாக்கினை வியந்து பலபட்டடைச் சொக்கநாதப் புலவர் பாடியது:

மட்டாருந் தென்களந்தைப் படிக்காச
னுரைத்ததமிழ் வரைந்த வேட்டைப்
பட்டாலே சூழ்ந்தாலு மூவுலகும்
பரிமளிக்கும் பரிந்தவ் வேட்டைத்
தொட்டாலுங் கைமணக்குஞ் சொன்னாலும்
வாய்மணக்குந் துய்ய சேற்றில்
நட்டாலும் தமிழ்ப்பயிராய் விளைந்திடுமே
பாட்டினறு நளினந் தானே.

வேறு தனிப்பாடல்

வெண்பாவிற் புகழேந்தி பரணிக்கோ
சயங்கொண்டான் விருத்த மென்னும்
ஒண்பாவி லுயர்கம்பன் கோவையுலா
அந்தாதிக் கொட்டக் கூத்தன்
கண்பாய கலம்பகத்திற் கிரட்டையர்கள்
கவிபாடக் காள மேகம்
பண்பாகப் பகர்சந்தம் படிக்காச
லாதொருவர் பகரொ ணாதே.

பொன்பணம் ஐந்து பஞ்சாட்சரப் படியில் வைத்தருளக் கொண்டு, அதனாற் படிக்காசுபுலவர் என்று பெயர் பெற்றவர்.

4. இந் நூலாசிரியரைப் பற்றிச் சுவாமிகள் பதித்த குறிப்பு முற்றிற்று.

கூ. தொண்ட மண்டல சதக உரை முற்றிற்று.[480]

---

480. 291, 308-வது அடிக்குறிப்புகளைப் பார்க்க. அவற்றில் கண்ட மற்றைய பதிப்புக்களில் மூலத்திலும் மேற்கோள்களிலும் பெரும்பாலும் 'தொண்டைமண்டலம்' என்றே காணப்படுகிறது. ஆனால், இப்பதிப்பில், ஸ்ரீ சுவாமிகள் ஆராய்ந்து முடிவுபடுத்தியதைப் பின்பற்றி அப்பதிப்புக்களிலிருந்து பாடல்களை எடுத்துக்காட்டும் போதும் 'தொண்டமண்டலம்' என்றே வேறுபாடின்றி பதிப்பிக்கப் பட்டிருக்கிறது. இதனால், இது மற்றைய பதிப்பாசிரியர்களுக்கும் உடன்பாடு என்று குறித்ததாகாது.

# எ. சின்மய தீபிகை-ஸ்ரீ சுவாமிகள் பதிப்பு[481]

---

### பாயிரம்

*அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்*

அகர வுயிராய்ச் சுடரொளியா
யகண்ட விரிவாய்த் துரியநடுச்
சிகர மணியா மவுனநிலைத்
தேசோ மயமென் பதைப்போற்றிப்

---

481. சின்மய தீபிகை என்னும் இந்த ஞானநூல் இன்றைக்கு 77 வருஷங்கட்குமுன், பிங்கள௵ கார்த்திகை௴-ல் (1857) சுவாமிகளால் பரிசோதித்து முதற்பதிப்பாக அச்சிடப்பட் டிருக்கிறது, விவரங்களுக்கு அநுபந்தம் பார்க்க. தெரிந்தவரையில், ஸ்ரீ சுவாமிகள் கடைசி முறையாக அச்சிற் பதிப்பித்தது இந்த அரிய ஞான நூல்தான். இந்நூலை இயற்றிய ஆசிரியரது பெயர் முதலிய எந்தத் தகவலும் சுவாமிகளது பதிப்பில் காணப் படாததால், இவை அக்காலத்திலேயே மறைந்தன போலும். ஆனால் சுவாமிகளது இப்பதிப்பையே பின்பற்றிப் பதித்த தாய்க் கூறும் இந்த நூலின் 1907-ம் வருஷப் பதிப்பில் இதன் ஆசிரியர் 'விருத்தாசலம் குமாரதேவசுவாமிக ளாதீனம் முத்தைய சுவாமிகள்' என்று இதன் பதிப்பாசிரியர் காஞ்சிபுரம் ஸ்ரீ இராமானந்த யோகி அவர்களால் கண்டிருக்கிறது. இதன் உண்மையை ஆராய்ந்து கொள்க. மேற்சொன்ன வகையில் சுவாமிகளது சம்பந்தம் ஏற்பட்டிருக்கும் இந்த நூல் திருவருளால் கிடைத்த சுவாமிகளது முதற்பதிப்பின் ஒரு பிரதியைக்கொண்டு முதற்கண் (23-1-1932) திரு அருட்பா-உபதேசப்பகுதிக்கு அநுபந்தமாகச் சேர்க்கப்பட்டது. பாகுபாடொற்றுமை நயங்கருதி இதை இப்போது இப்பகுதியில் சேர்த்திருக்கிறது.

புகரி னுளத்தி னிருளகற்றப்
பொலிந்து வளர்சின் மயதீபம்
பகர வருளும் பரமகுரு
பதும மலர்மென் பதங்காப்பாம். க

சீரார் மவுனந் திகழ்சுடராய்த்
திகழு மொளியாய்ச் சின்மயமாய்ப்
பாரா ருயிரின் பரமநிலை
பதிந்தா னந்த முற்றுநிதம்
பேரா தருளுங் குருதிருத்தாள்
பெற்றே மயக்கப் பிணக்கறுத்து
வாரா வின்பக் கடல்பருகி
வாழ்வோ ரிணைத்தாள் வாழ்த்துவனே. உ

பொருவேல் விழியொண் பொன்றிதலை
பொலிந்த குரும்பை முலைமங்கைப்
பருவ மிசைந்த மடமயிலைப்
பரிவா யணையும் பருமயக்கிற்
றிரியும் விடர்கொக் கோகவிதந்
தேடி யுணர்வா ரெனப்பரம
குருவின் மலர்த்தாள் வேண்டுபவர்
கொள்வா ரிந்நூற் குறிப்பறிந்தே. ௩

தேசோ மயமா மிறையியற்றுஞ்
செய்கை யானுந் துரியநிறை
யாசா னருள்பெற் றதனானு
மறிஞர் பழக்கத் தானுமென்னுட்
கூசா துதித்த விந்நூலின்
குறிகண் டமர்ந்த குணத்தோர்கள்

பேசா ராகிக் குருபதத்தைப்
பெறுவா ரின்பம் பெறுவாரே. ௪

பாலர் மழலை மொழிகேட்டுப்
பாகோ டமுதங் கலந்துண்டாற்
போல மகிழ்ந்தா னந்தமிகப்
பொங்குந் தாயுண் மையையறிந்து
ஞால மதிலிச் சிறுவனுரை
நன்று நன்றென் றகமகிழ்ந்து
சால வருளா திருப்பாரோ
சற்சிற் சுகத்திற் சார்ந்தோரே. ௫

## பாயிரம் முற்றிற்று

## நூல்

வேறு

அருமறையின் சிரப்பொருளா யண்டபகி
ரண்டமுமா யமல மோனத்
தொருபொருளாய்ப் பலவிதமா யுணர்வரிய
பேரொளியி னுண்மை யாகும்
பெருவெளிகண் டானந்தம் பெறுதற்குக்
குருபதத்தைப் பெறுதல் வேண்டி
யிருளறவே மலம்விளக்கு நெஞ்சையழைத்
தறிவுரைத்த வியல்பு சொல்வாம். ௧

பரஞ்சுடராய்ச் சின்மயமாய்ப் பரம்பொருளா
யிலகுகின்ற பரம சோதி
நிரஞ்சனனும் விஞ்சைகற்றோ னியற்றுமிந்த்ர
ஜாலமெனு நிலத்தின் வண்மை

தெரிந்திதனை யகற்றுமற் கண்டபல
பொருட்காகச் சிந்தை செய்து
திரிந்தனையே நெஞ்சேநீ யென்றறிவாய்
பரமவெளி தேடு மாறே. உ

எங்குநிறைந் திலகியடி முடிநடுவா
யெப்பொருட்கு மிறையா மென்னும்
பங்கமிலாச் சிறுபாலன் மணல்வீடு482
விளையாட்டாம் பாரின் வாழ்வை
யிங்குநிலை யெனமதிப்ப தொழிந்துகுரு
பதமலரி னிச்சை மேவிக்
கங்குல்பக லற்றவிடத் திருந்துசுகங்
காண்பாயோ கடிய நெஞ்சே. ௩

தேனினருஞ் சுவையாகித் திகழ்மலரின்
மணமாகித் தெருளு மாகி
வானிறைந்த வெளிமருவி யுயிர்க்குயிராய்த்
துரியநிறை வயங்குஞ் சோதிக்
கோனெனுநற் கூத்திவல்லோன் கோதறவாட்
டியபாவைக் கூத்தை நம்பி
நானெனுமா ணவத்தோடு நாட்கழித்து
நெஞ்சேநீ நலிவுற் றாயே. ௪

வருக்கமுறச் சொற்பனத்திற் கண்டதெலா
நிலையென்றே மதிப்பார் போலுந்
திருக்கமல நதிப்புனலென் றருஞ்சுரங்கண்
டோடிமறி திகைத்தல் போலும்

482. வீட்டு—1907-ம் பதிப்பு. இனி இப்பதிப்பு 1907 என்றே குறிக்கப்படும்.

பெருக்கமுற்றே யழிவாழ்வை வாழ்வென்னும்
பேதைமையைப் பிரித்த றுத்துக்
கரைத்துவிடா தலைந்தாயென் றறிவுரைக்க
நெஞ்சமினிக் கனன்று கூறும். ரு

மாயமெனு மாசையற வல்லமைபெற்
றிமெறிவே மண்ணின் மாழைச்
சீயமிரு புறந்தாங்கு மாசனத்தில்
வீற்றிருந்து செங்கோ லோச்சி
நாயகனு யழியாத வாழ்வுடைய
மன்னனென நானும் வாழ
நேயமிக வுற்றேனஃ தடைவனென
வறிவுமினி நிகழ்த்து மன்றே. சு

நிலவுமிழுந் தனிக்குடைக்கீ ழரசாண்டு
நேரலர்க ணெருங்கிப் போற்றப்
பலவிதமாப் படைபுடைசூழ்ந் திடக்களிற்றின்
பிடரியொளிர் பரிதி யென்ன
விலகுகின்றோ ரோடேந்தி யிரந்தமன்ன
ரெண்ணிலா ரென்ற றிந்தும்
உலகுதனி லாசையுற்ற நெஞ்சேநீ
யென்றிதனை யுணரு மாறே.483 எ

வாரிதிசூழ் புவிதனையே தன்னதென
மதித்தாண்டு மாண்ட மன்னர்
பாரினினுண் மணலிகர்ப்பா ரெனவுரைக்கும்
பழமொழிபட் டாங்கு கேட்டுந்
தாரிலங்குந் தாமமுடித் தரணிபர்கண்
முதலானோர் தளர்ந்து தேகஞ்

483. நாளே—1907.

சீரறவே செத்துமண்ணுஞ் செயலறிந்தும்
புவிமயக்கிற் சேர்ந்தாய் நெஞ்சே. அ

இரவுதனிற் கூத்தாடு மவைநேரா
மிவ்வாழ்வை யிருக்கு மென்றே
கருதிமிக வாசையுற்றாய் காசினியை
லாங்குடைக்கீழ்க் காத்தல் போலக்
குரைகடல்சூ ழெழுதீவுக் காசைகொள்ளும்
பாழ்நெஞ்சே குருவின் றாளிற்
சரணமென வடைவதென்று புவிமயக்கிற்
சிக்கிநொந்து தவிக்கின் றாயே. கூ

வாங்குகடல் சூழ்புவியைப் பொதுவறவே
யாண்டுமன மகிழ்ந்து சீர்த்தி
யோங்கிவளம் பெற்றிருந்துங் கடல்கடக்க
வோடிடினு மோடு கையிற்
றாங்கியிரந் துண்டிருந்து மொருசாணி
னுதரபசி தணிக்க நாளும்
எங்குவதா லுள்ளதுவே போதுமெனி
லாசையறு மிணங்காய் நெஞ்சே. கo

ஆசையெனு மழுக்கதுன்மே லடைந்திருந்தாற்
பரமகுரு வருணீ ராலே
மாசறவே கழுவாமன் மலமிகுத்த[484]
வாழ்க்கையெனு மண்டு சேற்றைப்
பூசியதி லழுந்திநித முழல்கின்றாய்
பாழ்நெஞ்சே பொங்கு மாசை
நாசமுறக் கருதிநிலை நாடாம
னலிந்தனையே நவிலக் கேண்மோ. கக

484. மலமிகுந்த—1907.

உன்னுடைய வாழ்வுதனக் குயர்ந்தோரைக்
கண்டுபெற்று யுன்னி யுன்னி
யன்னபடி வாழவென்றாற் சாமளவு
மலைவுற்றே யழன்று வாடி
யின்னலனு பவித்திடுவாய் நெஞ்சேநீ
சங்கற்ப மிகழ்ந்தே யுன்றன்
பொன்னிலகு வாழ்வுதனிற் றனித்தோரை485
யெண்ணிமகிழ் புரிந்தி டாயே. கஉ

வண்டறவே யுனக்கமைத்த தல்லாம
லலைந்தாலும் வாரா தென்று
கண்டிருந்து மலைந்தனையே யெனவுரைக்க
நெஞ்சகமுங் கருதிக் கூறும்
உண்டுடுத்துச் சுற்றமுட னன்பாக
வாழ்வதுவே யுலகி லின்பங்
கொண்டதன்மே லாசையுற்றே னெனவறிவு
சுற்றமது குழையக் கூறும். கங

கனகமிகும் பெருவாழ்வு சிறந்தவரைக்
கண்டோர்கள் கலந்து கூடித்
தனதுடைய சுற்றமென மகளைமணம்
புணர்ந்திடவே தருவார் வாழ்க்கைக்
கனமதுகெட் டிடிற்பெற்றோர் பிறந்தோரு
மிகழ்ந்தவிதங் கண்டும் பற்றாய்த்
தினமவரைச் சுற்றமெனத் தியங்கினையே
நெஞ்சகமே செப்பக் கேண்மோ. கச

பழுத்தமரந் தனிற்பறவை நிறைந்திருந்து
பழமோயப் பறந்த தேபோற்

485. தனித்தோரை—1907.

கொழித்தநிதி சிறுத்தவுடன் சுற்றமகன்
றிடுமெல்லாற் கூடு மோமண்
வழுத்தமன்னர் முடிதாழப் புவியாண்டோ
ரிரந்துண்டு வாடும் போதில்
அழுத்தமுட னுதரித்த சுற்றமுண்டோ
நிலையற்றே யலைந்த நெஞ்சே. கரு

தந்தையன்னை சுற்றமொடு தனயர்களு
மடந்தையருந் தரணி தன்னிற்
சுந்தரமாய் நெருங்கியிடப் புவியாளப்
பெற்றாலுஞ் சொல்லொ ணுத
வந்தயமி நடுவாகு மருண்மவுனப்
பரஞ்சுடரி னமைப்பு நீங்கி
யிந்தவுட லிறந்திடும்போ தெவராலென்
னிதம்பெறுவா யேழை நெஞ்சே. கசு

குலமென்றுஞ் சுற்றமென்று மகவென்று
மனைவியென்றுங் கூட்ட மெல்லாம்
அலமந்த கற்பனையா லல்கலுற்ற
தல்லாம லாவ துண்டோ
மலமென்ற மாயையிதி லெவரிருந்தெ
னெவரழிந்தென் மடமை நெஞ்சே
பலனுண்டோ சுற்றமதாற் பரமசுக
மடைவதுண்டோ பகர்ந்தி டாயே. கஎ

அத்துவித நிலையாகிப் பூரணமாய்
நிட்களமா யறிவாய் மோன
தத்துவமாய்ச் சுழுமுனையிற் கற்பூர
" தீபமெனச் சார்ந்தே யோங்கு

நித்தியத்தைச் சுற்றமென நெருங்கியதிற்
சேராம னில்லா வாழ்வை
யொத்தபெருஞ் சுற்றமென வலேந்தனேயே
யெனநெஞ்ச முரைக்கு மன்றே. கஅ

என்னுடைய குலத்தோரைச் சுற்றமல
வெனவுரைத்தே யிகழ்ந்தாய் மாந்தர்486
சொன்னமொழி புகழ்வேண்டிற் சுற்றமடை
கெனவிருப்பச் சுற்றந் தன்னே
சின்னமிது நிலேயல்ல வெனத்துறந்தாற்
புகழ்வாரார் செப்பு மென்ற
தன்னிகரி றீமைநெஞ்சுக் கெதிராக
வறிவுமொழி சாற்று மம்மா. கக

பெருமையொடு புகழ்வேண்டிற் பொருள்வேண்டும்
பொருளீட்டிப் பேண வென்ருல்
அருமைகெடும் படிச்சிறியோர்க் காளாகி
யேவல்புரிந் தலேந்து நொந்தே
இருவகைக்குண் மருண்டுபொரு ளீட்டியிசை
படைப்பதுவா யிசையு மற்றப்
பெரும்புகழ்கள் வருமுன்னம் வருஞ்சிறுமை
யறிந்திலேயோ பேதை நெஞ்சே. உ0

பரமகுரு வருணிலேயிற் பிணம்போலக்
கிடந்துசகப் பாங்கை நீங்கி
யுரமுடனே சுகவடிவாய்க் கிடப்பதல்லா
லிப்புகழா லூக்க முண்டோ

486. சான்ருேர்—1907.

பெருமயக்க முலகிலழுந்[487] திடுமெவர்வாய்ப்
புகழ்மிகவும் பெருமை யென்றே
வருமயக்கிற் சிக்கிநெஞ்சே யலைந்துழன்று
மடங்காமல் வாதுற் றாயே. உக

நில்லாத வாழ்வதனை நிலையென்று
சகமயக்கை நிசமென் றெண்ணிப்
பொல்லாத புகழ்வேண்டி வருத்தமுற்றாய்
நிலையதனாற் பொருந்த லாமோ
எல்லாருங் கண்டிடவே நாயேறி
யோர்பெருமை யெய்து மானாற்
புல்லாண்மை யுள்ளநெஞ்சே புகழதனாற்
பலம்பெற்றுப் பொருந்த லாமே. உஉ

பிரியாத பேரன்பாற் புகழ்ந்தழைத்தாற்
பரமசுகம் பெறுவ தல்லாற்
பரியாசத் துட னிகழ்ந்து பழிகாரக்
கொலைக்கள்வன் பாவி யென்றுங்
கருதரிய கோளனிவ னெனப்புவியோ
ருரைத்ததனாற் காணொ ணாத
துரியநடு நிலையான குருவருடா
னகன்றிடுமோ சொல்லாய் நெஞ்சே. உங

பொய்யாகும் புகழதன்மே லாசைதனை
யொழிந்திடெனப் பொருந்தி நெஞ்சம்
மையாருங் கடற்புவியிற் சொந்தமதாய்
நிலைமைபெற மண்மே லிச்சை

487. வுலகிலழுந்—1907.

ஐயாவென் றனைவாட்டு தெனமண்ணி
லாசையுற்று லதிலே நொந்து
மெய்யான தறியாம லலைவாயென்
றறிவுமினி விளம்பு மன்றே. உ௩

குருதிதசை நரம்பெலும்பு தோல்குடல்சீ
நிணங்களெனுங் கூட்டங் கூடி
மருவுபுழுக் கிடமாகு மிவ்வுடற்குச்
சொந்தமதா மண்ணை வேண்டித்
திரியலுற்று யுடன்மாண்டே யெவ்விதமு
மண்ணுகச் சேரு மென்றே
கருதிநிலை பெற்றிலையே மண்மனையே
சொந்தமெனக் கவரு நெஞ்சே. உ௫

புவிநிரம்பி நித்தியநின் மலவடிவாய்
நிர்க்குணமாய்ப் பொலிந்து மேலாய்த்
தவநெறியாய்ச் சமயமெலாந் தானுகு
மிறைநிலையாந் தடத்தந் தன்னிற்
குவியவுநீ சொக்கியது சொந்தமெனக்
குருவருளைக் குறித்தி டாமல்
அவனிதனின் மண்மனைமே லாசையுற்று
யெனநெஞ்ச மறையு மன்றே. உ௬

ஓதரிய வறுமையுறுங் காலமெய்தி
ணுதவ வோங்கு செம்பொன்
ஆதரமாப் புதைக்கவென்ற நெஞ்சையிகழ்ந்
தறிவுரைக்கு மமல மோனப்
பூதரசிற் செயலையன்றிச் சீருளவோ
விரவிமதி பொருந்து நாளிற்

சீதமதி நலம்பெருகக் குடசலத்தி
லிந்துசிறை செய்த தாமே. உஎ

தீவினைநல் வினையனைத்துந் தானுகி
நின்றதொரு தெய்வந் தானே
மேவியொரு தன்488வறுமைத் துயரமுறத்
திருவுளத்தில் விரும்புங் காலத்
தாவியதோர் துன்பமுற்றுத் தளர்வதல்லாற்
சுகமடையத் தகுமோ வீட்டில்
ஆவலுடன் புதைத்தபொரு ளானையுண்ட
விளங்கனிய தாகு நெஞ்சே. உஅ

இனிப்பொசிக்க வேண்டுமென வாசையிலா
தீப்பொசிப்ப தென்ன நீயுந்
தனிப்பொருளி னமைப்பதனுற் கிட்டுவதை
யுண்டுபசி தணித்தி டாமல்
அனிச்சமலர் வனந்தோறு மலைந்துகொடுந்
தேனீக்க ளருந்தே னீட்டிக்
குனித்தசிலை வேடனுக்குக் கொடுப்பதுபோற்
பொருளீட்டக் குறித்தாய் நெஞ்சே. உகூ

காசினியில் வெறுப்புடனே கடனடுவில்
விட்டிடினுங் கனகச் செம்பொன்
நேசமுற வுரிமையொடு முனைச்சேரு
முனக்குரித்தாய் நெருங்குங் காலை
ஆசையுடன் பொருள்புதைத்துப் பொன்காத்த
பூதமென வருகி னின்றும்

488. ஒருத்தன் — 1907.

நாசமுறுங் காலம்வந்தா லழிந்திடுமென்
றுரைக்கநெஞ்சு நவில்வ தன்றே. ௩௦

குடும்பமெனுஞ் சமுசாரக் கூட்டமஃ
தென்றனையே குறித்து நம்பித்
திடம்பெறலா மெனவிருக்க வதுதனையே
காக்கநிதந் திகைத்தே னென்றே
யடர்ந்தநெஞ்ச முரைத்திடவே சமுசாரக்
கடலதனி லழுந்தித் துன்பம்
படர்ந்ததனை தனைத்தனைத்துக் கொண்டாயென்
றறிவுமினிப் பகரு மன்றே. ௩௧

அடுத்தவரைக் காக்கநித மல்கலுற்றே
னென்றநெஞ்சே யாவி மாண்டு
படுத்துவிடிற் காப்பாயோ வெனவிருக்கு
மளவவரைப் பரிந்து காக்கத்
தொடுத்தாசை யுற்றெனென வறிவுரைக்கும்
பிணிதொடரி னலதோர் வேளைக்
கெடுத்தரசர் சிறையிடினுங் காப்பாயோ
வெனநெஞ்சங் கிளத்து மன்றே. ௩௨

வக்கணையாய் வெகுசமர்த்தா யுரைத்தாயென்
குடும்பமதை வண்மை யாகப்
பக்குவமாய்க் காக்கவெனை யல்லாம
லொருவருண்டோ பகரா யென்ன
அக்கணமே யதிசயித்தே யறிவுரைக்கு
மலரின்மண மாக வெங்கும்
புக்குவுயிர் களைக்காக்க விறையிருப்ப
தறியாமற் புகல்கின் றுயே. ௩௩

கோபுரத்தி லமைத்துவைத்த பொற்பாவை
கோபுரந்தோட் கொண்டு தாங்கிச்
சோபமுற்ற தெனக்கூனி யிருப்பதொக்கு
நெஞ்சேநீ சொன்ன நீர்மை
தாபரத்தோ டேனையமற் றுயிர்களையுங்
காத்துநிலைச் சார்பு நல்கத்
தீபவொளி யெனத்தேசோ மயமிருப்ப
தறியாமற் றிகைக்கின் றாயே. ௫௪

பருத்தமலைக் குட்டேரை யுண்டாக்கி
யாகாரம் பருக நல்கி
வருத்தமறக் காத்தளிக்கு நிட்களமுன்
குடும்பமதை வளர்க்கு மென்று
கருத்தினினைந் திருக்காமற் காசினியி
லையுறவாற் கலங்கி நொந்து
செருச்செய்வார் போலடர்த்த துயர்க்காணு
யென்றிடவே செப்பு நெஞ்சம். ௫௫

எனையடுத்த பேர்களுக்கா வேதமுற்று
வருந்துவதை யிகழ்ந்தீர் மெத்தக்
கனதனத்தை யுடையோரை யடுத்தவரா
லியான்பிழைக்கக் கருத்தி லூற்றுத்
தினமலைந்தே னென்கின்ற நெஞ்சமதைக்
குறித்தறிவு செப்பு முன்றன்
இனமதெலாஞ் சுத்தமுற வெதுவுரைத்துந்
தெரிந்திலையே யேழை நெஞ்சே. ௫௬

மன்னுமெழிற் பசுங்கிள்ளை யிலவதனைக்
கீர்த்துமன மலைந்த தென்னப்

பொன்னுடையோர் தமைக்காத்துப் புல்லறிவோ
ரலைந்துலைந்து போவர் நாளும்
தன்னிகரி லாவறிவோர் சற்குருவின்
பதம்போற்றித் தனித்தா னந்த
இன்னமுத முண்பரென வறிவுரைக்க
நெஞ்சமினி யேங்கிக் கூறும். ௩௭

பொருளுடைய வேந்தர்தமை யடுப்பதனை
யிகழ்ந்தீரியான் பொசிப்ப தற்கே[489]
அருளுடனல் லன்னமது நல்குவரா
னெனநெஞ்ச மறைந்த காலை
உரமறிந்தா யில்லைவன விலங்கினுக்கும்
பறவைமுத லுயிர்கட் கெல்லாம்
பருகவுண வருளுமந்த நிலையறியா
யென்றறிவு பகரு மன்றே. ௩௮

அரவுதனக் கமுதளித்து வளர்த்துமுல
குயிர்தனக்கு மன்பா யன்னம்
பருகவருள் புரிந்துகடற் பலவுயிர்க்கு
முணவருளிப் பண்பாய் நின்று
தருநெருங்கும் பருவனத்தின் மரந்தனக்குந்
தாரகமாய்த் தண்ணீர் நல்கி
அருமையொடு வளர்த்திடுநற் பொருளிருக்க
வுழன்றனையே யலையு நெஞ்சே. ௩௯

முட்டையினுட் குஞ்சினுக்கு மமுதீந்து
வளர்த்துமொய்த்த தளிர்க்குச் சாயந்

489. புசிப்பதற்கே—1907.

திட்டமுட னிட்டுவளர் தெங்கினுக்கு
ணீரருளிச் சேணீர் மீனின்
குட்டிதனக் குள்ளிருக்கு முட்டனக்குக்
கூர்மைதனைக் கொடுத்து மோன
வெட்டவெளி யாயபரஞ் சுடரிருக்க
வீணாக மெலிந்தாய் நெஞ்சே. ௪0

கரையற்ற வுவராழிக் காசினியைக்
காக்கவைத்துக் காரின் கூட்டம்
விரைவாகப் பொழிந்துலகு செழித்திடவே
யமைத்துவைத்து வெளியி னித்தம்
இரவிமதி கதிமாறு திலங்கவைத்து
மலப்பீற்ற விருக்குங் கூட்டிற்
பரிவாக வைம்பூதம் வாழவைத்த
பொருளிருக்கப் பயமென் னெஞ்சே. ௪௧

விந்துவெனு நீரதனை யுருவாக்கிக்
கருப்பமதில் விரும்பிக் காத்துத்
தந்திரமாப் புவியில்வரத் தயவுபுரிந்
திவ்வளவுந் தனித்துக் காத்த
அந்தமிலா விறையிருக்க வலைகின்று
யென்றிடவே யறையும் பாசச்
சிந்தையற்றே னுதரபசிக் கென்செய்வே
னெனவறிவு செப்பு மன்றே. ௪௨

காசினியி லுள்ளபல வகங்களெலாம்
வாழ்ந்திருக்கக் கருதும் வேளை
நேசமற்ற பரிகலங்க ளிருக்கவருஞ்
சுவைக்கனிகாய் நெருங்கி யோங்கும்

பாசிலையின் மரங்கடமைழத் திருக்கநீர்
படர்ந்திருக்கப் பரிவா யானும்
பூசிக்கும் பரமகுரு வருளிருக்கத்
தவிப்பதென்னோ புகலாய் நெஞ்சே. உந

அத்துவிதப் பரமகுரு வருளிருக்கப்
பொருளிருக்க வன்பா யாமுஞ்
சுத்தமுற வுடுத்துதற்கு விரத்தியெனுந்
தூசிருக்கத் துயில்வ தற்கே
அத்தமுடை யோரமைத்த புறந்திண்ணை
பலவிருக்க வகிலந் தன்னில்
எத்தகைமைச் சாதியினு மிரந்துண்ணத்
துணிவிருக்க விளைப்ப தென்னோ. உச

திருவோடா நிதியிருக்கத் திகைப்பதென்னோ
வென்றிடத்திற் சுவையா யன்னம்
பரிவாக விடுவரோ வெனச்சுவைக
ளுவளவே பண்புற் றப்பால்
விரைவாக வசக்கியமா மலமாவ
தறிந்திலையோ வெனவே வண்ணம்
பிரிவான பேதமுள தெனவறிவு
மையமறப் பேசு மன்றே. உரு

சாதிதனி லுயர்ந்தோர்க ளுடலன்ன
மயமென்னிற் ருழ்ந்தோர்க் கந்த
நீதியா மலதுசயி தன்னியமென்
றிடிலதுவாய் நிற்கு மென்னிற்

பேதமுறு மோகனக பாத்திரத்து
நீரினிலே பிருதி490 தோன்றுஞ்
சோதிகதி ரவன்வேறோ வங்கணத்திற்
பிருதியுற்ற491 சுடர்தான் வேறோ. ௪௬

கொக்கதனிற் குக்குடந்தான்492 கூடியிடி
லண்டமது குறிக்கு மோசொற்
பக்குவத்திற் கடைசியரைப் பாங்காக
வேதியர்கள் பரிந்து கூடிற்
றக்கவிந்து தரியாதோ சுடலைதனிற்
சுடுநாற்றந் தான்வே றுண்டோ
மிக்கவுரை யாதியந்தம் பேதமுண்டோ
வெனநெஞ்சம் விளம்பு மன்றே. ௪௭

புலன்பொறிகள் வேண்டியதற் காசையுற்றே
னெனவறிவு புகலுந் தும்பி
மலைந்துமிக நாசியினுன் மான்காதி
னுன்மீன்கள் வாயி னுனும்
அலர்ந்தகனற் கண்டவிட்டிற் கண்ணுனுங்
கரிபரிச மடைத லானும்
பலன்பெறவே நினைந்திறந்த வென்றிடவே
நெஞ்சமினிப் பகரு மன்றே. ௪௮

எப்பொழுதும் பொறிபுலனுக் கேற்றசுபா
வீகமதை யிருந்து நேர்மை
செப்புமென வறிவுரைக்கு மனமேயுன்
விருத்தியதிற் சேர்ந்த தாலே

490. பிரதி—1907. 491. பிரதியுற்ற—1907.
492. கொக்குதனிற் குக்கிடந்தான்— 1907.

அப்புலந்தான் களங்கமுற லாச்சந்த
விருத்தியினை யடக்கிக் கட்டித்
தப்பவிடா திருந்திடவே சகமயக்கிற்
பொறிபுலன்கள் சாரா வன்றே. ௨௯

மனம்வியந்து விருத்திதனை யடக்குவதெப்
படியெனவே மற்றொன் றைத்தா
னினைந்ததனி லழுந்துமப்போ தெதிர்தோன்றும்
பொருளுணரா நெறிபோ னீயும்
கனத்தகினை வினைப்பரம குருபதத்தி
லுறப்புலன்கள் கடடா யென்ன
எனைப்புரக்க மகவாசைக் கிசைந்தெனென்ற
நெஞ்சையிகழ்ந் தியம்பு மன்றே. ௩0

நதிதனிலே விரைந்துவரு நீருடனம்
மணலுறவாய் நம்பி நாளும்
அதிகவுற வெனநினைந்த தொக்குமக
வாசையிக வன்ப தாமோ
ததிகடைந்த வெண்ணெய்தனை யம்மோரிற்
கலந்துவிடிற் சார்கி லாபோற்
சதியிசைந்த நெஞ்சேநற் றந்தையுமக்
களுங்கலந்துஞ் சார்கி லாரே. ௩௧

அந்தியத்தின் மகவுதவி வேண்டுமென
வாசையுற்றே யலேந்தாய் மாயப்
பந்தமல்ல லெவரிருந்தென் னுயிரொடுங்கிப்
புலன்கலங்கிப் பதைக்கும் போது
சுந்தரசிற் பரமகுரு சொன்னிலைபோன்
மயக்கறுக்குந் துணிவுண் டாமோ

சிந்தையுற்ற நெஞ்சேயென் றறிவுரைக்க
நெஞ்சமினிச் செப்பு மன்றே. ருஉ

விண்ணிலங்கு மதிமுகமும் விற்புதலுங்
கொல்கொலைக்கு வேல்வா ளனும்
கண்ணிதென வரிபரந்து கடைகிழிக்கு
மதர்விழியுங் காமக் காத
லெண்ணருஞ்சன் னதமூட்டு மிளமுலையுங்
குறுநகையு மிலங்க வொல்கும்
வண்ணமயி லையுங்கூட மறக்கவென்பி
ரோவெனவே வழங்க லுற்றும்.493 ருங

நிலவொழுகு மதிமுகத்தி னெடுமூக்கு
நீண்டவிழி நிமையு முத்தென்
றிலகுமிள நகையதனை மறைக்குமித
ழையுங்குறித்தே யீர்ந்து பார்க்கி
லலமிகுத்த வாசைதரு மரிவைமுகத்
தழகதனை யறிய லாகு
முலையதனை மூடியதோ லகன்றிடிலம்
முலையழகு முணர்வாய் நெஞ்சே. ருச

கன்னியர்தம் மொளிர்முகத்தைக் கண்டகண்ணல்
வெண்டலையைக் கருதி யூன்றி
யுன்னியதி னுறுப்பறிந்து பெண்முகமு
மிப்படியொன் றென்ன வோர்ந்து
மின்னலெனப் பேசுமுடன் மலக்கூடு494
வழியுமிது மின்போ னெஞ்சே

493. வழங்குமன்றே—1907.
494. மலக்கூடிங்கழியுமிது—1907.

பொன்னின்மலை யென்றமுலை பொதிந்ததசைக்
கட்டியெனப் பொருந்தி டாயே. ருசு

கள்ளொழுகு மலர்சூட்டிக் குழனாற்றந்
தனைமாற்றிக் களபச் சேற்றை
யள்ளியவண் மீதணிந்தே யுடனாற்ற
மாற்றிவைத்தா யவண்முன் னின்று
வெள்ளெலும்பைக் காட்டிநகைத் திடமயங்கி
யுடன்மறந்து வேட்கை மிஞ்சிக்
கள்ளமலத் துடன்கலந்த நெஞ்சேநீ
யவளுடலைக் கருதி லாயே. ருசு

நீருண்ட கட்டிதனை வேலென்றுங்
கயலென்று நெடுங்க ணென்றுந்
தாரணியெ லாமறியு மென்பைமுத்து
நகையென்றுந் தசையின் கண்டம்
வாருருவித் தத்தியெழு முலையென்றுந்
தோலுதட்டில் வரும்பல் லூத்தை
சேருமெச்சி லமுதமென்றே குருதிகுழி
யின்பமதிற் றிகைத்தாய் நெஞ்சே. ருள

துரியநிறைப் பரமகுரு சொல்லியநன்
னிலைமயக்கிற் சொக்கி நாளும்
பிரமமணிச் சுடர்மலையிற் கண்ணூன்றிப்
பரமசுகம் பெற்று வாழக்
கருதிநகை யடங்காமற் கன்னியருக்
காளாகிக் கலங்கி நொந்து
குருதியொடு புன்னீர்க ளொழுகுகுழி
யின்பமதைக் குறித்தாய் நெஞ்சே. ருஅ

பூரணத்தி னிலைநிதமும் புகன்றிருக்கப்
பூவையரைப் புகழ்ந்தா யென்றே
சீருறைந்த வறிவுரைக்கத் தெரிவையர்க
ணிலையெனக்குத் தெரிந்த தென்ன
காரணமோ வத்துவிதக் காரியநீ
ருரைக்குமிந்தக் கணத்தி லேயு
மாரமுலை மீதாசை யாகுதென்செய்
வேனெனவே யறிவு கூறும். ருக

நாடிநரம் பெலும்புதசை தோற்குருதி
நிணம்பொதிந்து நாறற் பீற்றற்
கூடியதிற் புழுக்குதிக்குங் கும்பியெனு
மலப்பாண்டக் கூட்டை நாளுந்
தேடரிய பேரழகா மெமதுடலென்
றாசைமிகச் சிறந்த தாலே
வாடுமிடை யாருடன்மே லாசையுற்று
யுன்னுடலை மதித்தி லாயே. சு0

பசியறவே புசிப்பதற்கா யாடீர்ந்தே
யுரிக்குமவர் பாலிற் சென்று
வசையறவே யசங்கிதத்தை மறந்துநினை
வதிலூன்றி வளமை பார்க்கிற்
றசையெலும்பு குடலீர னிணங்குருதி
யிருப்பதுவைத் தன்றே கத்தும்
பிசகிலா திப்படியே யிருக்குதெனிற்
பெண்ணாசை பெறுமோ நெஞ்சே. சுக

கூத்திகரந் தவறிகரத் தரியதசைச்
தோனரம்பு காணக் கொய்தே

யத்திவெளி கண்டுதென 495 வுரைப்பதன்றித்
தோற்கூடடென் றகத்தெண் ணமற்
சித்திரமா யழகுமணிப் பூணிலங்கத்
தினங்கலவை திமிர்ந்து வாசக்
கொத்துழலர்த் தாரணிந்தே யிறுமாப்பாய்ப்
பெண்மயக்கங் கொண்டாய் நெஞ்சே. சுஉ

பிணங்கள்சுடுஞ் சுடுகாட்டுக் கேகிதனி
யாகவொரு பிணத்தின் பாற்சென்
றிணங்கிபரப் படங்கிடவே யுணர்ந்தறிவாய்496
பிணிவுறுப்பு மிசைந்த தோலுங்
கணங்கொணவை நிணமொழுகும் படிநாற
வேகுமதைக் கண்டே யெந்த
மணங்கொளுட றனைச்சுடினு மிவ்விதமா
மெனக்கருதி மதித்தி டாயோ. சுங

மங்கையர்க ளுடனிலையுந் தனதுடலின்
பெருநிலையு மதித்து நின்று
பங்கமற நானிறக்கப் படிந்துகுரு
வருணிலையிற் பதிந்த மிக்கோர்
கொங்கைமட மின்னார்கள் குவிமுலையின்
மயங்கிமனங் கொதியா ரென்று
சங்கையற நெஞ்சமதுக் குரைத்திடவே
பேசாதாற் சாற்ற லுற்றும். சுச

புலன்கலங்கி மனமயங்கி யறிவழிந்து
நிலைதளர்ந்து பொறியு மெத்த

495. கண்டதென—1907. 496. அறிவின்—1907

வலம்வந்து மெய்தளர்ந்து கண்ணிருண்டு
வாய்குழறி யாவி நின்ற
நிலைகலங்கி மரணமுறும் வேதனையைப்
பரமறியு நிலையே யல்லாற்
பலரறிய வொண்ணாத மரணவத்தை
வருமுன்னம் படியாய் நெஞ்சே. சுரு

குடம்பைதனி லிருந்துபறந் தகன்றபுட்போ
லிவ்வுயிருங் குருதி தோய்ந்த
உடம்பதனை யகன்றுவிடி லிந்தவுடற்
போம்வழியே துரைப்பேன் பேய்க
ணடம்பயிலுஞ் சுடலைதனி னரிநாய்கள்
விருந்துண்டு நடிக்க நாள்க
ளடைந்திடுமுன் குருவருளை யணுகென்ன
நெஞ்சமுரை யறையலுற்றும்497. சுசு

திண்ணமிகு மென்றேகந் தனைநரிதின்
பதுநிசமோ செப்பா யென்னப்
பெண்ணினொடு தந்தையன்னை சுற்றமுட
னுண்டவனும் பெற்ற சேயுங்
கண்ணினெதிர் சொந்தமென வாழ்வருயி
ரிழந்தவுடன் கழுகு நாயு
மெண்ணரிய புழுவுடன்மண் சொந்தமெனு
முடற்சொந்த மென்றாய் நெஞ்சே. சுஎ

ஆவியிறந் திடின்முன்னு ளணைந்திருந்த
வரிவையரு மகல நின்று

497. அறையுமன்றே—1907.

மேவிவிழி யாற்பார்க்கப் பயந்துபிண
மெனவொதுங்க மீறி நாய்கள்
தாவவெரி[498] நரிக்கிரையாய்த் தரணிதனிற்
பலர்சுடலை சாரக் கண்டுங்
கூவியழு தழுதுகுரு வடியணுகி
லாயெனவே நெஞ்சங் கூறும். ௬௮

இந்தவுட லிறந்திடுமுன் னேககுரு
பதம்பணியா திருப்பே னேனென்
றந்தமுட னுரைத்திடவே யறிவுரைக்கும்
பாலகனு யஞ்ஞா னத்திற்
பந்தமுற்றாய் காளையுமாய்ப் பரத்தையருக்
காளானாய் பகைத்த மூப்பு
வந்தவுட னுடற்றளர்வாய் நிலையறிவ
தென்றுநெஞ்சே வாதுற் றாயே ௬௯

எனவுரைக்க நெஞ்சமது காளையெனும்
பருவமது வேகி னலித்
தனமுதலே டணைவிளைக்குங் கவலையறும்
பிறகுகுரு தாட்கன் புற்றே
தினம்பணிந்து நிலைபெறுவே னெனவறிவு
செப்புமிடர் செறிந்தே துன்பக்
கனலடர வுடற்றளர்வ தன்றிபுவி
யாசைநிலை காண லாமோ. ௭௦

கவலையுற்றே யுடனடங்கிக் கனபிணிமே
லாமூப்புக் காலந் தன்னைக்

498. தாவுமெரி—1907.

குவலயத்திற் கவலையிலாக் காலமென
மூப்பதிலே குருவின் ஞானத்
தவமிசையிற் பெறுவனென வுரைத்தனைசித்
தங்குவியத் தருமோ வுன்ற
னவையிலுட லிடைசாயா திருக்குமோ
கண்குறிமே னடுமோ நெஞ்சே. ௭௧

இளமையெனும் பருவமதிற் சற்குருவைக்
கிட்டாம லிருந்து தேகந்
தளருமுது மூப்பதனிற் பெறுவனென
வுரைத்ததுமெய் தளர்ந்து நாளு
மிளமையற்ற தொண்ணூறு வயதுடையன்499
மங்கைமண மிசைந்து கூடி
வளம்பெறுவே னென்றதொக்கு நெஞ்சேநீ
யுரைத்ததென வழங்க லுற்றும்500. ௭௨

பாளைவிரி கமுகனைய கந்தரத்தாண்
மூலமயக்கம் பற்றி யுன்றன்
காளையெனும் பருவமது கழித்துவிடிற்
பின்னயர்வு கடியு501 மாசான்
ஞானநினைந் தானந்த பரவசமாய்
நாட்கழித்தாற் றளர்ந்து சாகும்
வேளையினு மானந்தக் களிகூரு
மிதிற்றுணியாய் விரைவி னெஞ்சே. ௭௩

உன்னுடைய காளையெனு மிப்பருவந்
தனிற்குருதா ளுகந்தி டாமற்

499. வயதுடையான்—1907-
500. வழங்குமன்றே—1907. 501. கதிக்கு—1907

கன்னியொடு பொன்புவிமேற் காதலுற்று
நெஞ்சகமே கலங்கி மெத்த
வின்னலனு பவித்தாயென் றிடநெஞ்ச
மியம்புமிந்தப் பருவ மேக
வின்னநெடு நாட்செல்லு மிதிற்பெறுவே
னெனவறிவு மியம்ப லுற்றாம்502. எ௪

சிலையிரும்பை யுடலாகக் கொண்டோரு
மித்துணிவாய்ச் செப்பார் நீயும்
பலவிதமாய் மொழியலுற்றா யிப்பருவங்
கழியவெகு பகலுண் டென்றா
யலமிகுத்த நெஞ்சகமே யாவியிந்தத்
தோற்கூட்டி லனந்த கால
மிலகுமென நினைத்தனையோ வென்றறிவு
வுடனிலையை யியம்ப லுற்றாம்503. எ௫

மங்குலிடு விற்புனலில் வருங்குமிழி
யெறிந்தசிலை மாறாத் தீயிற்
றங்குமென வைத்தசில வெண்ணெயொடு
மின்னலையுந் தரணி தன்னிற்
பங்கமிலா திருக்குமிது நித்தியமென்
றுரைத்தாலும் பருந்தோற் பீற்ற
லங்கமதி லுயிர்நிலையென் றாருரைப்பார்
நீயுரைத்தா யலைந்த நெஞ்சே. எ௬

காத்திரத்தி னேற்றிருந்தா ரின்றிறந்தா
ரெனுமுலகைக் கருதிப் பார்த்தோர்

502. இயம்புமன்றே—1907.
503. இயம்புமன்றே—1907.

மாத்திரைப்போ தும்வாழ்வ் தரிதெனவே
யுணர்ந்திதனுண் மௌன மூறுங்
கோத்திரத்தி னுச்சியிற்சென் றமுதருந்த
நாட்கழித்திற் குறித்தே துன்பப்
பாத்திரமா யலையலுற்றாய் நெஞ்சேயென்
றறிவுயினிப் பகர லுற்றாம். எஎ

தினைப்பொழுது வாழ்வதரி தென்றறிந்த
தெருளுடையோர் சிந்தை தன்னி
னினைத்தவுட னனந்த நிலையணுகிப்
பேதமற நிற்பர் நீயுங்
கனத்தபெருங் கரணாதிக் கனலவியக்
குருவருளைக் கருதி மோன
தனத்தினைத்தே டாதிருந்து நாட்கழித்தா
யெனநெஞ்சஞ் சாற்று மம்மா. எஅ

தேகமெனு முடலிறக்கு மென்றமொழி
நெஞ்சுணர்ந்து தேக நொந்து
சாகநெறி யிலதாயோ ருபாயமில்லை
யோவெனவே சாற்றக் கேட்டு
யூகமுற்ற நெஞ்சேயென் றறிவுரைக்கு
நீர்க்குமிழி யொழிந்தி டாமற்
பாகமுடன் பூண்விசிக்க நினைந்தவனை
யொக்குமெனப் பகர லுற்றாம்504. எகூ

அதுவிதுவென் றுணரறியாப் பொருளமைத்த
நாட்கழியி லண்டத் தோடு

504. பரூமாதோ—1907.

மதிகதிரோ டேபூத மழியுமெனிற்
பெண்யோனி வழியே சிந்து
முதிரமுருண் டிட்டவுண்டை யாந்தேக
மலபாண்ட மொழிந்தி டாமற்
பதியவிருந் திடயூக முண்டாமோ
நெஞ்சகமே பகர்ந்தி டாயே. அ0

மெய்யெனவே யுரைக்குமிந்தப் புழுக்கூட்டை
நம்பியிதின் மெலிந்தி டாமற்
பொய்யெனுமிவ் வுடலிறக்கு மென்பதனை
மறவாமற் பொருந்தி னூற்பின்
வையமெலா மழுந்தியதோ ராசையெனுங்
கடல்வற்றி வடியுந் துன்பஞ்
செய்யுமந்தக் கவலையெனுந் திரையோயும்
விரைவிலருள் தேடாய் நெஞ்சே. அக

எனவுரைத்த மொழிகேட்ட நெஞ்சியம்பு
மெண்ணிறந்த சமயந் தன்னிற்
றனிப்பொருளுக் கன்பான சமயமியம்
பிடிலதனிற் சார்வே னென்ன
மனமயக்காய்ப் பரஞ்சுடரை வெகுவிதமாய்
வெவ்வேறாய் மதித்து நின்று
தினம்பணிவர் நிலையறியார் பேர்வேறாய்ப்
பேசிநெஞ்சே தியங்கு வாரே. அஉ

கண்ணிரண்டு மில்லாதார் சிலர்கரியி
னுருவதனைக் கரத்தா னீவித்
திண்ணமைந்த யுரினையுருத் தாங்கள் கண்ட
படியுரைத்துத் தியங்கு வார்போற்

சண்முகபல் சமயமுடை யோர்பரனைச்
சாற்றிதினந் தவித்து நோகுந்
தண்மையல்லாற் பரமிருக்கா திடமுண்டோ
வெனக்கருதித் தணிந்தி டாரே. அங

வீதிதனில் விளையாடுஞ் சிறுபால
ரகமதனை விரும்பிச் செல்லும்
போதிலுயர் மாமதியைத் தங்கள் தங்க
ளுடன்வருகப் பொருந்து வார்போற்505
காதலுற்ற சமயமெலா மெனதுனதென்
றேபரத்தைக் கருதித் தர்க்க
வாதமுட னுழல்வதல்லா506 லெவ்விடமு
மிறையிருக்கும் வளங்கா ணாரே. அச

எவர்களெதை யிறைஞ்சிடினும் பரஞ்சுடரே
யதிலிருப்ப தெனினு மெத்தக்
கவலையுறுஞ் சமயமதாற் பரமசுக
மடைவதற்குக் காணொ ணாது
தவமிசைந்த பரமகுரு நிலையிருக்கச்
சமயமதிற் சார்வ தென்னிற்
சுவையினிய வமுதிருக்க மாழ்கிடவே
கள்ளுண்ட தொக்கு நெஞ்சே. அரு

இந்தவிதஞ் சமயநெறி யியம்பிடவே
நெஞ்சுரைக்கு மிறையைப் பூசை
யந்தமுடன் புரியநெறி யருளாயென்
றிடவறிவு மறையு மாசா

505. வரவேபுகலல்போல—1907.
506. வாதமிட வுழல்வதல்லால்—1907.

ஹுந்தனக்கே யருள்புரிந்தா லந்நிலை
　　யிற்பரத்துக் குன்கண் ணென்னுங்
கந்தமல ரிணைச்சாத்தி யுளம்பதியப்
　　பணிந்துமருள் காண லாமே. அசு

பூசைபுரி பவனுகி மலராகிப்
　　பலவாகிப் பூசை தன்னி
னேசமொடு மோதுகின்ற மந்திரமாத்
　　தெய்வமுமா நிட்க ளத்தைப்
பாசமுற்ற சமயநெறி கடந்தநிரா
　　மயகுருசொற் பதிந்தா னந்த
வாசையொடு பணிவதல்லால் வேறேயோர்
　　பூசைநெறி யறியே னெஞ்சே. அஎ

விண்ணினுக்கு விண்ணுகிப் பரவெளியாம்
　　பரஞ்சுடரை விரும்பிப் பூசை
பண்ணிநிற்கப் பரமகுரு நிலையலா
　　தில்லையெனப் பணிந்து கூறுங்
கண்ணின்மணி யெனுங்குருவி னடையாளங்
　　காட்டிலவர் கழலை யானுந்
திண்ணமிது பணிவனென நெஞ்சுரைக்க
　　வறிவுமினித் தேர்ந்து கூறும். அஅ

அத்துவிதப் பரமகுரு தனையறிவ
　　தரிதரிதே யவர்பா தத்திற்
பத்திபுரி சற்சனரை யடுத்தவரோ
　　டன்பாகப் பழகி னுற்பின்
முத்திபெறக் குருகாண்பா யெனவுரைக்க
　　வவர்குறியை மொழியா யென்னச்

சித்தமதி லறிந்தமட்டுஞ் சற்சனர்தம்
பெருங்குணத்தைச் செப்ப லுற்றும்507. அக

பொய்யுலகந் தனிலழுந்தி மயக்கமுறு
ராசைதனிற் பொருந்தா ருள்ள
மையமுறு ருலகிலுயிர் தன்னுயிர்போ
லருள்புரிவா ராண்மை சொல்லார்
வையமதி லிருவகைக்கும் வாடார்கள்
மகிழார்கள் வருந்தார் நாளும்
துய்யபொலன் கமலமல ரெனவொருசீர்ப்
பட்டுநிதந் துலங்கு வாரே. கo

அண்டமெலாம் பொடியாக்க வருள்பெற்று
மாணவமா யறையார் தங்கள்
பெண்டுபிள்ளை சுற்றமதைப் பேணுமற்
பிரிந்துமுடற் பிரிந்து நின்று
கண்டுமன மகிழ்ந்துகுரு வருணிலையை
நாடியதிற் கலந்து நிற்குந்
தொண்டர்புரி பெருந்தகைமை துடிதுடித்த
நெஞ்சேயான் சொல்லொண் ணுதே. கக

தேசிகனு ரங்கைகொடு போதித்த
பரமநிலை சேர்ந்தே மோன
வாசமல ரணைமீது வண்டெனவே
துயில்வோரில் வாழ்வுற் ருலும்
பாசமுறுர் வரும்பொருண்மேற் போனபொரு
ளுக்கிரங்கிப் பதையார் வந்து

507. செப்பு மன்றே—1907.

நேசமுறும் பொருள்வெறுக்கார் நின்மலவா
னந்தமது நிறைந்த மிக்கோர். ௧௨.

சுவையினிதோ டுண்டுடுத்திச் சுகந்தமணிந்
தரிவையர்க டோளிற் சேர்ந்து
குவிமுலையைத் தழுவியணைந் திடுபொழுது
மிறைசெயலைக் குறிப்பர் வல்லோ
ரவைநடுவே மந்திரத்தோ ரரவதனை
யாட்டமன மஞ்சா ரென்ன
நவைபுவியின் மயக்கறிந்து விலைமாத
ஞானப்பொருளை நண்ணு வாரே. ௧௩

தனதுடைய கொழுநரொடு கூடியணைந்
திடுபொழுதந் தனது கும்பக்
கனதனத்தை நீவியதோர் பிறபுருடன்
றனையணையக் கருது வாள்போற்
புனைமணிமே கலைமடவார் போகமதிற்
றேறேலைப் புல்லச் செய்த
தெனதுடைய பரஞ்சுடரென் றிசைந்துகுரு[508]
பதம்பெறுவோ ரிருப்பர் நெஞ்சே. ௧௪

பூசையெனும் வகைபுரியார் சாதிவரம்
படங்கார்கள் பொருந்தார் நேமந்
தேசமெனுங் காலமெனும்[509] பகையுறவென்
றறியாமற் றிரிவ ராசை
நாசமுற வகையறிவார் சாதிதனிற்
பேதங்க ளுடையார் நாளும்

508. இசைந்தகுரு—1907.
509. தேசமொடு காலமிகு—1907.

பாசமிலாப் பாலர்பித்தர் பேயரெனத்
திரிவார்கள் பாராய் நெஞ்சே. ௬௫

எந்தனுடைச் சொந்தமிதென் றிரங்கார்கள்
யானெனதென் றிசையா ரெண்ணார்
பந்தமற்று நின்மலமாய்த் துக்கசுக
மொருவழியாய்ப் பார்ப்பர் பொங்கி
வந்தொருவன் றகர்த்தாலு மிறைசெயலைக்
குறிப்பதல்லால் வாய்பே சார்கள்
சிந்தையற வேதாந்தச் சித்தாந்த
சமமோனந் தெரிந்த மிக்கோர். ௬௬

ஞாலமொடு புனல்கனல்கா னண்ணரிய
வெளிபூத மைந்து நண்பாய்ச்
சீலமுடை யோர்கயவ ரரசரெளி
யோர்வலியர் தீமை நன்மை
சாலதனித் தனிப்பிரித்துப் பேதகமாய்ச்
சாராமற் சமம தாம்போன்
மாலறவே யிறையாட்டுஞ் செயலெனவே
சமமேவி வாழ்வர் மிக்கோர். ௬௭

நாசினியோ ரெதுநிசமென் றுரைத்தாலு
மதுநிசமே கருது மென்று[510]
பேசியடங் குவதல்லால் வேறென்றுவ்
வாதுமொழி பேசார் போதும்
வாசனையுங் கலந்ததென வுயிர்தோறு
மிறைகலந்த வளமை பார்க்கு[511]

510. கருதி லென்று—1907. 511. பார்த்து—1907.

நேசர்குரு பரந்தனக்கும் பேதமிலா
தொன்றாக நிற்கு மன்றே512. ௬அ

இந்திரியச் சேட்டைகெட மனமடக்கிக
குருநாத னிசைந்த மோன
மந்திரத்தி னிலைநாடிச் சகம்பாவைக்
கூத்தெனவே மதிப்ப ரெனச்513
சிந்தையுற்ற நெஞ்சியம்பும் பாவைக்கூத்
தெனவுரைத்தீர்514 தெரிய விந்த
விந்தைதனை விவரமதாய் விளம்பீரென்515
றிட்டவறிவு விளம்ப லுற்றாம்516. ௬௬

ஆனந்தச் சின்மயமா யமர்ந்திருக்குங்
கூத்தில்வல்ல னகிலந் தன்னி
லூனுந்திப் புழுத்துடிக்கு முடற்பாவைக்
குகந்துவளிக் கயிறு பூட்டி
மோனந்த மெனுந்தீப மேற்றியகந்
தனினினைப்புத் திரையான் மூடி
வானந்த மாகியநம் மிறையுவந்தே
யாட்டிவைக்கும் வளமை நெஞ்சே. ௧00

வஞ்சமற வுரைத்தீர்517நம் மிறையிருந்தே
யாட்டுமிடம் வழங்கா யென்ற
நெஞ்சமதற் கறிவுரைக்குந் தாவரத்துஞ்
சங்கமத்து நிறைந்து பூத

512. நினைப்பரன்றே—1907. 513. மதிப்பரென்னச்—1907.
514. உரைத்தாய்—1907. 515. விளம்பாயென்—1907.
516. விளம்புமன்றே—1907. 517. உரைத்தாய்—1907.

மஞ்சினுக்கு மகம்புறமா யுயிர்க்குயிராய்ப்
பூரணமா யமர்ந்த தென்ன
மிஞ்சிகணக் கற்றசர மசரமன்றோ
வெனவறிவு விளம்ப லுற்றும்518, கoக

பெருவெளிக்கு ளண்டமெலாங் கலந்தனுபோ
லும்பேத மான மெய்யா
முருவெழுத்துக் குயிராகக் கலந்துதனித்
தகரமொன்ரே யுறையு மாபோன்
மருவியுயிர்க் குயிராகிக் கலந்துதனித்
தொன்ருக வயங்கு மென்னக்
குருவருளா லறிவுரைக்க நெஞ்சமது
வினவியசொற் கூற லுற்றும். கoஉ

உடலுறையு முயிர்கடொறும் பரஞ்சுடரே
யுறைந்திருப்ப துண்மை யாகிற்
றுடரறவே519 யொருவிதமாய் வாழாம
லலேந்தவகை சொல்லா யென்னக்
கடற்புவியி லாடுகின்ற பாவையெலா
மரசனெனக் காட்டி நிற்கிற்
றிடப்படுமோ வாகையினுற் பலவிதமா
யாட்டிவைக்குஞ் செய்கை நெஞ்சே. கoங

துக்கசுக மென்பவைக ளனுபவிக்க
வைத்தவிதஞ் சொல்லா யென்ன
மிக்கதெளிந் தறிவுரைக்குங் கற்பனைய
லாதுசுக துக்க மேது

518. விளம்புமன்றே—1907.
519. தொடரறவே—1907.

தக்கபுகழ் வேந்தனென வேடமுற்றோன்
பொய்ச்சுகமுந் தளர்ந்து மெத்தத்
துக்கமுறு வேடமுற்றோன் பொய்த்தளர்வு
மாஞ்சகத்தின் றொல்லை நெஞ்சே. ௧௦௪

கண்ணினுரு வாயதற்கு முள்ளொளியாய்க்
கலந்திருந்துங் கண்ணுற் காணு
மெண்ணரிய வுருவாகி யருவாகிப்
பலவாகி யேக மாகிப்
புண்ணியபா வங்களுமாய்ப் புரிபவனுய்ச்
சுகதுக்கப் பொலிவாய் நித்த
மண்ணிலதை யடைந்தவனு520 யிறையிருந்து
விளங்கியமெய் வளங்கா ணெஞ்சே. ௧௦௫

தினந்தினமிவ் வுயிரனைத்துஞ் செயுஞ்செயலெ
லாமிறையின் செயலென் றீரோர்521
நினைவுறவே நினைத்திடவுஞ் செயலிலையோ
வெனவறிவு நிகழ்த்துஞ் சோதித்
தனிப்பரமா மிறையாட்டுஞ் செயலன்றி
யுடனடக்கத் தகுமோ மெத்த
வினித்தமொழி தலைசநாவு522 மியம்பிடுமோ
வெனினினைப்ப தெதுவா நெஞ்சே. ௧௦௬

நினைப்பதுவு மறப்பதுவுஞ் சித்தமதை
மயக்குவது நேராய்ச் செய்து

---

520. அடைபவனு—1907.
521. செயலென்றுயோர்—1907.
522. தலைநாவு—1907.

தனித்திருக்கச் செய்வதுவுந் தொந்தமொடு
நிர்த்தொந்தத் தர்க்க மெல்லாஞ்
சினத்துடனே வளர்ப்பதுவுந் திரமுறவே
துடைப்பதுவுந் தேச தான
கனச்சுடரென் றுனிநினைக்க மறக்கசெய
லினியேது காணாய் நெஞ்சே. கo எ

மனமேநற் சின்மயத்தி லாசைவரு
வித்துகுரு வடிவாய் வந்து
கனவெளியிற் றங்கவொரு நிலைகாட்டி
யந்நிலையிற் கருதொண் ணாத
தனிச்சுடராய் வெளிகாட்டித் தனியுணர்ந்த
வானந்தத் தவனு மாகி
வனமுலைமா தொடுமயங்கு பவனுமிறை
யாய்ப்புவியில் வயங்கு மன்றே. கo அ

ஆட்டிவைக்கு மவனாகி யாடுவனா
யாட்டமதை யன்பாய் நின்று
காட்டுபவ னுயதனைக் காண்பவனுய்த்
துரியநிறை கடவு ளாகி
வாட்டமிலாக் களிப்பாகி நினைப்பாகிச்
சொந்தமென்ற வாஞ்சை யாகிக்
கூட்டமொடு கூடாதா யிறையிருக்க
நினைப்பேது கூறாய் நெஞ்சே. கo கூ

இந்தமொழி யுணர்ந்தோர்க ளுலகிலுயிர்க்
குயிராகி யுறைந்தே யோங்கும்

பந்தமற்ற பரஞ்சுடரின் செயலாகி
யெங்கெங்கும் பார்க்குந் தோறு
மெந்தவித மெவ்விடமும் பரஞ்சுடரி
னியல்பாக விருப்ப தாலே
சிந்தையற்றார் பேசவே ளொருவரிலா
தான்மோனஞ் சிறந்தார் நெஞ்சே. ௧௧0

உலகில்பரி பூரணமே தானாகி
யாட்டிவைத்தே யுருவா யாடி
யிலகிபுவி நிறைந்ததெனை நெஞ்சுரைக்கு
மென்செயலுக் கிசைந்த தெல்லாஞ்
சொலவரிய விறையியற்றுஞ் செயலென்றீ
ரென[523]வறிவு சுழுத்தி தன்னி
லலமிருத்த கரணமொடு பொறிபுலனே
டுன்செயலை யறிந்தி லாயோ. ௧௧௧

யானெனதென் செயலெனவே மயக்கமுற்ற
தாலண்ட புவன மெல்லாந்
தானேயாய்ச் சரமசரந் தானாஞ்சிற்
செயன்மறந்து சலித்தா யீங்கு[524]
நானேயென் றிடுமொழிக்கே யுரித்தாரா
குவராய்ந்து நவிலு கென்ன
வானேடைம் பூதமுமாஞ் சகமியானன்
றெனநெஞ்சம் வழங்க லுற்றாம்.[525] ௧௧௨

523. செயலென்றாயென—1907-
524 இங்கு—1907.
525. வழங்குமன்றே—1907

மாசறுவெள் ளென்புதசை தோல்குருதி
நிணம்பொதிந்த மலசலாதி
நேசமுறு முடற்பாவை நானல்ல
வாசிகயி றல்ல நேயே
யாசைதரு மனம்புந்தி யகங்காரா
ணவதிரைநா னல்ல மேலாந்
தேசுபெருஞ் சின்மோனச் செழுஞ்சுடரே
யானென்று சிறந்த தம்மா. கக௩

வீரியமாய்ப் பகையுறவு விளைப்பதுவு
முண்டுடுத்து வேட்கை யாக
நாரியரை நயப்பதுவு நற்றவங்கள்
புரிவதுவு நாம ரூபப்
பேருலகா யுடலுயிராய்ப் பேதமெனக்
காண்பதெல்லாம் பிரமா னந்த
வாரியெனு மிறைசெயலென் றுணர்வதுவு
மதுவாக வயங்கிற் றம்மா. கக௪

எ. சின்மய தீபிகை-ஸ்ரீ சுவாமிகள் பதிப்பு முற்றிற்று.

---

# அநுபந்தம்

## 1. அகர உயிரின் இலக்கண நியாய விசார விஞக்கள்[526]

**ஸ்ரீ சுவாமிகளுக்கு ஆட்பட்ட சமரச வேத சன்மார்க்க சங்கத்து அறிஞர்களில் ஒருவராகிய ஸ்ரீ ஆனந்தநாத சண்முக சரணலய சுவாமிகள் எழுதியவற்றுள்[527] கண்டது:—**

....புலவர்கள் (பலர்) அகங்காரத்தால் தம்மை மதியாது இயலறியாது எழுதியவாறே, புலமையிற் பெரியோ மென்னுஞ் செருக்கின்றி....அறிவறிந் தடங்கியாரிற் சிலர் எழுதியவற்றிற் சில சில விடங்களில் வழுவினர். இவ்வழுக்கள் செருக்கால் வழுவியதன்று. விசாரத்தாலுஞ் சிவாநுபவ மேலீட்டாலும் வழுவியது. இவற்றைத் தேவாரந் திருவாசக முதலிய உண்மை முறைகளிற் காண்கின்றேம். இக்காலத்து எமது ஆசிரியரை வணங்கி "ஐயரே! தேவரீர் எழுதிய சில வாசகத்தினுஞ் செய்யுளினுங் கருத்துக்கு விளங்கப் புலப்படாமை மயக்குகின்ற சொற்றொடர்கள் சில வுள வென்று எமது மாட்டாமையாற் றோன்றுகின்றது: இதற்கு யாது செய்வேம்?" என்று விண்ணப்பஞ் செய்ய, அவர் "ஐய! நீர் அஞ்சற்க. யாம் எழுதிய வாசகத்தினுஞ் செய்யுளினுஞ் அளவிறந்த குற்றங்களிருக்கின்றன: என் செய்வேம்! விசார வசத்தால் ஆங்காங்குந் தவறினேம். அதனைப் பெருங்

526. பாயிரம் 5-வது அடிக்குறிப்பு பார்க்க.
527. நாயனர் என்னும் சொல் வழக்கின் மீறுதலே.

கருணையுள்ள எமது கடவுள் மன்னிப்பர். மற்றை யீரு மன்னித்தல் வேண்டும். யாம் யார்? எமக்கு யாது தெரியும்? புழுவினுங் கடைய புலையரிற் சிறியேம். இதனால் நாணுதலுடையேம்" என்றனர். ஐயர் புகன்ற மாற்றம் எவ்வாறென் றெண்ணி நிற்குந் தருணத்து எம்மை ஆண் டிருக்கப் பணித்து மீட்டுஞ் சொல்லுவர் :—

"அகரவுயிர் என்பது யாது? அகரவுயிர்க்கு

1 வரி வரலாற்றின் இலக்கணம் என்னை?
2 ஒலி வரலாற்றின் இலக்கணம் என்னை?
3 தன்மை வரலாற்றின் இலக்கணம் என்னை?
4 உணர்ச்சி வரலாற்றின் இலக்கணம் என்னை?

அதன்

5 உண்மை யநுபவ விலக்கணம் என்னை?

அகர வுயிர்க்கு

6 வரி யுரு விலக்கணம் என்னை?
7 ஒலி யுரு விலக்கணம் என்னை?
8 தன்மை யுருவி னிலக்கணம் என்னை?
9 உணர்ச்சி யுருவி னிலக்கணம் என்னை?
10 உண்மையனுபவ வுருவி னிலக்கணம் என்னை?

அகர வுயிரின்

11 வரிச் சொருப விலக்கணம் என்னை?
12 ஒலிச் சொருப விலக்கணம் என்னை?

13 தன்மைச் சொருப விலக்கணம் என்னை ?
14 உணர்ச்சிச் சொருப விலக்கணம் என்னை ?
15 உண்மை யநுபவச் சொருப விலக்கணம் என்னை ?

அகர வுயிர்க்கு

16 வரிச் சுபாவ விலக்கணம் என்னை ?
17 ஒலிச் சுபாவ விலக்கணம் என்னை ?
18 தன்மைச் சுபாவ விலக்கணம் என்னை ?
19 உணர்ச்சிச் சுபாவ விலக்கணம் என்னை ?
20 உண்மை யநுபவச் சுபாவ விலக்கணம் என்னை ?

அகர வுயிரின்

21 வரிச் செயற்கை யிலக்கண மென்னை ?
22 ஒலிச் செயற்கை யிலக்கண மென்னை ?
23 தன்மைச் செயற்கை யிலக்கண மென்னை ?
24 உணர்ச்சிச் செயற்கை யிலக்கண மென்னை ?
25 உண்மைச் செயற்கை யிலக்கண மென்னை ?

அகர வுயிரின்

26 வரி யதிகார விலக்கணம் என்னை ?
27 ஒலி யதிகார விலக்கணம் என்னை ?
28 தன்மை யதிகார விலக்கணம் என்னை ?
29 உணர்ச்சி யதிகார விலக்கணம் என்னை ?
30 உண்மை யதிகார விலக்கணம் என்னை ?

அகர வுயிரின்

31 வரிப் பொது விலக்கணம் என்னை ?
32 ஒலிப் பொது விலக்கணம் என்னை ?
33 தன்மைப் பொது விலக்கணம் என்னை ?
34 உணர்ச்சிப் பொது விலக்கண மென்னை ?
35 உண்மைப் பொது விலக்கண மென்னை ?

அகர வுயிரின்

36 வரிச் சிறப் பிலக்கணம் என்னை ?
37 ஒலிச் சிறப் பிலக்கணம் என்னை ?
38 தன்மைச் சிறப் பிலக்கணம் என்னை ?
39 உணர்ச்சிச் சிறப் பிலக்கணம் என்னை ?
40 உண்மைச் சிறப் பிலக்கணம் என்னை ?

அகர வுயிரின்

41 வரிக் குண விலக்கண மென்னை ?
42 ஒலிக் குண விலக்கண மென்னை ?
43 தன்மைக் குண விலக்கண மென்னை ?
44 உணர்ச்சிக் குண விலக்கண மென்னை ?
45 உண்மைக் குண விலக்கண மென்னை ?

என்பன முதலாக இவ்வகர வுயிர் ஒன்றற்கே யின்னும் பற்பல இலக்கண நியாய விசார வினாக்கள் உளவாயின், எம்போல்வா ருணர்ச்சிக்கண் அவ் வினாக்களுக்கு விடை யெங்ஙனந் தோற்றும்? ஓரெழுத்திற்கே யிங்ஙனமானால் பற்பல வெழுத்

துக்களுக்கும் அவ்வெழுத்துக்களா லாகிய சொற்களுக்குஞ் சொற்பொருள்களுக்கும் விடை கொடுப்பது எங்ஙனம்? ஆகலிற் கற்றோ மென்னுஞ் செருக்கை முழுதும் விடுத்து விசார வசத்தராகிச் சிவபெருமான், திருவருளைச் சிந்தித்திருத்தல் வேண்டும்'' என்று எம்மை யோர் பொருளாகக் கருதி இரக்கத்தால் இசைத்தனர். ஆகலின் கல்வியிற் செருக்கடைதல் எவ்வாற்றானும் பொருந்தாது....

**1. அகர உயிரின் இலக்கண நியாய விசார வினாக்கள் முடிந்தன.**

---

# 2. இலக்கணப் பத்திரிகை[528]

உணர்ந்தோரானியல் வகையவின்ன வென்றவற்றிற் பின்மொழி மதிக்கு முன்மொழி மறைக்கு முதலீறு விளங்க முடிப்பதாய பின்மொழி யடைசார் முன்மொழி ஞாங்கர் விளங்கிய ஞானிகட்கு-பொய்பற் கெதிர்சார்புற்ற மூலியொன்று வளைத்து வணக்கஞ் செய்த ககந நீரெழிலென்றும் வான் வழங்கு பண்ணிகாரமென்றும் நாகச்சுட்டுமீனென்றும் வேறு குறிப்பதொன்று

---

528. இப்பத்திரிகை திருமுகப்பகுதியில் உள்ளவாறு இங்கு அச்சிட்டிருக்கிறது. இதன்பின்வரும் குறிப்பும் அப்பகுதியில் கண்டதே. பாயிரம் 6-வது அடிக்குறிப்பு பார்க்க.

இந்த இலக்கணத் திருமுக வரலாறு அடியில் கண்டபடி ஓர் பிரதியில் காணப்படுகிறது :—

"மதுரை திருஞானசம்பந்த சுவாமிகள் மடத்தில் திருவருட்பிரகாச வள்ளலார் ஜக சகாப்தம் உ-ல் நிகழா நின்ற விபவ ஸ்ரீ ஆவணிமீ (15-8-1868 to 14-9-1868)-த்தில் திருக்கழுக்குன்றம் திருச்சிற்றம்பல ஞானிகள் போயிருந்த தருணத்தில்-கடந்த அக்ஷய ஸ்ரீ த்தில் கருங்குழி புருஷோத்தம ரெட்டியார் தன் வீட்டிலிருந்து கோபத்தால் மதுரைக்குப் போயிருந்த தருணத்தில் ஷை யாரை யுபசரித்து இவ்விடம் அனுப்பவேண்டு (ெ)மன்று ஷை மடத்து சுவாமிகளுக்கு சி. இராமலிங்கம் பிள்ளை யவர்களால் அனுப்பப்பட்ட கடிதத்தால்-ஒரு தருணம் நாவலர் மனுஷியர்களி லங்கிருந்த சிலர் திருவருட்பிரகாச வள்ளலார் விசேஷ வித்வானென்று சொல்கிறார்களே யவருடைய படிப்பு இலக்கணமில்லாப் படிப்பு-என்று

அண்மைச் சுட்டடுத்த வேழாவதன் பொருண்மை யும்மையடுத்த பல்லோர்வினைப் பெயர்ப் பொருள் குறிஞ்சியிறைச்சிப் பொருளொன்றனோடு புணர்ப சேய்மைச் சுட்டடுத்த வத்திறத்தியல் யாது

இரண்டனுருபொடு புணர்ந்த தன்மைப்பன்மை யாருவதன் பொருட்டாக்கினார்க் குய்த்த கற்பிய லதிகரிப்பின் வருந் தலைமகட் பெயர விரண்டினோ டிரண்டிரண்டேகக் கழிவிலைப் பெயரவு மகார

---

சொல்லக்கேட்ட திருச்சிற்றம்பல ஞானியார் புகன்றது - அவர்களால் விவகரிக்கும் விவகாரத்திற் சிதறிய இலக்கணத் தின் மொழிகளில் கோடியிலொரு கூறிவ்வுலகி(லிருக்கி)ன்ற தென்று வாதிக்க-அம்மடத்து சுவாமிக ளெப்படியாகி லந்த சுவாமிகளா லிலக்கண விதிப்படி யொரு கடித மனுப்பும் (படி)கேட்டு வருவிக்க வேணுமென்று கேட்டுக்கொண்ட படி-ஷை ஞானி யிவைகளைக் குறியாமல் சன்னிதானத்துக் கொரு கடித மனுப்பினார்-ஷை கடிதத்தினால் இவ்விடத்திய சுகுணங்களையும் அற்புதங்களையும் இலக்கணவகையாற் றனக் குத் தெரிவிக்க வேண்டுமென்று பிரார்த்தித்ததால்-அதன் பொருட்டெழுதி விடுத்த குசலபத்திரிகை பின் புறங்காண்க.

இலக்கண பத்திரிகை

ச. ஆறுமுக முதலியார் வேலாயுத முதலியா ரிவர்கள் குடி யிருந்த முகப்பிலிருந்து அய்யா அவர்களாற் சில வரியும் மற்றவை ஆக்ஞையின்பேரில் வேலாயுத முதலியாராலும் எழுதியது—''

இக்குறிப்பில்கண்ட ''ஏவலர் மனுஷியர்களி லங்கிருந்த சிலர்'' என்பவர்கள் கணக்கிலவதானி தேவி பட்டினம் முத்துசாமி

வீற்று முதனிலைத் தனிவினைச் செயவென் வாய்
பாட்டு வினையெச்சத்தனவாகக் கலம்பகச் செய்யு
ளுறுப்பாற் சிறத்தும்

இருவகை முதற்பொரு ளொன்றன் பாகுபாட்
டுறுப்பிற் குறித்த வைம்பெரும் பூதத்தோர் விசே
டணத் தெதிர்மறை நடுக்குறை யியற்சொற் பெயர
வுயிர்ப் பெயராக வெதிர்காலங் குறித்து நின்றது
சில வினைச் சார்பான் விலங்கு சூடிய வரைவில்
வெளியாம்

---

பிள்ளையைத் தலைமையாகக் கொண்ட சிலர் என்றும், இந்த இலக்கணத் திருமுகத்தைத் திருச்சிற்றம்பல ஞானியார் பெற்றபின் மடத்துச் சுவாமிகள் அதைக் கணக்கிலவதானியார்க்குக் காண்பிக்க அவர்க்கு அதன் பொருள் விளங்காமையால் தாம் எழுதும் ஒரு கவிக்குச் சுவாமிகளிடமிருந்து உரை தருவிக்கவேண்டுமென்று வாதித்து இப்பகுதியின் அநுபந்தத்தில் கண்ட "தகர வரி" என்னும் தொடக்கத்தையுடைய வெண்பாவை அமைத்துக் கொடுத்தார் என்றும், அதை ஞானியார் அனுப்பி வேண்டிக் கொண்டபடி சுவாமிகள் அதற்கு அவதானியார் கருதிய உரையையும் அவர் கருதப்பெறாத தத்துவ சம்பந்தமான அரிய உரை ஒன்றையும் வரைந்து விடுத்தனர் என்றும், இவற்றைக் காணப்பெற்ற அவதானியார் அந்த நாள் முதல் அவர் ஆயுள் கால் முழுவதும் சுவாமிகள் திருவடிகளுக்கு ஆட்பட்டு வழிபாடுசெய்து வந்தனர் என்றும் ஸ்ரீ ச. மு கந்தசாமி பிள்ளை அவர்களின் சுவாமிகளைப் பற்றிய சரித்திரக் குறிப்புகளினாலும் வேறு பிரதி ஒன்றில் உள்ள குறிப்பினாலும் தகுந்த கேள்வியாலும் தெரிகிறது.

இத்திருமுகம் இலக்கண நுட்பங்கள் அமைந்து பலப்பல சொற்களுக்கும் பொருள்களுக்கும் உள்ள அரிய கருத்தை அறிவிப்பதால், தமிழ் இலக்கண வித்துவான்கள் பயன்படுத்திக்

இதனோ டிருவகைப்பட்ட வோர்சார் புது
நிலஞ்செல வுய்த்தனம் வேண்டுழி வேண்டியாங்
குய்க்க மற்றைய பின்னர் வரைதும்
இற்றே விசும்பிற் கணைச்சலம்.

இங்ஙனம்

நங்கோச்சோழன் வீரமணி

சூடியார் திருவாணைப்படிக்கு

—

கொள்ளுவார்கள் என்று கருதி இப்பதிப்பின் ௩-வது புத்தகமாகிய உரைப் பகுதியில் முன்னரே இது ச. மு. க. பதிப்பில் கண்டபடி சேர்த்திருக்கிறது.

## 3. தெளிசொற் பொருள் விளக்கம்

### "பிரளயாகலர்-மும்மலங்களுள் ஒருமல நீத்தோர், அவர் பிரமன் முதலானோர்" என்னும் தெளிசொற் பொருள் விளக்கம்[529]

பிரளயாகலர் இருமலமுடைய உருத்திரர்கள் என்றும், சகலராவார் மும்மலமுடையராகிய பிரம விட்டுணு முதற் கிருமி ஈறகவுள்ள உயிர்கள் என்றும் ஒரு சாரார் கூறலும், அதை ஆராயும் முகத்தான் மேற்கண்ட தெளி சொற்பொருளின் நுண்கருத்தை ஸ்ரீ சுவாமி களின் முதன் மாணுக்கராகிய தொழுவூர் ஸ்ரீ வேலாயுத முதலியார் அவர்கள் விளக்கிக் காட்டிய வாசகம் வருமாறு :—

பிரளயாகலர் இருமலமுடையார் ஆவார் எனில், இருமலம் உடைமையும் பிரளயாகலர் அவற்றை உடையராவாருமாயின், இருமலத்தையும் புசித்தற்கு உடைமையாகத் தேடியபின் உடையராவாரெனக் கூறியவாறு யிற்று. எனவே இருமலத்தைத் தேடுவாரெவரோ அவர் தாம் பிரளயாகலர் எனப்பட்டவர் என்று ஆம். என்னை? ஆவாரென ஆக்கவினை எதிர்காலம்பற்றி நிற்றலானும், உடையார் என்பது முக்காலத்திற்கும் பொதுவாகிய குறிப்புவினை முற்று ஆதலானும், அது வினையாலணையும் பெயராகி அப்பெயர் மற்றொரு பெயரோடு ஒட்டுமாறு விளக்கும் பண்பு வாசகமாய் இறந்தகாலப் பெயரெச்சம் அடுத்து நிற்றலானும் என்க. அங்ஙனமாதலின், எம்மலத்தையும் ஒழிக்க முயல்வதே சிறப்பு எனவும், அங்ஙனம் ஒழித்தாரே புவனேசராகிய உருத்திர

---

529. குதர்க்காரணிய நாச மஹாபாசு. 39-ம் அடிக்குறிப்பு பார்க்க.

ராதியர் எனவும், வேதாகமங்கள் கூறி முறையிடவும், அதனை நோக்காது ஒழிக்கத்தக்க இருமலத்தையும் புசித்த தற்கு உடைமையாகத் தேடுவார் உருத்திரர் என்று பொருள்படப் பிரளயாகலராவார் இருமலமுடையராகிய உருத்திரர்களென்று கூறுவது மாறுகொளக்கூறல் முதலிய குற்றங்களுக்கு இடனாய் ஆற்றல் முதலிய கெட்டு நின்றது. இனி ...அவ்வாசகத்தை நினைப்பினும் பெரும் பாதகங்களுள்ளும் பெரும்பாதகம் விளையும் என்க.

இங்ஙனமாகலி னன்றே மலம் துன்பஞ் செய்வன என்றும், அவை ஒழித்தற்பாலனவும் பிறவும் என்றும் யாவர்க்கும் பொருள் கிடைக்கப் பிள்ளையவர்கள் அம் மல மூன்றனுள் ஒன்று ஒழித்தார் என்றனர். ஆகவே, இனி இரண்டொழிப்பார் என்பது கூறாதமையும். ஆக லின் பிள்ளையவர்கள் கூறியதாகிய " மும்மலங்களுள் ஒரு மல நீத்தோர் பிரளயாகலர் - அவர் பிரமன் முத லானோர் " என்றதுவே "சுருங்கச்சொல்லல் விளங்க வைத்தல் நவின்றோர்க் கினிமை நன்மொழிபுணர்த்தல் ஓசையுடைமை யாழமுடைத்தாதல் முறையின்வைப்பே உலகமலையாமை விழுமியது பயத்தல் விளங்குதாரணத்த தாகுதல் "530 என்னும் பத்தழகினுக்கும் உதாரணமாய் நின்றதோர் வாசகமென்க...

ஆயின், பிள்ளையவர்கள் பிரமன் முதலாயினோரைப் பிரளயாகலர் எனக் கூறினர். அக்கருத்து என்னை யெனில்: பிரளயாகலர் மூவகையாருள் ஒருவர் மல கன்ம பரிபாகராய் அவ்வண்ணமே இறை திருவரு ளான் முத்தி அடைவர் எனவும்; [மற்றொரு வகை

530. நன்னூல், பொதுப்பாயிரம், கங.

யார் (?) ] அபக்குவ மலகன்ம சகிதராய் புரியட்டகம் பெற்றனராயினும், அவருட் சிறந்தார் மந்திரேசுரராய் புவனாதிபதித்துவம் அடைந்து, ககனேசாதி அஷ்ட மண்டலிகளாய்க் கலாதத்துவத்தினும் குரோதேசாதி எண்மராய்க் குணதத்துவ மஸ்தகத்திலும் வீரேச ஸ்ரீ கண்டேசராய்க் குணதத்துவத்தின் கீழும் பிரமாண்டத்தின்மேலும் சதருத்திரராய்ப் பிரமாண்டாதாரர்களுமாய் வசிப்பர்—இவர் அதிகாரபோகார்த்தம் தூலமடைந்து சகலர் போல்வர் எனவும்; மற்றொரு வகையார் புரியட்டக முடையராய்க் கன்மானுகுணயோனிகளை அடைவர் எனவும்; முற்கூறிய சதருத்திரர் பிரமன் முதலானோர் எனவும் கபாலீசன் முதலானோர் எனவும்—மூலாகம பேதங்கள் கூறுதலின், அவ்விரிவகை யாமாறு விளங்கப் பிள்ளையவர்கள் சுருங்கக் கூறுதல் என்னும் அழகாதி பெறக் கூறியவாறென்க.

இக்கருத்தினை போஜதேவர் அருளிச்செய்த **தத்துவப் பிரகாசிகை**, அகோரசிவாசாரியர் அருளிச்செய்த **அதன் உரை**, காமிகபேதமான **மிருகேந்திரம்**, **சித்தாந்த சேகரம்**, **திருமந்திரமாலை** முதலியவற்றுள்ளுங் காண்க. இனி விஞ்ஞானகலர் சகலர் இலக்கணமும் பிறவும் இடம் பெற்றுழி விரிப்பாம்.

இனிச் **சித்தாந்த சேகரத்தில்** அஷ்டாதச சதவுருத்திரர் திருநாமங் கூறுமிடத்து,

''கபாலீசோஹ்யஜோ புத்தோ வஜ்ரதேஹப்ரமர்தந:
விபூதிரவ்யயச்சாஸ்தா'' || 531

---

531. கபாலீஶோஹ்யஜோபுத்தோ
வஜ்ரதேஹ: ப்ரமர்தந: ।
விபூதிரவ்யயஶ்ஶாஸ்தா ॥

என்று தொடங்கி,

"அதபூபூதகாலாக்நி ருத்ரோஹாடக ஏவச
கூர்மாண்டஜச்ச ஸைத்யச்ச ப்ரஹ்மவிஷ்ணுச்ச ருத்ரக: ||"532

என்று முடித்தவற்றுள் பிரமன் விஷ்ணு என்பவர்கள் உருத்திர பேதமேயாய் அடங்குவர் என்பதும் பிரளயாகலரே என்பதுங் காண்க.

ஆயின் பிள்ளையவர்களுக்குப் பிரளயாகலர் என்பவர் உருத்திரரே என்பது கருத்தாய் அவர் பெயர் விளங்கக்கூறுவது வேண்டினாராயின், கபாலீசன் முதலானோர் எனக்கூறாது பிரமன் முதலானோர் என மயங்கக் கூறுவானேன் எனில்; அற்றன்று: பிருதிவி தத்துவத்திலுள்ள புவனபேத நூற்றெட்டினுள் அண்டத்துட் புறத்துள்ள புவனம் ஆறனுக்குந் தலைவராவாருள் பாதலத்தில் காலாக்கினி யுருத்திரர் கூர்மாண்டர் ஆடகேசருமாகிய மூவர் போக, பூமிக்குமேல் ஆகாயத்திலுள்ள மூன்று புவனத் தலைவராகிய பிரமா விஷ்ணு ருத்திரருள் முதலாதல் நோக்கி பிரமன் முதலானோர் எனக் கூறினர் என்க. இங்ஙனம் மூலாகம வுபாகம பத்ததி முதலியவற்றுள்ளும் உருத்திரர் பேதங்களைக் கூறுமிடத்து ஒவ்வோர் காரணம்பற்றிப் பிரசித்திப் பொருளை அந்தமாகவும் ஆதியாகவும் கூறுதல் வழக்காதல் நோக்கி பிரமன் முதலானோர் எனக் கூறியுள்ளனவுங் காண்க. இவற்றை விரிப்பிற் பெருகும்.

---

532. [illegible]

இங்ஙனம் பிரளயாகலர் புரியட்டக சரீரிகளாய் அவரு ளொருசாரர் கன்மானுகுண யோனிகளுறுவரென ஆகமங் கூறிற்றேல், புரியட்டகம் மாயாகாரிய தத்துவக் கூட் டத்தானியன்ற தனுவாதலாலும், சகலர் போலத் தூல தேகமும் பெறுதலாலும், அவரை மாயா பாசம் தொலைத் தவரென எங்ஙனங் கூறுவது?...இனி, இக்கருத்தை உண ராது, பிரமன் விட்டுணுமுதல் கிருமி ஈறாகவுள்ள உயிர் கள் மும்மலமுடையார் என்று கூறினாரே எனின், (அது) ...ஆகமவிதிகளைப் பெற்று அநுபவத்தாற் றெரிந்து கூறி யவாறு அன்று. ஆதலின் அது பிள்ளையவர்கள் உரையை மறுத்தல் ஆற்றாதென்க.

இனி மறுத்தல் ஆற்றாதென்ற அம்முறையைச் சொல் வகையானும் பொருள்வகையானும் விரிக்கின்றாம். என்னை? (அவர்) "சகலர் மும்மலமுடையராகிய பிரமன் விட்டுணு முதல் கிருமி யீறாகவுள்ள உயிர்கள்" எனக் கூறி யதால். மற்றைய விஞ்ஞானகலர் பிரளயாகலர் உயிர்த் தொகையில் உள்ளாரன்று, முத்தர் என்றவாறாயிற்று. அங்ஙனம் முத்தராகவே அவர்க்கு ஒரு மலமும் உள்ளது என்பதுபொருந்தாது. இங்ஙனம் உயிர் முத்தர் என்பதன் பொருளும் ஓர்ந்துணர்க. ஆகவே, அது "மூவகை யாரு யிர்வர்க்கம்" என்றதனோடு முரணுகின்றது.

அல்லதூஉம், ஒரு சாதிவகைப் பல பண்புப் பெயர்ப் பொருளவற்றின் ஆதியந்தம் கூறவந்தவிடத்து, ஆதிக்கு அச்சாதி இருமைப் பண்புப்பெயர்ப் பொருளையும் அந்தத் திற்கு அச்சாதிப் பண்புப்பெயரின் ஒரு பொருளையும் கூறலமையாது.

அங்ஙனமன்று; பல பண்பு என்றமையான், தொழில் வேற்றுமையால் சிறப்பியற்பண்பு பொதுவியற்பண்பு இழி

வியற்பண்பு எனப்பொதுவகையினும் பண்பு மூவகைப் படுமாதலின், அம்மூவகையுங் குறித்தற்கு ஆதியந்தங் குறித்து வேறுபிரித்துப் பொதுவியற்பண்பி சிறப்பியற் பண்பியைச்சேர்த்து முதலென அடக்கி இழிவியற்பண் பியை ஈற்றினடக்கி அங்ஙனங் கூறியவாறெனில், அற் றன்று. அக்கூற்று சாதி நுகர்ச்சி ஒற்றுமையின் கண்ண தன்றிப் பண்பின்பாலதன்று. ஆகலான் நுகர்ச்சி ஒற் றுமையுடைய சாதியை விரிக்க வந்தவிடத்துப் பண்பு வகைப்பாடு பற்றிக் கூறவேண்டுவதின்று. விளங்குதற் கெனின், சிறப்பியற்பண்பியையும் இழிவியற் பண்பியை யும் முதலுங் கடையுமாகக் குறித்தாற்போதும். அதுவே மரபுமாம். ஆகவே 'விட்டுணு முதல் கிருமி ஈறுக' வெனில் பொதுவியற் பண்பியாகிய பிரமனைக் கூற வேண்டா. இடையிற்றானே போதரும். அங்ஙனமன் றிப் பண்பையுடைய பெயரைப் பிரித்துரைத்து முத லென ஓர் எண்ணுப் பண்பியாக அடக்குதல் பண்புப் பொதுமை கூறுமுகத்து வழு: எண்ணுப் பண்பின் ஓரியற் பொதுப்பண்பி சேர்வதல்லது ஓரியல் வேற்று மைப் பண்பிகள் தம்முட்சேராவாமாகலின். அற்றேல், பிரம விட்டுணுக்கள் ஓரியற் பொதுப்பண்பி யாகாரோ வெனில், ஆகார்; நாமரூபக்கிரியை முழுவதும் வேற்று மைப்படுதலான் என்க.

அற்றேல், பிள்ளையவர்கள் "பிரமன் முதலானோர்" எனக் கூறுதலின், அவன்மேற் சிறந்த விட்டுணுவும் உயி ரெனக்கூறி மறுத்தற்குப் போலும் அங்ஙனங் கூறிய தெனில், ஆண்டும் "விட்டுணு முதல் கிருமி ஈறுகிய" எனக்கூறி னமையும்; "பிரமன் விட்டுணுமுதல்" என்ப தும் வழுவேயாம் என்க. ஆகலின் சொல்வகையாலும்

சொற்புணர்த்த வகையாலும், ஒருசார் பொருள் வகையா லும், அவ்வாசகம் வழுவேயாம் என்க. இதனை இன்னும் விரிக்கிற்பெருகும்.

இனி, பொருள் முழு வகையினால் ஆராயினும் பொருந்தாது. என்னை? அவ்வொழிவிலொடுக்கத்து "வேதாகமப் பவுரி வீசும்" என்ற குருதோத்திர முதற் றிருவெண்பா533 "கருணைபொழிவான் எடுத்தகை" என்ற விடத்து, பிள்ளையார் உபதேசமுறை முதலியவைகளைத் தெரித்தற்கு எடுத்துக்காட்ட, ஆண்டு எழுந்தருளியிருந்த(?) "தோடுடைய செவியன்" என்னுந் திருக்கடைக் காப் பின் திருவுளக்கிடையை விரித்து "பிரள்யாகலர்க்கு அநுக்கிரகித்தலும் இது"534 [என்றதனாலும் (?)]; அங் ஙனம் மெய்ப்பொருள் வந்த கோலம் குருவடிவு என்பது

தோடு கூற்றுப் பித்தா முன்னும்
பீடுடைத் தேசிகன் பேரரு ளாகும்535

என்றதனால் பெறப்படுதலானும்; ஆண்டு எழுந்தருளிய குருவடிவத்தைப் பிரமன் விண்டு முதலாயினோர் ஆண்டும் கைலை முதலிய பிறண்டும் தரிசித்ததாக அப்புராணமும் பிற புராணமும் கூறுதலினாலும்; அவர் நீங்கிய கீடாதியா

---

533. பொதுவிலுபதேசம்:
வேதா கமப்பவுரி வீசுங் கலாசங்கலை
யாதார வெற்பி லபிடேகம்—போதத்
திருளிலெழு பாது வெனத்தொழில் லின்பக்
கருணைபொழி வானெடுத்த கை.

534. சிதம்பர சுவாமிகள் உரை.

535. அகஸ்தியர் தேவாரத் திரட்டு, திருப்பதிகக் கருத்துரை.

யுள்ள மற்றைச் சகலர்கள் அங்ஙனம் எளிதில் தரிசித்தமை கூறப் பெருமையானும்; பிரம விஷ்ணுக்கள் சகலர் என்பதற்கு நியாயமென்னை?

இங்ஙனம் சொல்வகை யறியாதாரோ நூல்வகை யறிவார்! அல்லதூஉம், அங்ஙனம் "சகலர் மும்மலமுடையராகிய பிரமன் விட்டுணுமுதல் கிருமி ஈறுகவுள்ள உயிர்கள்" என்று ஒழிந்தாரேல், ஔவையார்,

மாலய னங்கி இரவி மதியுமைமே
டேனுஞ் சிவசத்தி யாலு536

எனவும், ஆளுடையவாசகள்,

காண்டகு சோதியார்க்குப்
பிரிவிலா வமரர் கூடிப் பெருந்தகைப் பிரானென் றேத்தும்
அரியலாற் றேவி யில்லை யையனை யாறனார்க்கே537

எனவும் வரும் பூர்வாசாரியர்கள் திருவாணைக் கென்ன விடை கொடுக்கக்(கூடும்)? பூர்வாசாரியர்கள் (இங்ஙனம்) அப்பிரம விஷ்ணுகளுக்குச் சிவசத்தியெனத் தெய்வத் தன்மை தரிப்ப(து காண்க).

அல்லதூஉம், கிரியார்ச்சனையிற் சத்தகுரு பூசையிலும் பிராசாத்திகம் ஆதாராதிதெய்வம் நிவர்த்தியாதி அதிதெய்வம் பூதாதிதெய்வம் புவனாதிதெய்வம் கிருத்தியாதி தெய்வம் நவவடிவம் கூறியவற்றுள்ளும் பிறவாற்றானும் பிரம விஷ்ணுக்களைச் சிறப்பித்துத் தியானிக்கவும் பூசிக்கவுமாகக் கட்டளையிட்டபின், அவர்களைக் கிருமிக்கு ஒத்த கீழுயிர் என்று கூறுவது ஆமோ? அல்லதூஉம், சேரமான் பெருமாள் பொன் வண்ணத் தந்தாதியுள்

536. ஔவை குறள், வீட்டு நெறிப்பால், எ.
537. "எரியலால் உருவமில்லை" என்னும் திருஐயாற்றுத்திருநேரிசை.

இடமால் வலந்தா னிடப்பால் துழாய்வலப் பாலொண்கொன்றை
வடமா லிடந்துகி லேல்வல மாழி யிடம்வலமான்
இடமால் கரிதால் வலஞ்சே திவனுக் கெழினஞ்சேர்
குடமா லிடம்வலங் கொக்கரை யாமெங்கள் கூத்தனுக்கே 538

எனவும், ஆளுடையவரசுகள

வடிவுகொண்டார் திலங்குமழு வலங்கைக் கொண்டார்
மாலையிடப் பாகத்தே மருவக் கொண்டார் 539

எனவும் கூறியதற்கேற்ப, வைஷ்ணவத்துள்ளும் பேயாழ்வார் அருளிச்செய்த ௯-வது திருவந்தாதியுள்ளும்

தாழ்சடையு நீண்முடியு மொண்மழுவுஞ் சக்கரமுஞ்
சூழரவும் பொன்னாணுந் தோன்றுமால்—சூழுந்
திரண்டருவி பாயும் திருமலைமே லெந்தைக்
கிரண்டுருவு மொன்றா யிசைந்து

என்று ஒத்துக்கூறியிருத்தலாலும், விஷ்ணுவைக் கீடத்தோ டொப்பக் கூறு(வது பொருந்துமோ)?
ஆயின்

அறுவகைச் சமயத் தறுவகை யோர்க்கும்
வீடுபேறாய் நின்ற விண்ணோர் பகுதி
கீடம் புரையும் கிழவோன் 540

என்று திருவாசகம் கூறியருளிற்றாலோ எனின், ஆன்மாக்கட்கு மலந் தொலைப்பிக்கு முபாயமும் சிவத்தியல் விளக்குமுகமாகவும் கூறியதன்றி வேறன்று. இக்கருத்தை விரிப்பிற் பெருகுமாதலின் குருமுகத்தாலுணர்க.

---

538. ௬ - வது பாட்டு
539. "முடிகொண்டார்" என்னும் தனித் திருத்தாண்டகம்.
540. திருவண்டப் பகுதி.

உ

திருச்சிற்றம்பலம்

# ஒழிவி லொடுக்கம்

சீகாழி
திருஞானசம்பந்த சுவாமிகள்
திருவருள்பெற்ற
கண்ணுடைய வள்ளல்
திருவாய் மலர்ந் தருளிச் செய்தது.

இஃது
திருப்போரூர்ச்
சிதம்பர சுவாமிகளால்
அருளிச்செய்த உரையுடன்

சிதம்பரம்
இராமலிங்க பிள்ளை யவர்களால்
பார்வையிடப்பட்டு

மண்ணிப்பாக்கம்
சபாபதி முதலியாரவர்களால்
முத்தமிழ் விளக்க அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.
விரோதிகிருது௵ ஐப்பசி௴
முதல் பதிப்பு

இஃது
சிந்தாத்திரிப்பேட்டை
அண்ணாமலை முதலியாரால்
அச்சடிக்கப்பட்டது

இஃது

காஞ்சிபுரம்-மாசிலாமணி முதலியா ரவர்களால்

இயற்றப்பட்டது.

### விருத்தம்

வஞ்சியர்மா மோகமுறு மாதவத்தோர் புகழ ... *
மாதேவ னருள்விளங்கி வளருநிதிப் புதைபோல் ... *
விஞ்சியசம் பந்தனடித் துணையுளங்கொள் வள்ளல் ... *
விளம்பியரு ளொழிவிலொடுக் கப்பெயர்கொண் முறையு *
மஞ்சனம்போற் றிருப்போரூர்ச் சிதம்பரமா முனிவ ... *
ரருள்புரிந்த வதனுரையு மறிஞரிறைய் வித்துத் ... *
தஞ்சமுறு முலகுணர்வா னச்சிலியை வித்தான் ... *
றகுமண்ணிப் பாக்கமகிழ் சபாபதிபூ பதியே ... *

---

541. 21-ம் அடிக்குறிப்பு பார்க்க.

# 5. தொண்டமண்டல சதகம் முதற்பதிப்பின் தலைப்பு முதலியன[542]

உ

சிவமயம்

# தொண்டமண்டல சதகம்



இஃது

படிக்காசு புலவரால்

இயற்றப்பட்டது.



௧அ௫சவரு ஜனவரிமீ

ம-ா-ா- கனம்பொருந்திய

தொண்டமண்டலம்

துளுவவேளாளர்களேற்படுத்திய

இயற்றமிழ்ப் போதகசாலை

இரட்சகர்த்தராகிய



கொண்ணூர்

ஐயாசாமி முதலியாரவர்கள்

கேட்டுக்கொண்டபடி



சிதம்பரம்

இராமலிங்க பிள்ளையவர்களாற்

பரிசோதிக்கப்பட்டு

இந்து பிரஸென்னும் அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

இராட்சசவரு மார்கழிமீ

இத்தொண்டமண்டலசதகஞ் செய்த புலவர் செங்குந்த மரபிற்றோன் றிச்சிவானுக்கிரகத்தால்- தமிழ்க்கலை முழுதும்பயின்று தெய்வீகம் விளங்கிய நல்வாக்கினைப் பெற்று சிதம்பரத்தில் - நடேசர் பொன்பணம் ஐந்து - பஞ்சாட்சரப் படியில் - வைத்தருளக் கொண்டு - அதனாற் படிக்காசு புலவரென்று பெயர் பெற்றவர்.

இந்தப் புத்தகம் வேண்டியவர்கள் சென்னபட்டணம் பெத்துநாயகன்பேட்டை மூல்லாதெருவில் - இயற்றமிழ்ப் போதகசாலை ஆமாத்தியர்களி லொருவராகிய - சென்னப்ப நாயகன் குப்பம் பாலசுப்பிரமண்ணிய முதலியாரிடத்தில் விலைகொடாமற் பெற்றுக்கொள்ளலாம். புறதேயத்தி லுள்ளவர்கள் - கடித மூலமாய் ஊர்ப்பெயரும் - நாமதேயமும் - விபரமாகத் தெரிவித்தாற் கொடுத்தனுப்பப்படும் - தபால் - செலவு தாங்களே கொடுத்து வாங்கிக் கொள்ள வேண்டியது.

---

542. 291 வது அடிக்குறிப்பு பார்க்க. தொண்டமண்டல சதகம் முதற்பதிப்பைப்பற்றிய அரிய சாற்றுக்கவிகளுக்கு அடுத்த பக்கங்கள் பார்க்க.

உ

சுப்பிரமண்ணியர் துணை.

# சாற்றுக்கவிகள்

மஹா-ள-ள-ஸ்ரீ - காஞ்சீபுரம் வித்வான்

சபாபதி முதலியாரவர்களியற்றிய

## அகவல்

சீர்வளர் மேருத் தென்பாற் றிசையில்
பேர்வளர் நாவற் பெருந்தீ வத்தொளிர்
தொண்டநன் னாட்டுவாழ் துளுவவே ளாளர்
கண்ட முத்தமிழ்க் கல்விச் சாலைப்
பாலனத் தலைமை பரித்துள வள்ளல்
கோல மிகுத்த கொன்றையம் பதிமால்
உமைகா நதிகுலொத் துங்கன் சைவத்
தமைவுறு மன்ப னலர்குவ ளைத்தார்
மார்பன் முத்தைய வரோதயன் றேனு
கார்தரு நிகர்கொடைக் காவல னுவலர்
பொய்யா மொழியார் புகழ்தமி ழாகரன்
அய்யா சாமிவே ளகத்து விருப்பம்
மருவுறத் தொண்ட மண்டலத் திலக்கணை
வரிவடி வத்து வரையா வண்ணம்
அரிறப நாடி யமைத்தனன் பலகலை
தெரிதரு முணர்ச்சியன் சிவனருள் புனையும்
மாறுற வன்பன் மனமா சகன்றோன்
தேறுவாருளத்துத் திகழ்ந்தயன் முதலோர்
தெரிதற் கரிய சிதம்பர நகரிற்
பரிவுறு புலமைப் பண்பன்
இராம லிங்க மெனும்பெய ரோனே.

---

ம-ா-ா-ஸ்ரீ புதுவை-சுப்பராய முதலியாரவர்க ளியற்றிய

விருத்தம்

தொண்டமண் டலத்தைத் தொண்டைமண் டலமாச்
சொலுமவர் புறங்கொடுத் திரியத்
தண்டமி ழியலின் விரித்துரை விளங்கத்
தந்தன னலகில்வே தாந்தத்
தெண்டிரை யறிவாம் பஃறியாற் கடந்து
சித்தமைம் பொறிசெலா தடக்கும்
அண்டரும் புகழ மிராமலிங் கப்பே
ரற்புத ஞானதே சிகனே.

---

ம-ா-ா-ஸ்ரீ புரசை-அஷ்டாவதானம்

சபாபதி முதலியாரவர்க ளியற்றிய

நேரிசை ஆசிரியப்பா

மாமணி துதைந்த காமரு நெடுங்கடற்
றானை யுடுத்த மாநில வரைப்பிடை
யேழனுண் மேதகச் சூழு நாவலந்
தீவிற் சொழிதமிழ் மேவுநன் னாட்டில்
வான்றோய் புகழுறூஉஞ் சான்றோ ருடைத்தென
'வவ்வைமூ தாட்டி யாய்ந்துமுற் பணித்த
வெவ்வளங் கட்கு மிருக்கையென் னிலைஇ
மன்னிய தொண்ட மண்டல சதகம்
பன்னிய பெருஞ்சீர்ப் படிக்கா சுப்பெயர்க்
கவிஞன் சொற்றதன் கவினெலா மெளிதிற்
புவியுளோ நுணர்வான் பூத்தகங் கனிவு
வளனுத வுறுபுகழ்த் துளுவவே ளாளர்
நீங்கரு நலனெலா மோங்கிய சென்னையின்
மேதக வமைத்த கோதி லியற்றமிழ்ப்

போதக சாலை புரக்கும் புரவலன்
மாங்குயின் மடவார் தேங்குயிற் றிரளைக்
கற்பா னரும்பும் பொற்பார் செங்கிறத்
தடந்தளிர் பொதுளிய நெடுந்தழை யெகின்மிசை
மேவாப் பலகாற் கூவாப் பயில்வுறு
மன்றலந் தண்டலைக் கொன்றையம் பதியின
னதிகுலந் தருமுத் தைய நரபதி
சதுர்பெறு தனையன் றண்குவ ளைத்தா
ரணிமலை மார்பகத் தையா சாமிமா
றருகே னுகமந் சாற்றுநாற் பாத
மிருமையுந் தருமவை யியலுற வுருற்றுநர்க்
கொருபெருந் தலையா யுயர்தரு சிதம்பர
மநுவுமா நந்த வல்லி களித்த
நிராமயற் பாவு மிராமலிங் கப்பெயர்ப்
புலமையோ னன்று புரிந்துளங் கொள்ளுபு
தொலைவற நெடிது சொற்பொரு ளுக்கி
வழுவா வியலின் வனைந்தின்
டெழுதா வெழுத்திலிட் டினிதுநல் கினனே.

---

ம-ா-ா-ஸ்ரீ விருத்தாசலம்

தியாகராஜ கவிராஜரவர்க ளியற்றிய

அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

கலைநிலையுங் கலையுணரும் புலவர்நிலை கண்டான்
கவிநிலைகண் டான்றமிழின் கடற்கரையைக் கண்டான்
சிலையெனவா டகச்சிலம்பைச் சிலைத்திடவே வாங்கிச்
சிலைத்தொருமுப் புரவலியைச் சிரித்தெழுந்த நாதன்
றலையெனவோர்ந் தன்னேன்றன் றிருப்பதத்தில்விருப்புஞ்
சத்தியமாண் பொறைஞானந் ததுராம லிங்க
நிலவியநா வலன்றெண்ட மண்டலமென் றேபேர்
நிறுவினன் புநிதரெலா நிச்சயங்கொள் வாரே.

---

## 6. கல்வெட்டுகளின் விவரம்[543]

தொண்டமண்டலம் என்றே கீழ்க்கண்ட கல்வெட்டுகளில் காணப்படுகிறது.

### தமிழ் சம்ஸ்கிருத கல்வெட்டுகள்[544]

பக்கம் :—

| | | | |
|---|---|---|---|
| 82 | 102 | 140 | 145 |
| 85 | 104 | 141 | 146 |
| 91 | 120 | 142 | 147 |
| 94 | 130 | 143 | 149 |
| 99 | 131 | 144 | 151 |

543. 298-வது அடிக்குறிப்பு பார்க்க.

544. Tamil & Sanscrit Inscriptions (Edited 1886.)

## 7. சின்மய தீபிகை முதற்பதிப்பின் தலைப்பு[545].

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சின்மய தீபிகை



சிதம்பரம்

இராமலிங்க பிள்ளை

அவர்களால்

பார்வையிடப்பட்டு

மண்ணிப்பாக்கம்

சபாபதி முதலியார்

பாக்குப்பேட்டை

மதுரை முதலியார்

இவ்விருவர்களால்

முத்தமிழ் விளக்க அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

பிங்களஸு—கார்த்திகைமீ

முதற்பதிப்பு

545. 481-வது அடிக்குறிப்பு பார்க்க.

